DONATED BY
Chakravarthi Srinivasa Chariar, Sons
133, BIG STREET,
KUMBAKONAM.

40168
1988

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

பெரியாழ்வார்

திருவாய்மலர்ந்தருளிய

# திருப்பல்லாண்டுமூலமும்,

பரமகாருணிகரான

பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்த

**வ்யாக்யாநமும்,**

இதற்குப்பூர்வர்களருளிச்செய்த

T. 8592

**அரும்பதமும்,**

பாசுரங்களுக்குப் பதவுரையும் தாத்பர்யமும்

**ப்ரமாணத்திரட்டும்,**

ஸ்ரீமத்-உ. வே.

திருமலை-நல்லான்-சக்ரவர்த்தி

**க்ருஷ்ணமாசார்யஸ்வாமிகளால்**

பரிசோதிக்கப்பட்டு

ஸ்ரீமத்-உ. வே. செஞ்சி-திருமலைநல்லான் சக்ரவர்த்தி

சேஷாத்ரியாசார்யஸ்வாமிகளின்திருவடி ஸம்பந்தியாகிய

செஞ்சி-இல்வீடு

**அரங்கசாமிமுதலியாரவர்களாலும்**

அவரது குமாரர்

**செ - இ - திருவேங்கடமுதலியாராலும்,**

சென்னை

**ஸ்ரீநிகேதன அச்சுக்கூடத்தில்**

பதிப்பிக்கப்பட்டது.

1895.

விலை அணா 12.

இந்த க்ரந்தம் வேண்டுமவர்கள் சென்னை பெத்துநாயக்கன் பேட்டை செஞ்சி-இல்வீடு அரங்கசாமிமுதலியாரிடத்திலும், அவரது குமாரர் செ-இ-திருவேங்கடமுதலியாரிடத்திலும் க்ரயத்துக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

இன்னும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய க்ரந்தங்களும் பெற்றுக் கொள்ளலாம்.

O22:4|7:c1
DO



    

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌯 𑌨𑌮𑌃.

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃.

# தனியன்கள்.

𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌭𑍂𑌷𑌣𑌂।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌦𑍇𑌶𑌿𑌕𑌂॥

ராமாநுஜதயாபாத்ரம்ஜ்ஞாநவைராக்யபூஷணம்|
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம்வந்தேவேதாந்ததேஶிகம்||

(இதனது பதப்பொருள்.)

ராமாநுஜ - ஆத்ரேயராமாநுஜசார்யரென்று சொல்லப்பட்ட அப்புள்ளாருடைய, தயா - தயைக்கு, பாத்ரம்-பாத்ரபூதரும், ஜ்ஞாநவைராக்யம்-ஜ்ஞாநவைராக்யங்களை, பூஷணம் - ஆபரணமாகவுடையவரும், ஸ்ரீமத்வேங்கடநாதார்யம்-ஸ்ரீமத்வேங்கடநாதாசார்யரென்னுந் திருநாமத்தை யுடையவருமாகிய, வேதாந்ததேசிகம் - வேதாந்ததேசிகரை, வந்தே - வணங்குகிறேன்—எ-று. (க)

(இதனது தாத்பர்யம்.)

ஆத்ரேயராமாநுஜாசார்யரென்று சொல்லப்பட்ட அப்புள்ளாருடைய தயைக்குப் பாத்ரபூதரும், ஜ்ஞாநவைராக்யங்களை பூஷணமாகவுடையவரும், ஸ்ரீமத்வேங்கடநாதாசார்யரென்னுந் திருநாமத்தை யுடையவருமாகிய வேதாந்ததேசிகரை வணங்குகிறேன் என்பதாம்.

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌂।
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌂॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம்நாதயாமுநமத்யமாம்|
அஸ்மதாசார்யபர்யந்தாம்வந்தேகுருபரம்பராம்||

(இ-ள்.) லக்ஷ்மீநாத - ஸ்ரீமஹாலக்ஷ்மீநாயகனை, ஸமாரம்பாம் - ப்ராரம்பத்திலும், நாத - ஸ்ரீமந்நாதமுநிகளையும், யாமுந - ஸ்ரீயாளவந்தாரையும், மத்யமாம் - மத்யமத்திலும், அஸ்மத்-என்னுடைய, ஆசார்ய - ஆசார்யனை, பர்யந்தாம் - அந்தத்திலுமுடைய, குருபரம்பராம் - குருபரம்பரையை. வந்தே-ஸேவிக்கிறேன்—எ-று. (உ)

(தா-ம்.) ஸ்ரீமந்நாராயணனை ஆதியிலும், ஸ்ரீமந்நாதமுநிகளையும் ஸ்ரீயாளவந்தாரையும் மத்யமத்திலும், எனது ஆசார்யனை அந்தத்திலும் உடைய குருபரம்பரையை வணங்குகிறேன் என்பதாம்.

𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணித்ருணாயமேநே|
அஸ்மத்குரோர்பகவதோஸ்யதயைகஸிந்தோ
ராமாநுஜஸ்யசரணௌசரணம்ப்ரபத்யே||

(இ-ள்.) யஃ-எந்தபாஷ்யகாரர், நித்யம் - நிரந்தரம், அச்யுத-நாசரஹிதனுகிய ஸ்ரீயஃபதியினுடைய, பதாம்புஜயுக்ம - பாதாரவிந்த த்வயமாகிய, ருக்ம-ஸுவர்ணத்தினிடத்தில், வ்யாமோஹதஃ - விசேஷாதரத்தை யடைந்திருக்கிறவராய், ததிதராணி - அந்த பகவத்பாதத்வயத்துக்கு வ்யதிரிக்தமாகியவிஷயங்களை, த்ருணாய - த்ருணப்ராயமாய், மேநே - நினைத்தாரோ, அஸ்மத்குரோஃ - அப்படிப்பட்ட என்னுடைய ஆசார்யரும், பகவதஃ - பூஜ்யரும், தயைகஸிந்தோஃ - காருண்யரத்நாகரருமாகிய, அஸ்ய - இந்த, ராமாநுஜஸ்ய - ராமாநுஜாசார்யருடைய, சரணௌ - திருவடிகளை, சரணம் - ரக்ஷகமாய், ப்ரபத்யே - ஆச்ரயிக்கிறேன்—எ-று. (ரு)

(தா-ம்.) எந்தராமாநுஜர் நிரந்தரமும் ஸ்ரீமந்நாராயணனுடைய இரண்டு திருவடிகளில் மிகுந்த அன்புள்ளவராய், வேறுவிஷயங்களை த்ருணத்துக்கொப்பாக நினைத்தாரோ, அப்படிப்பட்ட எனது ஆசார்யரும், பூஜிக்கத்தக்கவரும், க்ருபாஸமுத்ரம்போன்றவருமாகிய இந்தராமாநுஜருடைய திருவடிகளை ரக்ஷகமாகஆச்ரயிக்கிறேன் என்பதாம்.

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 ।
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌲𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌲𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதி
ஸ்ஸர்வம்யதேவநியமேநமதந்வயாநாம்|
ஆத்யஸ்யநஃகுலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நா||

(இ-ள்.) மாதாபிதா - தாய்தந்தைகள், யுவதயஃ-யௌவநஸ்திரீகள், தநயாஃ-புத்ரர்கள், விபூதிஃ - ஐஸ்வர்யம், ஸர்வம் - ஸமஸ்தமும், மதந்வயாநாம் - என்வம்சத்தாருக்கு, நியமேந-நியமத்தினுல், யதேவ - எந்தஆழ்வாருடையதிருவடிகள் ஆகின்றனவோ, ஆத்யஸ்ய - முதல்வராகிய, நஃ-என்டைய, குலபதேஃ - ப்ரபந்நஜநகூடஸ்தராகியசடகோபருடைய, வகுளா

பிராமம் - மகிழுமலர்களால்மனோஹாரமாகிய, ஸ்ரீமத்-தேஜஸ்ஸோடுகூடிய, ததங்க்ரியுகளம் - அந்தபாதத்வந்த்வத்தை, மூர்த்நா-சிரஸ்ஸினாலே, ப்ரண மாமி - ஸேவிக்கிறேன்—எ-று. (௪)

(தா-ம்.) தாய்தந்தைகள் யௌவநஸ்த்ரீகள் புத்ரர்கள் ஐஶ்வர்யங்கள் ஆகிய எல்லாம் என்வம்சத்தாருக்கு நியமத்தினால் எந்த ஆழ்வாருடைய திருவடிகள் ஆகின்றனவோ, அந்தமுதல்வராகிய என்னுடைய ப்ரபந்நஜநகூடஸ்தராகிய சடகோபருடைய, மகிழ மலர்களால் அலங்க்ருதமாய் தேஜஸ்ஸோடு விளங்குகிற, இரண்டு திருவடிகளையும் ஸிரஸ்ஸாலே வணங்குகிறேன் என்பதாம்.

𑌭𑍂𑌤𑌂𑌸𑌰𑌶𑍍𑌚𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍|
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁𑌪𑌰𑌕𑌾𑌲𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍||

பூதம்ஸ்ரஶ்சமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலசேகரயோகிவாஹாந்|
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம்ப்ரணதோஸ்மிநித்யம்||

(இ-ள்.) பூதம் - பூதத்தாழ்வாரையும், ஸரஶ்ச-ஸரஸ்ஸில்அவதரித்த பொய்கையாழ்வாரையும், மஹதாஹ்வய - பேயாழ்வாரையும், பட்டநாத-பெரியாழ்வாரையும், ஸ்ரீபக்திஸார - திருமழிசையாழ்வாரையும், குலசேகர-குலசேகராழ்வாரையும், யோகிவாஹாந் - திருப்பாணாழ்வாரையும், பக்தாங்க்ரிரேணு - தொண்டரடிப் பொடியாழ்வாரையும், பரகால - திருமங்கையாழ்வாரையும், யதீந்த்ரமிஶ்ராந் - பூஜ்யராகியயதிராஜரையும், ஸ்ரீமத்-கைங்கர்யயுக்தராகிய, பராங்குஶமுநிம் - நம்மாழ்வாரையும், நித்யம்-நிரந்தரமும், ப்ரணதஃ-ஸேவித்தவன், அஸ்மி-ஆனேன்—எ-று. (௫)

(தா-ம்.) பூதத்தாழ்வாரையும், பொய்கையாழ்வாரையும், பேயாழ்வாரையும், பெரியாழ்வாரையும், திருமழிசையாழ்வாரையும், குலசேகராழ்வாரையும், திருப்பாணாழ்வாரையும், தொண்டரடிப்பொடியாழ்வாரையும், திருமங்கையாழ்வாரையும், யதிராஜரையும், நம்மாழ்வாரையும், நிரந்தரமும் சேவித்தவன் ஆனேன் என்பதாம்.

சக்கிரவர்த்தி. வெ. ஸ்ரீநிவாஸாசாரியர்.

---

தேதி........................
49, பெரிய தெரு
கும்பகோணம்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

ஸ்ரீவரவரமுநயேநம:.

## பெரியாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

# திருப்பல்லாண்டு.

### தனியன்கள்.

𑌗𑍁𑌰𑍁𑌮𑍁𑌖𑌮𑌨𑌧𑍀𑌤𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌹 𑌵𑍇𑌦𑌾𑌨𑌶𑍇𑌷𑌾𑌨𑍍
𑌨𑌰𑌪𑌤𑌿𑌪𑌰𑌿𑌕𑍢𑌪𑍍𑌤𑌂 𑌶𑍁𑌲𑍍𑌕𑌮𑌾𑌦𑌾𑌤𑍁𑌕𑌾𑌮𑌃 |
𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌮𑌮𑌰𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑌂 𑌰𑌙𑍍𑌗𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍
𑌦𑍍𑌵𑌿𑌜𑌕𑍁𑌲𑌤𑌿𑌲𑌕𑌂 𑌤𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 ||

குருமுகமநதீத்யப்ராஹவேதாநசேஷாந்
நரபதிபரிக்லிப்தம்சுல்கமாதாதுகாம:|
ஶ்வசுரமமரவந்த்யம்ரங்கநாதஸ்யஸாக்ஷாத்
த்விஜகுலதிலகந்தம்விஷ்ணுசித்தம்நமாமி||

(இதனதுபதப்பொருள்.)

ய: - எந்தப்பெரியாழ்வார், நரபதி - ஸ்ரீவல்லபதேவனென்கிறராஜனுல், பரிக்லிப்தம் - ஏற்படுத்தப்பட்ட, சுல்கம் - வித்யாசுல்கத்தை, ஆதாதுகாம: - க்ரஹிப்பதற்கு ஆசையுள்ளவராய், குருமுகம் - ஆசார்யமுகத்தால், அநதீத்ய - அப்யஸிக்காமலே, அஶேஷாந் - ஸமஸ்தமாகிய, வேதாந்-வேதங்களை, ப்ராஹ - உபந்யஸித்தாரோ, ரங்கநாதஸ்ய - ஸ்ரீரங்காதிபனுக்கு, ஸாக்ஷாத் - ப்ரத்யக்ஷமாய், ஶ்வசுரம் - மாமனாரும், அமர-தேவதைகளால், வந்த்யம் - ஸ்தோத்ரம்செய்தற்குத்தக்கவரும், த்விஜகுல- ப்ராஹ்மணவம்சத்துக்கு, திலகம் - அலங்காரபூதருமாகிய, தம்விஷ்ணுசித்தம்-அந்தப்பெரியாழ்வாரை, நமாமி-ஸேவிக்கிறேன்—எ-று. (க)

(இதனதுதாத்பர்யம்.)

எந்தப் பெரியாழ்வார் ஸ்ரீவல்லப தேவனென்கிற அரசனுலேற்படுத்தப்பட்ட வித்யாசுல்கத்தை க்ரஹிப்பதற்கு ஆசையுள்ளவராய், ஆசார்யமுகத்தால் அப்யஸிக்காமலே ஸமஸ்தவேதங்களை உபந்யஸித்தாரோ, ஸ்ரீரங்காதிபனுக்கு மாமனாரும்; தேவர்கள் வந்திக்கத்தக்கவரும், ப்ராஹ்மணவம்சத்துக்கு அலங்காரபூதருமாகிய அந்தப்பெரியாழ்வாரை ஸேவிக்கிறேன் என்பதாம்.

அவதாரிகை—இதுதான் திருப்பல்லாண்டுக் தனியனுயிருக்கும். அந்தத் திருப்பல்லாண்டு பாடுகைக்கடியான பெரியாழ்வார் வைபவத்தைப் பெருக்கப்பேசி, அவரை ப்ரணிபாத நமஸ்காரம் பண்ணும்படி சொல்லுகிறது.

வ்யாக்யாநம்—([illegible]-குருமுகமநதீத்ய) (க) [illegible]தஸ் ஸர்வஜ்ஞனஸர்வேச்வரனும், "[illegible]-ஸாந்தீபநேஸ்ஸக்ருத்ப்ரோக்தம் ப்ரஹ்மவித்யாஸவிஸ்தரம்" என்னும்படி - ஸாந்தீபநியிடத்திலே யாய்த்து ஸகலவேதங்களையும் (உ) அதிகரித்தது. இவர், அங்ஙன் ஒருகுருகுலவாஸம்பண்ணி (ங) தந்முகேந * நலங்களாய நற்கலைகள் நாலையும் (ச) அதிகரியாதே, புண்டரீகரைப்போலே * துளவத்தொண்டிலே மண்டி, ஸ்ரீமாலாகாரரைப்போலே * சூட்டுநன்மாலைகளைத் தொடுத்து, வடபெருங்கோயி லுடையானுக்குச் சூட்டி அடிமைசெய்துபோந்தார்; ஏவம்விததாஸ்யரஸஜ்ஞரான விவர், ([illegible] - நரபதிபரிக்ஷிப்தம் [illegible]மாதாதுகாம:) என்று ஸ்ரீவல்லபதேவனென்கிற ராஜாவாலே பரதத்த்வநிர்ணய பூர்வகமாக புருஷார்த்தலாபத்தை லபிக்கைக்காக அநேகமான (ரு) அர்த்தத்தை வித்யாசுல்கமாகக் கல்பித்துக் கல்தோரணத்திலே கட்டிவைக்க, இப்படி நிர்மிதமான அந்த தநத்தை வடபெருங்கோயிலுடையானுடைய ஆஜ்ஞையாலே ஆஹரித்துக்கொண்டு வரவேணுமென்கிற அபேக்ஷையையுடையராய், வித்வித்கோஷ்டியிலே சென்று; ([illegible] - [illegible]-அசேஷாந் - வேதாந்-ப்ராஹ) "வேண்டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்" என்றத்தைச் சொல்லுகிறது. இவர்க்கு அப்போது * வேதப்பிரானரான * பீதகவாடைப் பிரானார்தாமே பிரமகுருவாய், * போதில்கமல வன்னெஞ்சம் புகுந்து * நாவினுளானாய் * நாவினுள் நின்று மலரும் ஞானக்கலைகளை இவர்முகேந பேசுவித்தானிறே. * எயிற்றிடை மண்கொண்ட வெந்தையான * ஞானப்பிரானாய்த்து இவரை * ஞானக்கலைகளை யோதுவித்தது. ஆகையாலே நாட்டார்க்கு ஓதினவிடமொழிந்து ஓதாதவிடம் தெரியாதிருக்கும். இவர்க்கு * மயர்வறமதிநலமருளுகையாலே அசேஷவேதங்களு மருளிச்செய்யும்படி விசதமாய்த்து. அத்தாலே "வேதாந்த விழுப்பொருளின்மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தன" என்னும்படி பரதத்த்வ ஸ்தாபநம்பண்ணி அந்த வேததாத்பர்யமான திருப்பல்லாண்டை * அங்கானைமேல் மங்கலவீதி வருகையிலே மங்களாசாஸநமாக வருளிச்செய்தார். "[illegible]-வேதாநசேஷாந்" என்கிறதுக்குள்ளே இதுவும் அந்தர்ப்பூதம். "[illegible] - வேதைஶ்சஸர்வை ரஹமேவவேத்ய:" என்னக்கடவதிறே.

([illegible] - ஶ்வஸுரம்) அநந்தரம், வித்வான்களை வென்று கிழியறுத்து அந்த தநத்தை ஸ்வாமிஸந்நிதியிலே ஸமர்ப்பித்து, மீளவும் தம் துறையான * துளவத்தொண்டிலே மூண்டு நடத்திக்கொண்டு போர; அக்காலத்திலே ஆண்டாள் இவர்க்குத் திருமகளாகத் திருத்துழாயடியிலே

---

(க) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞன் - எல்லாவற்றையும் தானேயறிந்தவன். (உ) அதிகரித்தல் - ஓதுதல். (ங) தந்முகேந - அவ்வழியாலே. (ச) அதிகரியாது - கற்காமல். (ரு) அர்த்தம் - பணம்.

வதரிக்க ; இவரும் * திருமகள்போல வளர்த்துப்போர ; அஞ்சுபிராயத்திலே திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியில் பெண்களை அநுகரித்துத் திருப்பாவைபாடி, அதுக்குமேலே, அவர் * தொடுத்த துழாய்மலரை, "வியன் துழாய்க்கற்பென்றுசூடும் கருங்குழல்மேல்" என்கிறபடியேசூடிக் கொடுத்தவராய், பின்பு ப்ராப்தயௌவனையாய், * மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழாததன்மையளாய், "தீமுகத்து நாகணைமேற் சேருந் திருவரங்கர்" என்றும், "பணவாளரவணைப் பற்பலகாலமும் பள்ளிகொள் மணவாளர்" என்றும் சொல்லப்படுகிற அழகிய மணவாளப்பெருமாளை ப்ரார்த்தித்துத் திருமணம் புணருகையாலே அவர் மணவாளப்பிள்ளையானார் ; * மறைநான்கு முன்னோதிய பட்டனுக்கிறே * பட்டர்பிரான் கோதையைக்கொடுத்தது. ஆகையாலே, ஔபசாரிகமாகவன்றிக்கே, யதாவாக ரங்கநாதனுக்கு பட்டநாதர் மாமனாரானார். அத்தாலே (ஊோவஹு)- அமரவந்த்யம்) என்கிறது. அதாவது - * வடிவுடைவானோர் தலைவனை தம்மை, அவர்கள் அடிவணங்கி யேத்துமாப்போலே, இவர் தம்மையும் அமரர் வந்திக்கும்படியான வரிசை கொடுத்தபடி. * தம்மையே யொக்க வருள் செய்வரிறே. பட்டநாதரான மாத்ரமன்றிக்கே, தேவர்களாலும் ஸ்துத்யராயிருக்குமவரென்கிறது. "விரும்புவ ரமரர்மொய்த்து" என்னக்கடவதிறே. அஸ்தாநேபய சங்கிகளானவர்களையும் இவர் மங்களாசாஸநம் பண்ணுமவராகையாலே, அவர்களும் இவர்க்கு ஸ்துத்யபிவாதநங்களைப் பண்ணுவர்கள். "வராஹ நீவஹாவெ: - பரஸ்பரநீசபாவை:" என்னக்கடவதிறே. இனி ரங்கநாதனோடே ஸம்பந்திக்கைக்கீடான பட்டநாதகுலத்தைச்சொல்லுகிறது. (த்விஜகுலதிலகம்- த்விஜகுலதிலகம்) என்று * வேயர்தங்கள்குலத்துதித்த விட்டுசித்தராகையாலே, "அந்தணனையான்கண்டதணிநீர்த்தென்னரங்கத்தே" என்னும்படி கண்டு கொடுத்தார். த்விஜகுலதிலகராகையாவது - ப்ராஹ்மண குலத்துக்கெல்லாம் முக்யராய், சிரஸா வாஹ்யராய், ஶ்ரேஷ்டராயிருக்கையென்றபடி. (தம்விஷ்ணுசித்தம்- தம்விஷ்ணுசித்தம்) அப்படி ஶ்ரேஷ்டராய், விஷ்ணுவை எப்போதும் சித்தத்திலே யுடையரானவரை யென்கிறது. "வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர் விட்டுசித்தன் விரும்பியசொல்" என்று - அடியிலே தமக்கு நிரூபகமாக ஆழ்வார் தாமே யருளிச்செய்தாரிறே. "விட்டுசித்தர்" என்கையாலே, "மின்னுநூல் விட்டுசித்தன்விரித்த" என்று-பெரியாழ்வார் திருமொழியடியிலும், "விட்டுசித்தன்மனத்தே கோயில்கொண்டகோவலனை" என்று - முடிவிலுமருளிச்செய்கையால், இந்தத் திருநாமத்தாலே அந்த ப்ரபந்த ப்ரவக்தாவென்னுமதுவும் ஸூசிதம். அதுக்கும் தனியன் இதுவேயிறே. "அநந்தன்பாலும் கருடன்பாலும் ஐதுநொய்தாகவைத்து என் மனந்தனுள்ளேவந்துவைகி வாழச்செய்தாயெம்பிரான்" என்னும்படி-இவர் திருவுள்ளத்திலே அத்யபிநிவிஷ்டனாயிருக்குமாய்த்து. (விஷ்ணுசித்தம் - விஷ்ணுசித்தம்) * விஷ்ணுநாவ்யபதேஷ்டவ்யராயிருக்கிறபடி. "நின்கோயிலில்வாழும் வைட்டணவன்" என்றாரிறே. அவனும் வைஷ்ணவ ஸம்பந்தத்தை

(க) அபேக்ஷித்துக் கைப்பற்றினன் (-விஷ்ணுசித்தம் - தம்விஷ்ணு சித்தம்நமாமி) அந்த விஷ்ணுசித்தனை "கிழியறுத்தான்பாதங்கள் யாமுடையபற்று" என்னும்படி ஸேவிக்கிறேனென்கிறது. நமஸ்காரமும் ஸேவையும் பர்யாயம். "ஓம்நமோவிஷ்ணவே - ஓம்நமோவிஷ்ணவே" என்னுமது விஷ்ணுசித்தவிஷயத்திலேயாய்த்து; விசேஷஜ்ஞர்க்கு பகவத்விஷயத்திலே அனாவயிறாய், இங்கேயிறே யெல்லாம் பூர்ணமாவது. * நம்பி விட்டுசித்தரிறே. இத்தால் - ப்ரதம ப்ரபந்தாநுஸந்தாநதசையில் தத்வக்தாவான ஆழ்வாரை "-தம்பூர்வமபிவாதயேத்" என்று ப்ரதமம் திருவடிதொழும்படியைச் சொல்லிற்றாய்த்து.

அ-கை—(மின்னார்தடமதிளித்யாதி) இதில், ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பட்டர்பிரானை பெரியாழ்வா ரவதரணஸ்தலத்தை யநுஸந்திப்பார் திருவடிகளைத் தொழுகையாலுண்டான ப்ரீதியையும், அவர் செயலைச் சொல்லுகையாலுண்டான விரோதி நிவர்த்யாதிகளிலே த்ருப்தியையும மநஸ்ஸோடே சொல்லி யுலாவுகிறதாயிருக்கிறது.

> மின்னார்தடமதிள்சூழ் வில்லிபுத்தூரென்றொருகாற்
> சொன்னார்கழற்கமலஞ்சூடினோம்—முன்னாள்
> கிழியறுத்தானென்றுரைத்தோம் கீழ்மையினிற்சேருமு
> வழியறுத்தோநெஞ்சமே வந்து.

(இ-ள்.) மின்-மின்னுதல்- மணிகளாலொளிவிடுதல், ஆர் - நிறைந்த-அதிகமான, தடம்-அகலப்பரப்பும், உயர்ந்தோங்குகையுமுள்ள, மதிள்-திருமதிளாலே, சூழ்-வளைக்கப்பட்ட, வில்லிபுத்தூர்என்று- ஸ்ரீவில்லிபுத்தூரென்று, ஒருகால்சொன்னார் - ஒருதரம் உச்சரித்தவருடைய, கழற்கமலம்-திருவடித்தாமரைகளை, சூடினோம்- விசேஷபுஷ்பமாகமுடித்தோம், முன்னாள்- புருஷார்த்தம்வெளியாகாதகாலத்தில், கிழி-பொருண்முடிப்பை, அறுத்தானென்று - அறுத்துவெளியிட்டவனென்று, உரைத்தோம் - சொல்லப்பெற்றோம, ஆகையாலே, கீழ்மை-நரகத்திலே, இனி - இனிமேல், சேரும்-முன்போற்செல்லுகிற, வழி-மார்க்கத்தை, அறுத்தோம் - அறப்பண்ணினோம், நெஞ்சமே-மநஸே, வந்து-ஸம்ஸாரரஹிதராய்வந்து—எ-று.(உ)

(தா-ம்.) மநஸே, ரத்நகசிதமான திருமதிள்சூழ்ந்த ஸ்ரீவில்லிபுத்தூரொன்று ஒருதரம் உச்சரித்தவருடைய திருவடிகளை ஸிரஸாவஹித்தோம், வித்யாசுல்கத்தையறுத்துபுருஷார்த்தத்தை வெளியிட்டவனென்று சொல்லப்பெற்றோம், ஆகையால் இனிநரகத்தில் முன்போற்செல்லுகிற மார்க்கத்தைநீக்கினோம் ஸம்ஸாரரஹிதராய்வந்து என்பதாம்.

வ்யா-ம்—(மின்னார்தடமதிள்சூழ்) தேஜஸ்ப்ரசுரமான பெரியமதிளாலே சூழப்பட்ட வில்லிபுத்தூர். இத்தால் - * செம்பொனேய்ந்த மதிளாயிருக்கை. ப்ரதிகூலர்க்குக் கிட்டவொண்ணாதபடியாய், அநுகூலர்க்குக் கண்டு வாழும்படியாயிருக்கை. கல்மதிள்போலே அத்தலைக்கு அரணாய், மங்களாசாஸநபரரான பெரியாழ்வாரிருக்குமூரில் மதிளிறே ; ஏவம்வித மான மதிளாலே சூழப்பட்ட (வில்லிபுத்தூரொன்று ஒருகாற்சொன்னார் கழற்கமலஞ்சூடினோம்) ஒருக்காலாகிலும் ஸ்ரீவில்லிபுத்தூரை உச்சரித்த

---

(க) அபேக்ஷித்து - விரும்பி.

ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாதகமலங்களை * பைங்கமலத்தண் டெரியலாகத் தலையிலே சூடினோம். "கோவிந்தன் றன்னடியார்களாகி யெண்டிசைக்கும் விளக்காகி நிற்பாரிணையடியென் றலைமேலவே" என்றிறே ஆழ்வாரு மருளிச்செய்தது. ஸ்ரீவில்லிபுத்தூர்தான், வடபெருங்கோயிலுடையானுக்கும் ஆழ்வார்க்கும் ஆண்டாளுக்கும் நிரூபகமான தேசமாய்த்து. "வில்லிபுத்தூருறைவான்" "வில்லிபுத்தூர்ப்பட்டர்பிரான்" "அன்னவயல் புதுவையாண்டாள்" "கோதைபிறந்தவூர் - வில்லிபுத்தூர்" என்னக்கடவதிறே. ப்ரணவம்போலே மூவரும் கூடலாயிருக்கை; இப்படி உத்தேஶ்யமான வூரை ஒருக்கால் அநுஸந்திப்பார் எப்போது முத்தேஶ்யராகையாலே, அவர்கள் ஸ்ரீபாதங்கள் ஶிரோபூஷணமாக தார்யமென்கிறது; "அரசமர்ந்தானடிசூடுமரசு" என்னுமாப்போலே. பின்னை விரோதிகள் செய்ததென்னென்னில் (முன்னாள்கிழியறுத்தானென்றுரைத்தோம் கீழ்மையினில்சேரும் வழியறுத்தோம்) முன்னாள் கிழியறுக்கையாவது-முற்காலத்திலே பாண்டியன் வித்யாசுல்கமாகக்கட்டின த்ரவ்யக்கிழியை, அங்கேசென்று, வேதாந்தார்த்தமுகேந "விஷ்ணுவே பரதத்த்வம்" என்று விஷ்ணுசித்தரான தாம் வித்வஜ்ஜநங்களைவென்று த்ரவ்யக்கிழியையறுத்த ஆழ்வாருடைய இந்த (௧) அத்யத்புதகர்மத்தை அநுஸந்தித்தோம்; அத்தாலே (கீழ்மையினில்சேரும் வழியறுத்தோம்) "𑌜𑌨𑍍𑌮 𑌕𑌰𑍍𑌮 𑌚 𑌮𑍇 𑌦𑌿𑌵𑍍𑌯𑌮𑍍 𑌏𑌵𑌂 𑌯𑍋 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑌃 । 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾 𑌦𑍇𑌹𑌂 𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌨𑍍𑌮 𑌨𑍈𑌤𑌿 𑌮𑌾𑌮𑍇𑌤𑌿 𑌸𑍋𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 - ஜந்மகர்மசமேதிவ்யம் ஏவம்யோவேத்திதத்த்வத꞉ - த்யக்த்வா தேஹம்புநர்ஜந்மநேதிமாமேதிஸோர்ஜுந" என்று - க்ர்ஷ்ணவிஷயத்தில் ஜந்மகர்மங்கள் ஜந்மஸம்ஸாரபந்தத்தை யறுக்குமாப்போலேயாய்த்து விஷ்ணுசித்தர் * ஜந்மகர்மங்களும். இங்கும், ஸ்ரீவில்லிபுத்தூர்ஜந்மமும், கிழியறுக்கை கர்மமுமாயிருக்கும். கீழ்மையினில்சேரும் வழியறுக்கையாவது- நிஷித்தகர்த்யத்தாலே ப்ராபிக்கும் ப்ரதிபந்தகமானமார்க்கத்தைச் (௨) சேதித்தோம். [புறநெறிகளைக்கட்டு] அவைதிகமார்க்கத்தையடைகை பாபபலமிறே. "மெய்ம்மைப்பெருவார்த்தை விட்டுசித்தர்கேட்டிருப்பர்" என்று - இவர்தாம் ஸந்மார்க்கவர்த்திகளிறே. அன்றிக்கே, "கீழ்மையினில்சேரும் வழி" என்று-அத꞉பதநத்திலே ப்ராப்தமான மார்க்கமென்று அர்ச்சிராதிமார்க்கத்துக்குக் கீழாய் புநராவ்ர்த்தி லக்ஷண ஹேதுவான (௩) தூமாதிமார்க்கத்ரயத்தையும் நிரோதித்தோம். (நெஞ்சமேவந்து) * நெறிநின்ற நெஞ்சாய், நீ அநுகூலிக்கையாலே இந்த லாபத்தை லபித்தோம். (வந்து) இவ்வளவும் வந்து ;- ஆழ்வாரளவும்வந்து. வில்லிபுத்தூரொன்றொருகால் சொன்னார்கழற்கமலஞ்சூடினோம்; கீழ்மையினிற்சேரும் வழியறுத்தோம்; இதுவன்றோ நீ யநுகூலித்தத்தால் பெற்றபேறு ; நீயென்வழி வருகையாலே இவையெல்லாம் பெற்றோம். இஷ்டப்ராப்தியோபாதி அநிஷ்டநிவாரணமும் பலமிறே. (நெஞ்சமேவந்து) "நெஞ்சமே நல்லைநல்லை யுன்னைப் பெற்றாலென்செய்யோ மினியென்னகுறைவினம்" என்றாப்போலேபெற்

---

(௧) அத்யத்புதம் - மிக்க ஆச்சர்யம் (௨) சேதித்தோம் - அறுத்தோம். (௩) தூமம்-புகை.

றபேற்றைப்பேசி நெஞ்சோடே ஹர்ஷிக்கும்படியைச் சொல்லுகிறது. "வில்லிபுத்தூரென்று ஒருகாற்சொன்னார்" என்றது-"வண்டினமிசைக்கும் வில்லிபுத்தூர்" என்றும், "மென்னடை யன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர்" என்றும் பகவத்விஷயத்திலே தமப்பனாரும் மகளாரும் ஒருக்காற்சொன்னாப்போலே, பாகவதவிஷயமாக ஒருக்கால் சொன்னாரென்றபடி. ஸம்பந்தாநுஸந்தாநம் ஸக்ருத்தென்றபடி.

அ-கை—(பாண்டியன் கொண்டாட) இதில், ப்ரபந்தவக்தாவான பெரியாழ்வார் திருவடிகளில் உபாய ஸ்வீகாரத்தைச் சொல்லுகிறது.

பாண்டியன்கொண்டாடப் பட்டர்பிரான்வந்தானென்
றீண்டியசங்கமெடுத்தூத—வேண்டிய
வேதங்களோதி விரைந்துகிழியறுத்தான்
பாதங்கள்யாமுடைய பற்று.

(இ-ள்.) பாண்டியன்-ஸ்ரீவல்லபதேவனென்கிறபாண்டியராஜன்,கொண்டாட - மேன்மேலேத்த, பட்டர்பிரான் - ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத்தலைவன், வந்தானென்று - எழுந்தருளினானென்று, ஈண்டிய - கூடின-அநேகமான, சங்கம்எடுத்து-சங்குகளைக்கொண்டு, ஊத-அநேகர்ஸப்திக்க, வேண்டிய-அக்காலத்துக்கு ஆவஸ்யகமாகிய, வேதங்கள்-வேதார்த்தங்களை, ஓதி-தெரியச்சொல்லி, விரைந்து - தாமஸியாமல், கிழி-வித்யாசுல்கமாகியபொருண்முடிப்பை, அறுத்தான்-அறுத்தவனுடைய, பாதங்கள்-திருவடிகளே, யாம்-நாங்கள், உடைய-ஆஸ்ரயமாகவுடைய, பற்று-ஆதாரம்—எ-று. (ங)

(தா-ம்.) ஸ்ரீவல்லபதேவனென்கிற பாண்டியராஜன்கொண்டாடும்படி வேதார்த்தங்களைத்தெரியச்சொல்லிக் கிழியறுத்த பெரியாழ்வாருடைய திருவடிகளே எங்களுக்கு ஆஸ்ரயம் என்பதாம்.

வ்யா.—(பாண்டியன்கொண்டாட) "தென்னன் கொண்டாடும்" என்னுமாப்போலே, நமக்கு பரதத்த்வநிர்ணயம் பண்ணித்தரும்படி பட்டர்பிரான் வந்தானென்று பாண்டியனான ஸ்ரீவல்லபதேவன் சொல்லிக்கொண்டாட. அத்தசையிலே (ஈண்டியசங்கமெடுத்தோத) திரண்டிருக்கிற வித்வத்ஸங்கமானது, ஓரோப்ரதேசங்களிலே ஓதிக்கிடக்கிறப்ரசம்ஸாபரவாக்யங்களையெடுத்து ப்ரஹ்மருத்ராதிகளைப் போரப்பொலியச்சொல்லி உபந்யஸிக்கவென்னுதல்; (ஈண்டியசங்கமெடுத்தூத) என்று-ஜயசங்கங்கள் பலவற்றையும் வாயிலேமடுத்தூதவென்னுதல். "பூங்கொள்திருமுகத்து மடுத்தூதியசங்கொலி" என்னக்கடவதிறே. (எடுத்தூத) என்றபோது - சங்கத்தையெடுத்து வாயிலே ஊதவென்றபடி. (அடுத்தூத) என்றபோது-இட்டிஊதவென்றபடி. அதிக்ஷேபித்தவித்வான்கள் வாயடைக்கும்படி (வேண்டியவேதங்களோதி) "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி" "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்கிறபடியே வேதங்களெல்லாவற்றாலும் ஆராதகப்ரகாரத்தையும் ஆராத்யவஸ்துவையும் சொல்லுகிறதென்றறுதியிட்டு, பகவத்பரத்வத்தைஸாதித்து,இனித்தாழ்கைக்கு ஹேதுவென்? என்று கிழ

வடிகளிலே தாழ்ந்தகிழியை, த்வரித்து அறுத்தவருடைய - த்ரவ்யக்ரந்தியையறுத்தவருடைய. (பாதங்கள்) கிழியறுத்த பட்டர்பிரான்பாதங்கள். (யாமுடையபற்று) "பட்டர்பிரானடியேன்" என்னும்படி அவர்க்கு சேஷபூதராயிருக்கிற நம்முடைய ரக்ஷை. "கங்கைபானசரணம தமர்கட்கோர் பற்று" என்கிறபொதுவானவனுடைய திருவடிகளன்று, * அவனைப்பல்லாண்டென்று காப்பிடும பான்மையன்தாள். (யாமுடையபற்று) நமமுடைய, அரண்-புகல், உபாயம, சரண்யமென்றபடி. (யாமுடையபற்று-பற்றற்றநம்முடையபற்று. "பற்றிலார்பற்றநின்றானே" என்னக்கடவதிறே.

பிள்ளைலோகஞ்சியர் திருவடிகளேசரணம்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்த

## திருப்பல்லாண்டு வ்யாக்யாநாவதாரிகை.



"வேதிம்விஶ்வஸ்ய - பதிம்விஶ்வஸ்யாத்மேஶ்வரம்" என்றும் "தமீஶ்வராணாம்பரமம்மஹேஶ்வரம் - தமீஶ்வராணாம்பரமம்மஹேஶ்வரம்" என்றும ஸர்வஸ்வாமியாகவும ஸர்வநியந்தாவாகவும ஸர்வேஶ்வரனை ஸ்வரூபத்தைநிர்ணயித்து, சேதநஸ்வரூபத்தை "பலஶ்ரீ- பஸ்யாஸ்மி" என்றும், "வாஸுதேவ - பாவாநஸ்மி" என்றும, [illegible] - "தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வே" என்றும நிரூபித்து, இந்தஸ்வரூபாநுரூபமான ஜ்ஞாநமும ஜ்ஞாநாநுரூபமான வ்ருத்தியும் பராதீநமாயிருக்க, (க) அயப்பிண்டத்துக்கு அக்நிஸம்ஸர்க்கத்தால்வந்த தாதாத்மயமபோலே சேதநர் (உ) அசித்ப்ரத்யாஸத்தியாலே "தேவோஹம், மநுஷ்யோஹம" என்று அஹங்கரித்து, புத்ரமித்ராதிகள் பக்கலிலே (ங) மமதாபுத்தியைப் பண்ணி, இப்படிப்ரவாஹரூபேண நித்யமான அஹங்கார மமகாரங்களாலே ஸர்வேஶ்வரகதமான (ச) ஸ்வாமித்வ நியந்த்ருத்வங்களைத் தங்கள் பக்கலிலே (ரு) அத்யவஸித்து, ஸ்வதந்த்ரப்ராப்தமான (சு) பாரதந்த்ர்யத்தில்விமுகராய், (எ) அதஏவ சப்தாதி விஷயத்திலேப்ரவணராய், அத்தால்வந்த (அ) ராகத்வேஷாதிகளாலே அபிபூதராய்ப்படுகிற துக்கபரம்பரைகளை அநுஸந்தித்து, நிருபாதிகசேஷியான ஸர்வேஶ்வரன "ஶாஸநாச்சாஸ்த்ரம் - ஶாஸநாச்சாஸ்த்ரம்" என்கிறபடியே தத்த்வஹிதங்களையறிந்து நல்வழிபோகைக்குடலாக சாஸ்த்ரத்தை ப்ரகாசிப்பித்தருளினான். "ஹரு ௧௦ தஶ

(க) அயஃபிண்டம் - பழுக்கக்காய்ச்சின இரும்பு. உ) அசித்ப்ரத்யாஸத்தி. அசித்து என்கிற நினைவு. (ங) மமதாபுத்தி - மமகாரம். (ச) ஸ்வாமித்வ நியந்த்ருத்வம் - யஜமாநனாயிருக்கையும் கட்டளையிடுகையும. (ரு) அத்யவஸித்து - நிச்சயித்து. (சு) பாரதந்த்ர்யம் - பிறர்வசப்பட்டொழுகுகை (எ) அத ஏவ - ஆகையாலே. (அ) ராகத்வேஷம - நட்பும்பகையும்.

"[illegible] - ஸஹ்ருத்துந்தமஸ்ஸதஸதீசவிவேக்துமீசோமாநம்ப்ரதீபமிவகாருணிகோததாதி" என்னக்கடவதிறே.

இந்த சாஸ்த்ர (க) ப்ரதாநமும் வாஸநாதூஷிதமாகையாலே அகிஞ்சித்கரமாக, (உ) ஓலைப்புறத்திற்செல்லாத தேசத்திலே (ங) எடுத்துவிடும் ராஜாக்களைப்போலே ராமக்ருஷ்ணாதிரூபேணவந்தவதரித்து, "[illegible] - பித்ருர்வசநநிர்த்தேசாத் பாத்வாஜஸ்யஸாஸநாத்" என்று - (ச) பித்ருவசநபரிபாலநாதிகளை (ரு) ஆசரித்தருளியும், இளையபெருமாளை யிடுவித்து, "வகுத்தவிஷயத்தில் சேஷவ்ருத்தியே இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபம்" என்னுமிடத்தை ப்ரகாசிப்பித்தருளியும், "[illegible] - ராஜ்யஞ்சாஹஞ்சராமஸ்ய" என்றுகொண்டு இந்த வ்ருத்திக்கடியான பாரதந்த்ர்யத்தை ஸ்ரீபரதாழ்வானையிட்டு ப்ரகாசிப்பித்தருளியும், (சு) இப்பாரதந்த்ர்யகாஷ்டையை, "[illegible] - கச்சதாமாதுலகுலம் - பரதேந - நீதः" என்றுகொண்டு ஸ்ரீசத்ருக்நாழ்வானையிட்டு ப்ரகாசிப்பித்தருளியும், க்ருஷ்ணனாய்வந்தவதரித்தருளி தூத்யஸாரத்யங்களை ஆசரித்தருளியும், "[illegible] - யத்யதாசரதிஸ்ரேஷ்டः" என்று - ச்ரேஷ்டஸமாசாரம் கர்த்தவ்யம என்று உபதேசித்தருளியும், இப்படி (எ) பஹுப்ரகாரத்தாலே ஆத்மாக்களுடைய பாரதந்த்ர்யத்தை ப்ரகாசிப்பித்தருளினவிடத்திலும், பெரியவன் தாழநின்று ஆசரித்த இம்மஹாகுணத்திலே "[illegible] - அவஜாநந்திமாம்மூடாः" என்கிறபடியே (அ) அநீச்வரத்வமாகிற தோஷத்தை ஆவிஷ்கரித்துக் காற்கடைகொள்ளுகையாலே அவையும் கார்யகரமாய்த்தில்லை. இனி, நாம் (கூ) "பார்வைவைத்து ம்ருகம் பிடிப்பாரைப்போலே ஸஜாதீயமுகத்தாலே சேதநரைவசீகரிக்கவேணும்" என்று பார்த்தருளிப் பெரியாழ்வாரை யவதரிப்பித்தருளினான்.

இவ்வாழ்வார், (க0) ஸஹஜதாஸ்யத்தை யுடையராகையாலே பகவத்விஷயத்திலே கிஞ்சித்கரித்து காலக்ஷேபம்பண்ணவேணும் என்று பார்த்தருளி, அதுசெய்யுமிடத்தில் "அவனுகந்தவடிமையே கர்த்தவ்யம்" என்று அநுஸந்தித்து அவதாரங்களை ஆராய்ந்தவிடத்தில், கம்ஸனுக்குப் பணிசெய்துபோந்த மாலாகாரர் க்ருஹத்திலே யெழுந்தருளிப் பூவையிரந்து, அவன்றான் "[illegible] - ப்ரஸாதபரமௌநா

(க) ப்ரதாநம் - முதன்மை. (உ) ஓலைப்புறத்திற்செல்லாத-தன் ஆஜ்ஞை செல்லாத. (ங) எடுத்துவிடுதல் - படையெடுத்துச் செல்லுகை. (ச) பித்ர்வசன பரிபாலநம் - தந்தைசொல்லின்படி நடக்கை. (ரு) ஆசரித்தல் - அநுஷ்டித்தல். (சு) இப்பாரதந்த்ர்யகாஷ்டை-பிறர்வசப்பட்டொழுகுதலின் இந்தக் கடைசி எல்லையை. (எ) பஹுப்ரகாரத்தாலே-பலபடியாலே (அ) அநீச்வரத்வம்-ஈச்வரனல்லாமை. (கூ) பார்வை - பெரிய ம்ருகம் பிடிக்கைக்காக வைத்த சிறிய ம்ருகம். (க0) ஸஹஜதாஸ்யம் - ஸ்வபாவமான அடிமைத்தொழில்.

தௌ மமகேஹமுபாகதௌ-தந்யோஹமர்ச்சயிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவந:" என்று உகந்து சூட்டச் சூடினபடியை அநுஸந்திக்கையாலே "இவ்விஷயத்துக்குப் பூவிடுகையொழிய வேறுகர்த்தவ்யமில்லை நமக்கு" என்று திருநந்தவநஞ்செய்கையிலே உத்யோகித்தாரொருவரிறே.—இன்னமும், மற்றையாழ்வார்களிற்காட்டில் இவர்க்கு நெடுவாசியுண்டு;—அவர்கள், தந்தாமுடைய ஸம்ர்த்திகளை எம்பெருமானாலேபெற நினைத்திருப்பர்கள்; இவர், தம்மை அழியமாறிவரும பகவத்ஸம்ர்த்தியையே தமக்குப் புருஷார்த்தமாக நினைத்திருப்பர். அவர்கள், ஈச்வரனைக் (க) கடகாகப்பற்றித் தந்தாமுடைய பயநிவர்த்தியைப் பண்ணுநிற்பர்கள்; இவர், தாம் கடகாகநின்று "அவனுக்கு என்வருகிறதோ!" என்று பயப்பட்டு அந்த (உ) பயநிவர்த்தியிலே யத்நம் பண்ணுநிற்பர்.

இப்படி மற்றையாழ்வார்களிற்காட்டில் இவர்க்குண்டான நெடுவாசிபோலே, மற்றை ப்ரபந்தங்களிற்காட்டில் திருப்பல்லாண்டுக்கு நெடுவாசியுண்டு;—வேதமென்ன, (ங) தது பப்ரம்ஹணமான (ச) இதிஹாஸ (ரு) புராணங்களென்ன, இவைபோலே (சு) அதிக்ர்தாதிகாரமாயிராது; ஸர்வாதிகாரமான திருவாய்மொழியிலுண்டான அருமையும் இதுக்கில்லை. "அரியயனரனென்னுமிவரை ஒன்றநும்மனத்துவைத்து" என்றும், "முனியே நான்முகனே முக்கண்ணப்பா" என்றும - (எ) உபக்ரமந்தொடங்கி (அ) உபஸம்ஹாரத்தளவுஞ்செல்ல த்ரிமூர்த்திஸாமயத்தை யருளிச்செய்கையாலே, "ஐயெ்விஸிஜுமிஸிமஂவ யஊவதாரஃ - மத்யேவிரிஞ்சிகிரீஸம்ப்ரதமாவதாரஃ" என்று - ரகுகுலஸஜாதீயனும யதுகுலஸஜாதீயனும் அவதரித்தாப்போலே, ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே வந்தவதரிக்கையாலே வந்த ஸாம்யமென்று நிர்வஹிக்கவேணடும் அருமையாதல், "நீராய் நிலனாய்" என்று தொடங்கி, "சிவனாயயனாய்" என்று - சேதநாசேதநவாசிசப்தங்களோடே ஸமாநாதிகரிக்கையாலே, ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் ஈச்வரனோடு சேதநாசேதநங்களுக்குண்டான (கூ) ப்ர்தக்ஸ்தித்யுபலப்தியில்லாத ஸம்பந்தமென்றே நிர்வஹிக்கவேண்டு மருமையாதலில்லை இப் ப்ரபந்தத்துக்கு.—இன்னமும், மஹாபாரதம்போலே பெரும்பரப்பாய், "இன்னதுசொல்லிற்று" என்று நிர்ணயிக்கவொண்ணுதாயிருக்கும் குறையுமின்றிக்கே, ப்ரணவம்போலே சப்தம் அத்யல்பமாய், ஸகல வேதார்த்தமும் அதுக்குள்ளே காணவேண்டி, அதுதெரியாதே தேடவேண்டிவரும் அந்தக்குறையுமின்றிக்கே, பன்னிரண்டுபாட்டாய், ஐச்வர்ய கைவல்யங்களை நீக்கி உத்தம புருஷார்த்தமான பகவத்கைங்கர்யத்தை (க0) ஸங்க்ரஹமாக (உ) ப்ரதிபாதிக்கையாலே இதுக்கு நெடுவாசியுண்டு.—

(க), கடகு - ரக்ஷகம். (உ) பயநிவ்ர்த்தி - பயம் நீங்குகை. (ங.) ததுபப்ரம்ஹணம் - அதின் வ்யாக்யாநம். (ச) இதிஹாஸம்-இராமாயணமும், மஹாபாரதமும். (ரு) புராணம் - ஸ்ரீபாகவதம் முதலிய புராணஙகள். (சு) அதிக்ர்தாதிகாரம்-வேதமோதுகைக்கு அவர்களுக்கே அதிகாரமுள்ளது. (எ) உபக்ரமம்-ஆரம்பம். (அ) உபஸம்ஹாரம் - முடிவு. (கூ) ப்ர்தக்ஸ்தித்யுபலப்தி - ஸர்வேச்வரனைவிட வேருக இருக்கையும், வேருகத் தோன்றுகையும். (க0) ஸங்க்ரஹமாக-எளிதாக அறியத்தக்கதாக. (கக) ப்ரதிபாதித்தல் - சொல்லுதல்.

இன்னமும், இப்ப்ரபந்தம், தன்னை (க) அதிகரித்தவன்கையிலே பரத்வத்தைக் கைப்படுத்தவல்ல சக்தியையுடைத்தாகையாலே வந்த ஏற்றமுமுண்டு;—"பரமாத்துமனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு" என்றிறே இதுக்கு பலம்.

இப்ப்ரபந்தமவதரித்தபடி யென்னென்னில்; ஸ்ரீவல்லபதேவனென்கிற ராஜா, தார்மிகனாகையாலே, புரோஹிதரான செல்வநம்பியை, "புருஷார்த்த நிர்ணயபூர்வகமாக அதர்ஷ்டஸித்திக்கு விரகென்"? என்ன; "யாஜ்ஞவல்க்ய... - தர்மஜ்ஞஸமயப்ரமாணம்" என்கிறபடியே - வித்வான்களைத்திரட்டி வேதார்த்த நிர்ணயத்தைப்பண்ணி அவ்வழியாலே புருஷார்த்தம் பெறவேணும்" என்று சொல்ல; அவனும் அப்படியே (உ) பஹுத்ரவ்யத்தை வித்யாசுல்கமாகக்கட்டி வித்வாம்களை ஆஹ்வாநம்பண்ணிச் செல்லுகிறவளவிலே, வடபெருங்கோயிலுடையான், ஆழ்வாரை யிடுவித்து லோகத்திலே வேததாத்பர்யத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக, "நீர் போய்கிழியையறுத்துக்கொண்டுவாரும்" என்று அருளிச்செய்ய; "அது வித்யாசுல்கமாக நிர்மித்ததொன்றன்றோ, கையில் கொட்டுத்தழும்பைக் காட்டிக் கிழியையறுக்கலாமோ" என்ன; "அது உமக்கு பரமோ, நாமன்றோ வேதார்த்த ப்ரதிபாதநத்துக்குக்கடவோம்" என்று ஆழ்வாரை (ங) நிர்பந்தித்தருள; ஆழ்வாரும், பாண்ட்ய வித்வத்கோஷ்டியிலே யெழுந்தருளினவளவிலே, செல்வநம்பியும ராஜாவும் (ச) அப்யுத்தாநப்ரணாமபூர்வகமாக பஹுமாநம்பண்ண, அத்தைக்கண்ட வித்வான்கள், ராஜாவை (ரு) அதிக்ஷேபிக்க; அவ்வளவிலே, செல்வநம்பி ஆழ்வாரைத் தெண்டனிட்டு, "வேதாந்ததாத்பர்யமான புருஷார்த்தத்தை யருளிச்செய்யலாகாதோ" என்ன; ஆழ்வாரும, "...வ்ருத்தி - தத்ஸர்வம்தர்மவீர்யேண யதாவத்ஸம்ப்ரபஶ்யதி" என்று - ஸ்ரீவால்மீகிபகவான் ஸர்வார்த்தங்களையும் ஸாக்ஷாத்கரித்தாற்போலேயும், ஸ்ரீபாஞ்சஜந்ய ஸ்பர்சத்தாலே த்ருவன் ஸர்வஜ்ஞனாற்போலேயும், பகவத்ப்ரஸாதத்தாலே ஸகல வேதார்த்தங்களையும (ரு) ஸாக்ஷாத்கரித்து, வேதாந்ததாத்பர்யமான அர்த்தத்தை பரதிபாதித்தருள; அதிக்ஷேபித்த வித்வான்களோடு அநுவர்த்தித்த ராஜாவோடு வாசியற (எ) ஸர்வரும் (அ) விஸ்மிதராய்; அநந்தரம், இவரை ஆனையிலேயேற்றி, ராஜா, ஸபரிகரனாய் ஸேவித்துக் கொண்டு, நகரி வலமவருகிற மஹோத்ஸவத்தைக் காண்கைக்காக, புத்ரர்களை ப்ரஹ்மரதம்பண்ணும ஸமயத்திலே மாதாபிதாக்கள் காண ஆதரித்துவருமாப்போலே, பிராட்டியோடேகூட ஸபரிகரனாய்க்கொண்டு ஈச்வரன் ஸந்நிஹிதனாக; தத்பரிகரபூதரான ப்ரஹ்மாதிதேவதைகளும் ஆகாசத்திலே நெருங்கிநிற்கிற வித்தை ஸாக்ஷாத்கரித்த ஆழ்வார், ஸ்வஸமர்த்தியைக்கண்டு இறுமாவாதே, பகவத்ப்ரஸாதத்தாலே நிரவதிக பக்தியைப்

---

(க) அதிகரித்தவன்-கற்றவன். (உ) பஹுத்ரவ்யம்-மிக்க செல்வம். (ங) நிர்பந்தித்தல் - கட்டாயஞ்செய்தல். (ச) அப்யுத்தாந ப்ரணாமம்-எழுந்திருந்து தெண்டனிடல. (ரு) அதிக்ஷேபித்தல் - மதியாமல் பேசுதல். (ரு) ஸாக்ஷாத்கரித்தல் - காணுதல் (எ) ஸர்வரும் எல்லாரும. (அ) விஸ்மிதராய் - ஆச்சர்யப்பட்டவர்களாய்.

பற்று, அவனுடைய (க) ஸர்வஜ்ஞத்வ (உ) ஸர்வசக்தித்வ (ங) ஸர்வரக்ஷகத்வாதிகளை (ச) அநுஸந்திப்பதற்கு முன்னே, முகப்பிலுண்டான (ரு) ஸௌந்தர்ய (சு) ஸௌகுமார்யங்களைக்கண்டு, "காலாதீதமான தேசத்திலேயிருக்கிறவஸ்து, காலம் ஸாம்ராஜ்யம் பண்ணுகிற தேசத்திலே (எ) சக்ஷுர்விஷயமாவதே!, இவ்வஸ்துவுக்கு என்ன தீங்குவருகிறதோ!" என்னும் (அ) அதிசங்கையாலே, ஆனையேலே கிடந்த மணிகளைத் தாளமாகக்கொண்டு, "இந்த ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களுக்குத் தீங்குவாராதே நித்யமாய்ச் செல்லவேணும்" என்று திருப்பல்லாண்டு பாடுகிறார்.

அவாப்த ஸமஸ்த காமனாகையாலே ஒன்றுமொரு குறையின்றிக்கே (கூ) ஸர்வநியந்தாவுமான ஈச்வரனைக்கண்டால் தமமுடைய மங்களங்களை அவன்பக்கலிலே ப்ரார்த்திக்க (க0) ப்ராப்தமாயிருக்க, தாம அவனுக்கு மங்களங்களை (கக) ஆசாஸிக்கை (கஉ) அஸங்கதமன்றோவென்னில்; முகப்பிலே சக்ஷுர்விஷயமான ஸௌந்தர்யாதிகளிலே (கங) பகவத்ப்ரஸாதலப்தமான பக்திபாரவசராய்க்கொண்டு அழுந்தி, அவனுடைய ஸர்வரக்ஷகத்வ ஸர்வசக்தித்வத்தையும ஸ்வஸமர்த்தியையும மறக்கையாலே பகவத்ஸம்ர்த்தியே தமக்கு ஸமர்த்தியாகக்கொண்டு மங்களாசாஸநம்பண்ணுகை ஸங்கதம். பகவத்ப்ரேமந்தான், தத்ப்ராப்திக்கு ஹேதுவாதல், (கச) ததநுபவத்துக்கு பரிகரமாதலாகையொழிய, அறிவுகேட்டைப்பண்ணுமென்னுமிடத்தில் ப்ரமாணமென்னென்னில்:—

அது சிஷ்டாசாரஸித்தம;—"த்ரியொவ்ருஷாவஸாவணந்யுஷ்வஸாயம்வ்ரா தஸ்வஸோஹிதா:| ஸவர்ஷாநுதெவாஙூநவேஸ்ருஷிராவேஸ்ராயெவ்யயஸுஷிநஃ- ஸ்த்ரியோவ்ருத்தாஸ்தருண்யஸ்ச ஸாயம்ப்ராதஸ்ஸமாஹிதா:|ஸர்வான்தேவாந்நமஸ்யந்திராமஸ்யார்த்தே யசஸ்விந:" என்று - திவாராத்ரவிபாகமற, தேவதைகளை ரக்ஷித்துப் புகழ்படைத்தப்போந்த சக்ரவர்த்திதிருமகனுடைய ஸௌந்தர்யாதிகுணங்களுக்கு ரக்ஷகமாக. (கரு) அயோத்யாவாஸிஜநங்கள், பெருமாளால் தங்களுக்குவரும ஸமர்த்தியைமறந்து, தேவதைகளின்காலிலே விழுந்தார்களிறே:—பிராட்டியைத் திருமணம்புணர்ந்து மீண்டெழுந்தருளாநிற்க, ஸ்ரீபரசுராமாழ்வான வந்து தோன்றினவளவிலே, (கசு) தாடகாதாடகேயருடைய (கஎ) நிரஸநங்களைக்கேட்டிருக்கச்செய்தேயும அஞ்சி, "க்ஷத்ரரோஷாத்ப்ரசாந்தஸ்த்வம் ப்ராஹ்மணஸ்ச மஹாயசா:|

(க) ஸர்வஜ்ஞத்வம - எல்லாவற்றையு மறிந்திருக்குந் தன்மை. (உ) ஸர்வசக்தித்வம் - எல்லாம்செய்ய வல்லவல்லமை. (ங) ஸர்வரக்ஷகத்வம் யாவரையும் காப்பாற்றுந்தன்மை. (ச) அநுஸந்திததல-சொல்லுதல். (ரு) ஸௌந்தர்யம்-அழகு. (சு) ஸௌகுமார்யம்-மென்மைத்தன்மை. (எ) சக்ஷுர்விஷயமாகை - கண்ணால் காண்கை. (அ) அதிசங்கை - ஐயப்படுகை. (கூ) ஸர்வநியந்தா - யாவரையும் கட்டளையிடுமவன். (க0) ப்ராப்தம்-சேர்ந்திருக்கை. (கக) ஆசாஸிக்கை-வாழ்த்துகை. (கஉ) அஸங்கதம் - தகாது. (கங) பகவத்ப்ரஸாதலப்தமான - ஸர்வேஸ்வரனருளால் பெற்ற. (கச) ததநுபவத்துக்கு - அந்த அநுபவத்துக்கு. (கரு) அயோத்யா - பிறரால் வெல்லக்கூடாதது. (கசு) தாடகாதாடகேயர்-தாடகையும், அவள் புத்ரர்களாகிய சுபாகுமாரீசர்களும். (கஎ) நிரஸநம - ஜயித்தல்.

ப்ராஹ்மணாநாம் ச ஸர்வேஷாம் த்ராணார்த்தம் ஸம்ஸ்திதா ஹ்யஸி - க்ஷத்ரரோஷாத் ப்ரசாந்தஸ்த்வம்ப்ராஹ்மணஸ்சமஹாயசா:| பாலாநாம்மம புத்ராணாமபயம் தாதுமர்ஹஸி" என்று சரணம்புக்கு, "அவன் தோற்றுமீண்டுபோனான்" என்று கேட்டபின்பு, "மந்யே ஜந்மாந்தரம் ப்ராப்தம் ஸுதாநாத்மாநமேவ - புநர்ஜாதம்ததாமேநே ஸுதாநாத்மாநமேவச" என்கிறபடியே-தானும் பிள்ளைகளும் மறுபிறவிபிறந்ததாக நினைத்திருந்தானிறே சக்ரவர்த்தியும்.—ஸ்ரீகௌஸல்யாரும், "யந்மங்களம் ஸுபர்ணஸ்ய விநதா கல்பயத் புரா| அம்ருதம் ப்ரார்த்தயாநஸ்ய தத்தே பவது மங்களம் - யந்மங்களம் ஸுபர்ணஸ்ய விநதாகல்பயத்புரா | அம்ர்தம்ப்ரார்த்தயாநஸ்யதத்தேபவது மங்களம்" என்று - விச்வாமித்ராத்வரத்ராணாதிகளால்வந்த ஆண்பிள்ளைத்தனத்தை (க) விஸ்மரித்து மங்களாசாஸநம் பண்ணினாளிறே.—ஸ்ரீதண்டகாரண்யவாஸி ஜநங்களும், "தே தம் ஸோமமிவோத்யந்தம் த்ருஷ்ட்வா வை தர்மசாரிண:| மங்களாநி ப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்ருஹ்ணந் த்ருடவ்ரதா: - தேதம் ஸோமமிவோத்யந்தம த்ருஷ்ட்வாவைதர்மசாரிண: | மங்களாநிப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்ருஹ்ணந்த்ருடவ்ரதா:" என்று-தங்களாபந்நிவர்த்திக்கும் அபிமதஸித்திக்கும் இவனை ரக்ஷகனென்றே ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகிறவர்கள், இவர் ஸந்நிஹிதரானவாறே அவற்றைமறந்து, இவர்வடிவழகிலேதுவக்குண்டு, மங்களாசாஸநம் பண்ணினார்களிறே:—கர்மஸ்பர்சமின்றிக்கே (உ) தலைநீர்ப்பாட்டிலே இவரேற்றமெல்லா மறியும்பிராட்டி, இவரழகிலே தோற்று, "பதிஸம்மாநிதா ஸீதா பர்த்தாரமஸிதேக்ஷணா| ஆத்வாரமநுவவ்ராஜ மங்களாந்யபிதத்யுஷீ - பதிஸம்மாநிதாஸீதாபர்த்தாரமஸிதேக்ஷணா| ஆத்வாரமநுவவ்ராஜமங்களாநயபிதத்யுஷீ" என்று தொடங்கி, "பூர்வாம் திசம் வஜ்ரதர: - பூர்வாம்திசம்வஜ்ரதர:" என்று-திக்பாலகர்களை இவர்க்குரக்ஷகராக அபேக்ஷித்தாளிறே:—இன்னமும், "ஜாதோஸி தேவதேவேச சங்கசக்ரகதாதர | திவ்யம் ரூபமிதம் தேவ ப்ரஸாதேநோபஸம்ஹர - ஜாதோஸிதேவதேவேசசங்கசக்ரகதாதர | திவ்யம்ரூபமிதம்தேவப்ரஸாதேநோபஸம்ஹர" என்று - "*அயர்வறுமமரர்களதிபதிஅவ்வடிவோடேவந்தவதரித்தான்" என்று இவனுடைய பெருமையை அறிந்திருக்கிறதசையிலேயும், கம்ஸபயத்தாலே "இவ்வடிவை*உபஸம்ஹரிக்கவேணும்" என்றாரிறே ஸ்ரீவஸுதேவர்:—"உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதச் சதுர்புஜம்| ஜாநாதுமாவதாரந்தே கம்ஸோயம் திதிஜந்மஜ: - உபஸம்ஹரஸர்வாத்மந் ரூபமேதச்சதுர்ப்புஜம்| ஜாநாதுமாவதாரந்தே கம்ஸோயம் திதிஜந்மஃ" என்று, "ஸர்வாத்மா" என்று-ஸர்வாந்தர்யாமியென்றும், "ஏதச்சதுர்ப்புஜம்" என்று-அவனுடைய அஸாதாரண விக்ரஹமென்றுமறிந்திருக்கச்செய்தேயும், கம்ஸபயத்தாலே "இவ்வடிவை உபஸம்ஹரிக்கவேணும்" என்றாளிறே தேவகிப்பிராட்டியும்.

இவ்வர்த்தம் லோகப்ரஸித்தமும்;—அநேககாலம் தபஸ்ஸைப்பண்ணிப்பெற்று ப்ரதமஜனாய் அதிஸுந்தரனான புத்ரனளவிலே, ஒரு விரோ

(க) விஸ்மரித்தல்-மறத்தல். (உ) தலைநீர்ப்பாடு - முதன்மடை.

நமின்றிக்கே யிருக்கச்செய்தேயும், செல்லநின்றதும் வரநின்றதும் (க)ப்ரேமாந்த்யத்தாலே பயஹேதுவாகக்கடவதிறே மாதாவுக்கு.—தன்கைக்கடங்காத (உ) விற்பிடிமாணிக்கத்தைப் பெற்றவன், அது ஸுரக்ஷிதமா இருக்கச்செய்தேயும் "அதுக்கு என்னவிரோதம்வருகிறதோ" என்று காற்ற சங்கிலும் பயப்படாநிற்குமிறே.—அல்பதேஜஸ்ஸுக்களான சந்த்ராதித்யர்களுடைய ஸந்நிதியிலே அசித்தான பாஷாணங்கள் உருகாநின்றன.

"வாஜ்ஞ்யாதிரூவலக்ஷ்ய-பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய" என்றும், "பரஞ்சோதி நீபரமாய்" என்றும் சொல்லுகிறபடியே நிரதிசய ஸௌந்தர்யயுக்தனாய் நிரவதிக தேஜோரூபனான வெம்பெருமானைக்கண்டால், பரமசேதநரான ஆழ்வார் கலங்கச்சொல்லவேணுமோ. ஆகையாலே, ராவணாதிராக்ஷஸ துர்வர்க்கமயமாய் காலம் ஸாம்ராஜ்யம்பண்ணுகிற தேசத்திலே இவ்விலக்ஷண விஷயத்தைக்கண்டருளி, "இவ்விஷயத்துக்கு எவ்வழியாலே தீங்குவருகிறதோ!" என்று பயப்பட்டு, (ங) தத்பரிஹாரார்த்தமாகத் திருப்பல்லாண்டு பாடுகிறார்.

ஸ்வஸ்வரூபபரஸ்வரூபங்களை உள்ளபடி யறிந்திருக்கிறவிவர், ரக்ஷ்ய ரக்ஷகபாவத்தைமாறாடி ப்ரதிபத்திபண்ணுகை விபரீதஜ்ஞானமன்றோவென்னில்:—(ச) கர்மநிபந்தநமான விபரீதஜ்ஞானமாய்த்து த்யாஜ்யம்; விஷய வைலக்ஷண்யமடியாக வந்ததாகையாலே அவ்வைலக்ஷண்யம் உள்ளவளவு மநுவர்த்திக்கையாலே ஸ்வரூபப்ராப்தமாகக்கடவது: இன்னமும், (ரு)சேஷசேஷிபாவஜ்ஞாநஸமநந்தரம் சேஷிக்கு அதிசயத்தை விளைக்கை சேஷபூதனுக்கு ஸ்வரூபமாகையாலே, தத்விஷயமாக மங்களாசாஸநம் பண்ணுகை சைதந்யகார்யம்: அந்த சேஷத்வ (சு) காஷ்டையாவது-தன்னை அழியமாறியேயாகிலும் ஸ்வாமிக்கு (எ) ஸம்ர்த்தியை ஆசாஸிக்கையிறே; வேதாந்ததாத்பர்யமிறே இத்திருப்பல்லாண்டில் ப்ரதிபாதிக்கப்படுகிறது.

இப்ப்ரபந்தத்தில் முன்னிரண்டுபாட்டாலே - தாம் மங்களாசாஸநம் பண்ணுகிறார்; அத்தாலே தமக்கு பர்யாப்தி பிறவாமையாலே, மேல் மூன்றுபாட்டாலே - மங்களாசாஸநம் பண்ணுகைக்கு. (அ) பகவச்சரணார்த்திகளையும், (கூ) கேவலரையும், (கo) ஐச்வர்யார்த்திகளையுமழைக்கிறார்; அதுக்குமேல் மூன்றுபாட்டாலே (கக)ஆஹூதரானவர்கள் இவரோடே (கஉ) ஸங்கதராகிறார்கள்; அதுக்குமேல் மூன்றுபாட்டாலே - அவர்களோடே திருப்பல்லாண்டு பாடியருளுகிறார்; மேலிற்பாட்டு-பலச்ருதி... ... *

---

(க) ப்ரேமாந்த்யம்-அன்பின்மிகுதியால் குருடனாயிருக்குந்தன்மை. (உ) விற்பிடிமாணிக்கம்-சிறந்தமாணிக்கம். (ங) தத்பரிஹாரம்-அதுக்கு ஸமாதானம். (ச) கர்மநிபந்தநம்-கர்மகாரணம். (ரு) சேஷசேஷிபாவம் - அதிசயத்தைப் பண்ணுமவனும், அதிசயத்தை யடையுமவனும். (சு) காஷ்டை-எல்லை. (எ) ஸம்ர்த்தி - நிறைவு. (அ) பகவச்சரணார்த்திகள்-ஸர்வேச்வரன் திருவடிகளை விரும்புமவர்கள். (கூ) கேவலர் - கைவல்யத்தை விரும்புமவர்கள். (கo) ஐச்வர்யார்த்தி-பொருளை விரும்புமவன். (கக) ஆஹூதர் - அழைக்கப்பட்டவர்கள். (கஉ) ஸங்கதராகிறார்கள் - சேருகிறார்கள்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருப்பல்லாண்டு வ்யாக்யாந

## அரும்பத அவதாரிகை.

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை ஸ்வாசார்யநியமநத்தாலே திருவாய்மொழிக்கு இருபத்துநாலாயிரமாக ஒருவ்யாக்யாநஞ்செய்தருளி, பின்புள்ளவையான இருபத்துமூன்று திவ்யப்ரபந்தங்களுக்கும் தெரிய வ்யாக்யைகள் செய்வதாகத்திருவுள்ளம்பற்றி, வேதத்துக்கு ஓம் என்னுமதுபோல் உள்ளதுக்கெல்லாஞ்சுருக்கான திருப்பல்லாண்டுக்கு வ்யாக்யாநஞ் செய்தருளக்கோலி, வக்த்ருவைலக்ஷண்யபூர்வகமாக இப்ரபந்த வைபவத்தைப் பலபடியாலும் உபபாதித்துக்கொண்டு, ப்ரதிபாத்ய வைலக்ஷண்யத்தையுஞ் சுருங்க அருளிச்செய்கிறார். "பதிம் விச்வஸ்ய" இத்யாதி மேலிற்பாட்டு பல ஸ்ருதியென்னுமளவும்.

ஆகிலும் சேதநோஜ்ஜீவநார்த்தமாகப் பெரியாழ்வாரை ஸர்வேஸ்வரன் அவதரிப்பித்தருளினுனென்றருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, அதிஷ்டிக்கையிடுகிறார் "பதிம் விச்வஸ்ய" த்யாதி. எடுத்த ஸ்ருதிக்கர்த்தம் - ஸர்வஸ்வாமியாகவும் ஸர்வநியந்தாவாகவும் என்றது—ஸ்வரூபாநுரூபமான ஜ்ஞாநமாவது - சேஷபூதனுக்கு சேஷிபக்கல் கைங்கர்யமே கர்த்தவ்யமென்கிற ஜ்ஞாநமென்கை. ப்ருத்தியும் என்கிற அநந்தரம் தங்களுக்குண்டாம்படி அர்த்திக்கவேணுமென்று சேஷம் - தாதாத்ம்யமாவது-அபேதபுத்தி. சேதநர் என்றது கீழும்மேலும் அந்வயிக்கிறது. அஹங்கார மமகாரஹேது அசித்ப்ரத்யாஸத்தியாலேயென்றது - உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் "ஹ்ருதி" மித்யாதி - ஸதஸத் - நல்லதும் - தீயதும். "ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு யாபுத்திர் பாவிதா ந்ருணாம் தாமேவ பஜதே ஜந்து: உபதேசோ நிரர்த்தக:" என்கிறவசனத்தையுட்கொண்டு அருளிச்செய்கிறார் இந்த சாஸ்த்ரப்ரதாநமுமித்யாதி. அகிஞ்சித்கரமென்றது - அநேகவிஷயங்களில் அகார்யகரமென்றபடி. எடுத்துவிடுகையாவது - ஸேனையைத்திரட்டிக்கொண்டுபோகை. பெருமாள் ஸாமாந்யதர்மநிஷ்டரென்று தோற்றுகைக்காக வருத்த விஷயத்தில் என்றது—என்றுகொண்டு என்றது-என்று சொல்லப்பட்டுக்கொண்டிருக்கிற வென்றபடி. இளையபெருமாளை வ்யாவர்த்திக்கைக்காக இந்தவ்ருத்திக்கடியான பாரதந்த்ர்யம் என்றது. இநதவ்ருத்தி அசித்தைப்போலேயிருக்கை. ஸ்ரீபரதாழ்வானிலும் ஆதிக்யந்தோற்ற இந்த பாரதந்த்ர்ய காஷ்டையென்றது - "அவஜாநந்தி" அவஜ்ஞாங்குர்வந்தி - இத்தைப்பற்றக் காற்கடைகொள்ளுகையாலே என்றது "மூடா:" என்கிறதைப்பற்றக் கார்யகரமாயிற்றில்லை யென்கிறது. பார்வையென்றது - ம்ருகம்பிடிக்க ஸாதநமாகவைத்தம்ருகம். பார்வைவைத்து ம்ருகம்பிடிப்பாரைப்போலேயென்கிற த்ருஷ்டாந்தபலதகாலே ஆழ்வாருடைய அவதாரம் கார்யகரமென்று தோற்றுகிறது. இத்தால் சாஸ்த்ரங்களாலும் அவதாரங்களாலும் திருந்தாதாரும் ஆழ்வாராலே திருந்தினார்களென்று வைபவஞ்சொல்லிற்றாயிற்று. ஆக ஸர்வேஸ்வரன் ஆழ்வாரை அவதரிப்பித்து சேதநரை வசீகரிக்கப்பார்த்தான் என்கிறார் கீழ். இப்படி ஆழ்வாராலே சேதநர் திருந்துகைக்கு இவ்வாழ்வார்க்குள்ள ஏற்றம் என்னென்ன அருளிச்செய்கிறார் இவ்வாழ்வார் இத்யாதி. "ஏழாட்காலும் பழிப்பிலோம்நாங்கள்" என்றிருக்கையாலே, ஸஹஜதாஸ்யத்தை யுடையவராகையாலே

யென்றது - அவனுகந்த அடிமையென்கையாலே ஸ்வார்த்தகைங்கர்யபரரை வ்யாவர்த்திக்கிறார். அவதாரங்களை யித்யாதிக்குக்கருத்து-ராமாவதாரத்தில் கிஞ்சித்கரித்த ஸுக்ரீவாதிகள் ஸ்வார்த்தபரராகையாலும்-இளையபெருமாள் தாமேபின்றொடருகையாலும், வாமநாவதாரத்தில் மஹாபலி அவ னிரந்தபோதும் நீர்வார்த்துக்கொடுத்து ஔதார்யம் பெற்றுப்போகையாலும், இவ்வபதானத்தில் அந்யபரனை தன்னை அவனிரக்கத்தானுகந்து பூவிட்டானென்கிறது.—ஏற்றமிறேயென்று பூவிடுகையாலே, தாமுமுத்யோகித்தாரொன்று "தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே" என்கிற மற்றையாழ்வார்களிலும் ஏற்றமருளிச்செய்கிறார் இன்னமுமித்யாதி. வாசிதன்னை உபபாதிக்கிறார் அவர்களித்யாதி. தந்தாமுடைய ஸம்ருத்திகள் என்றது - அநுபவகைங்கர்யங்களால் தங்களுக்குண்டான தழைப்பு. பகவத்ஸம்ருத்தியென்றது - மங்களாஶாஸநத்தா லுண்டான தழைப்பு. இவ்வாசிதன்னை முகபேதேன விவரிக்கிறார் அவர்கள் ஈஶ்வரனையித்யாதி. கடகாக - பரிசையாக; - ரக்ஷகமாகவென்றபடி - ஆக வக்த்ருவைலக்ஷண்யத்தை யருளிச்செய்தாராய், இத்தை த்ருஷ்டாந்தமாகக்கொண்டு ப்ரபந்த வைலக்ஷண்யத்தைப் பலபடியாக அருளிச்செய்கிறார் இப்படிமற்றையித்யாதி. வாசியெப்படியென்ன, வேதம் இத்யாதி. அதிக்ருதாதிகாரிண꞉ தேஷாமதிகாரோயஸ்மிந்நிதிவிக்ரஹ꞉ ; ஆனால், ஸர்வாதிகாரமாகத் திருவாய்மொழியுண்டே, இதுக்கதிலும் அதிஶயமென்னென்ன, ஸர்வேத்யாதி. அதுக்கருமையேதென்ன "அரியயன்" இத்யாதி. "ஒன்றநும்மனத்துவைத்து" என்றது "நன்றெழிஞரணநான்முக னரனென்னுமிவரை" என்றத்தைக் கடாக்ஷித்து, இந்தப்பாசுராந்தரத்தையுஞ் சேர்த்துஎடுத்து, அப்யாஸமுந்தோற்றுகைக்காக, த்ரிமூர்த்திஸாம்யத்தை யருளிச்செய்கையாலே யென்று நிஷேதிக்கைக்கு ப்ரஸக்திரூபேண ஸாம்யஞ்சொல்லுகையாலே யென்றபடி. "மனப்பட்டதொன்றே" என்ற இடத்திலும், "இருபசையறுத்து" என்றஇடத்திலும், "முனியே'; என்ற இடத்திலும் ஸாம்யநிஷேதம் அர்த்தஸித்தமிறே. "அரியயன்" இத்யாத்யம்ஶத்தில் ஸாம்யப்ரஸக்திக்கு நிர்வாஹகம்காட்டுகிறார் - "மத்யேவிரிஞ்சிகிரிஶம்"- முழுச்சொல்- அவ்யயம்- "விரிஞ்சிகிரிஶயொர்மத்யெ" என்றபடி. "முனியேநான்முகனே" என்ற இடத்தில் ஸாமாநாதிகரண்யத்துக்கு நிர்வாஹகங்காட்டுகிறார் "நீராய்" இத்யாதி-ஸாமாநாதிகரண்யத்துக்கு- "முனியேநான்முகனே" என்றதில் ஸாமாநாதிகரண்யத்துக்கென்றபடி. ப்ருதக்ஸ்தித்யுபலப்தியாவது-பிரிந்திருக்கையும் பிரிந்துதோன்றுகையும். அதிவிஸ்தாராதி ஸங்க்ரஹங்களாகையாலே வந்த துர்ஜ்ஞேயதையும் இதுக்கில்லை ஸங்க்ரஹமாயிருக்குமென்கிறார் இன்னமும் இத்யாதி. ஐஶ்வர்யகைவல்யங்களை நீக்கியென்றதுக்கு "கூழாட்பட்டுநின்றீர்களை" "புகுதலொட்டோம்" என்றதிலேநோக்கு. பகவத்கைங்கர்யத்தை யென்றதுக்கு "மண்ணுமணமுங்கொண்மின்"என்றதிலேநோக்கு உண்டென்கைக்கு நியாமகமெங்கேயென்ன, "பரமாத்மனை" இத்யாதி. ஆக ஸர்வாதிகாரமாயும் நிர்வஹிக்கவேண்டும் அருமையுமின்றிக்கே பன்னிரண்டு பாட்டாகையாலே, ஸுக்ரஹமாயும் நிரதிஶயபலப்ரதாநஸமர்த்தமாயும் இருக்குமென்றருளிச்செய்து, இனியிந்த திவ்யப்ரபந்தம் அவதரித்த ப்ரகாரத்தால் வந்த வைபவத்தை அருளிச்செய்யக்கருதி தஜ்ஜிஜ்ஞாஸுப்ரஶ்நத்தை அநுவதிக்கிறார் இப்ரபந்தமித்யாதி.இதுக்குத்தரமாக முன்கதையைஅருளிச்செய்கிறார் ஸ்ரீவல்லபேத்யாதி. தார்மிகனாகையாலே யென்ற அநந்தரம், சிறியதைப்பெரியது நலியாதபடி, கூடலென்கிற மதுரையிலிருந்து ராஜ்யம்பண்ணுகிற காலத்திலே, நகரஶோதகார்த்தமாக வருகிறவளவிலே,ஒரு ப்ராம்ஹணன் அங்கொருதிண்ணையிலே கிடக்கக்கண்டு, ராஜாவும் அவனையெழுப்பி, நீயாரொன்று கேட்க, அவனும் நான் ஒரு ப்ர்ாம்ஹணன் கங்கையாடிவருகிறேனென்ன, ஆனாலுனக்குப் போவதுண்டாகில் ஒரு ஶ்லோகம் சொல்லிக்காணென்ன, ப்ராம்ஹணனும்

“வஷ-ராய-ஐஷ-ளவ-யெ-த-தரோவஸாநு|நிஶாய-ஐய-ஜீவஸளயெ-த-அ
வாயி-க்ஷெஹெ-தாவ-யஸா-நவெ-நு|வா-த்ஷெஹெ-தாரிஹஜ-நீ-தாவ”
என்கிற ஶ்லோகத்தைச்சொல்ல, ராஜாவும் இதைக்கேட்டு, வ்யுத்பந்நனுகையாலே
த்ருஷ்டத்தில் நமக்குக்குறையொன்றுமில்லை, அத்ருஷ்டயத்நம்பண்ணும்படியெங்
ஙனேயென்று வ்யாகுலாந்த:கரணனாய் என்று இவ்வளவும் அங்கேயே கூட்டிக்
கொள்வது. வடபெருங்கோயிலுடையான்-வடதளத்தைப் பெரியகோயிலாகவுடை
யவன். ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்வாமியைச்சொன்னபடி. ப்ரகாசிப்பிக்கைக்காக என்ற
அநந்தரம் இவருக்கு ஸ்வப்நத்திலே யெழுந்தருளியென்று ஶேஷம். கொட்டுத்தழு
ம்பு-திருக்கைகளிற்கிணங்கள். கொட்டு-களைக்கொட்டு. கிழியை-முடிப்பை. ஆழ்வா
ருமென்ற அநந்தரம் இதொரு ஸ்வப்நமிருந்தபடியென்னென்று விஸ்மிதராய்விஶ்
வஸித்து என்று ஶேஷம். ஸ்ரீபஞ்சஜந்ய ஸ்பர்ஶத்தாலே என்ற இடத்தில்
“ஶம்வ-ாஜெ-நமொவிரு ஷம்வஸஶ-க்ஷ-தாம்ஜயிம் | ஐ-தா-நவாஷ
-த-நயம்ஶ-நிவய-ம்ஜஶவ-திம் | -த-த:வ-ஸ-நவஷ-நஸக்ஷணா-நு-வரு-ந: |
-த-ஷ-ாவவ-ணெ-தாஹ-க்வா ஹ-ஷயா-தாாஜவ-யம்” என்கிற வசநங்கள்
அநுஸந்தேயங்கள். வேதாந்ததாத்பர்யமான அர்த்தமாவது - ஸமஸ்த ஶப்தமூல
மான அகாரத்துக்கு வாச்யனான ஸ்ரீமந்நாராயணனே ஸர்வஸ்மாத்பரன், ஸர்வ
காரணபூதன், முமுக்ஷூபாஸ்யன் - மோக்ஷப்ரதனென்கை- ப்ரதிபாதித்தருள
என்ற அநந்தரம் கீழேகிழிதானேயறுத்துவிழவென்று ஶேஷம். வலம்-ப்ரதக்ஷிணம்.
ப்ரம்ஹரதம்-தோளுக்கினியான் — இறுமாப்பு - கர்வம். — ஆக ப்ரபந்தமவதரித்தபடி
யை அருளிச்செய்தார்கீழ்-அவனுடைய ஸர்வஜ்ஞத்வேத்யாதி வாக்யத்தைவிவரிப்ப
தாகத் திருப்பல்லாண்டுபாடுகையில் ஸாங்கத்யஶங்கையை அநுவதிக்கிறார் அவாப்
தேத்யாதி.பரிஹரிக்கிறார் முகப்பிலே இத்யாதி. அழுந்தி-மக்நராய். — பக்திபாரவஶ்
யத்தாலே ரக்ஷகத்வாதிகளை மறந்தாரொன்றுநின்றீர், பக்தி பக்தருக்குஸாதகமாக
வும், ப்ரபந்நருக்கு அநுபவோபகரண மாகவும் ஶாஸ்த்ரம்சொல்லாநிற்க, இது அறி
வுகேட்டைப்பிறப்பித்து மங்களாஶாஸநத்திலே மூட்டுமென்னுமதுக்கு ப்ரமாணமெ
ன்னென்கிற ஶங்கையை அநுவதிக்கிறார் பகவத்ப்ரேமமித்யாதி. அத்தை நிராகரிக்கி
றார் அதித்யாதி. ஶிஷ்டாசாரத்தைக்காட்டுகிறார் “ஹிய” இத்யாதி தேவகிப்பிரா
ட்டியும் என்னுமளவும்-“யஶஹிெ-நாாஜஷ்ா” என்று அந்வயித்து ஶ்லோகதா
த்பர்யமருளிச்செய்கிறார் திவாராத்ர இத்யாதி. திவாராத்ரவிபாகமற தேவதைக
ளின் காலிலே விழுந்தார்களிறே என்ற அநந்தரம் தாடகாதாடகேயாதிநிரஸந மு
கேந தேவதைகளை ரக்ஷித்தென்று ஶேஷம். ஆண்பிள்ளைத்தனத்தை - ஸௌந்தர்
யாதிகளை-“ஷ-யவ-தா:” என்று த்ருடாத்யவஸாயத்தை நினைத்துரக்ஷகரென்றே
யென்றது- “யஜ-வாரிண:” என்றத்தைப்பற்ற, ஸாதநாநுஷ்டாநம்பண்ணுகிற
வர்களென்றது-ரக்ஷகரென்றறிந்து தத்ப்ரீத்யர்த்தமாகவென்று ஶேஷம்- “வொஜ
ஜிவொஷ-ஜ” மென்றதைப்பற்ற இவர்ஸந்நிஹிதர் இத்யாதி - அவற்றை - ஆபந்நி
வ்ருத்யபிமதஸித்திகளை — கர்மஸ்பர்ஶமன்றிக்கே என்கையாலே அயோத்யாவாஸி
கள், சக்ரவர்த்தி, கௌஸலையார், தண்டகாரண்யவாஸிகளான இவர்களை வ்யாவர்
த்திக்கிறது. தலைநீர்ப்பாட்டிலேஎன்கையாலே-ஸூரிகளை வ்யாவர்த்திக்கிறது-தலைநீர்ப்
பாடு-முதல்மடை — “சுந-வவ-ாஜ” என்றிருக்கையாலே அழகுக்குத்தோற்றது
அர்த்தஸித்தம். ஆக ஸ்ரீராமாயணத்தில் ஶிஷ்டாசாரத்தைக்காட்டி, க்ருஷ்ணவ்ருத்
தாந்தம் காட்டுகிறார். இன்னமும் “ஜாெ-தாவஸீ” த்யாதி-லோகப்ரஸித்தமுமித்
யாதி. இப்படிதேடிப்பிடிக்கவேண்டாதே ஸர்வலோகப்ரஸித்தமான லௌகிகாசார

[illegible]காட்டுகிறார் இவ்வர்த்தமித்யாதி.விற்பிடிமாணிக்கம்-வில் என்று தேஜிஷ்டமாய், பிடியளவும் நீண்டமணியென்னுதல்; விற்பிடிபோன்ற மணியென்னுதல் விற்பிடியென்று ராஜாவாய், ராஜார்ஹமான மாணிக்கமென்னுதல்—கீழ்ப்ரமாணங்காட்டி உபபத்தியுங் காட்டுகிறார் அல்பதேஸ்ஸங்களித்யாதி. இப்படி ப்ரஸக்தமானஸங்காபரிஹாரங்களைப்பண்ணி, ப்ரக்ருதார்த்தத்தை உபஸம்ஹரிக்கிறார் - ஆகையாலே இத்யாதி. கீழ்ச்சொன்னவர்கள் "மயர்வறமதிநலம்" அருளப்பெறுமையாலும், மாநுஷபாவனையாலும், கலக்கப்ராப்தம்; ஸ்வரூபஜ்ஞரான இவர்கலங்கி மங்களாஸாஸம்பண்ணினால், ஸ்ரூபவிருத்தமன்றோவென்று ஸங்காநுவாதம் பண்ணுகிறார் ஸ்வஸ்வரூபமித்யாதி. ஸ்வஸ்வரூபவிருத்தமானாலும் விஷயவைலக்ஷண்யஜ்ஞாநமடியாகையாலே உபாதேயமென்று பரிஹரிக்கிறார் கர்மேத்யாதி. அநுப்யுபகம்ய பரிஹாராநந்தரம் இன்னமும்ஸேஷேத்யாதி.இதுஸேஷத்வஜ்ஞாநகைங்கர்யமாகையாலே ப்ராப்தமென்றுகருத்து. இத்தை உபபாதிக்கிறார் அந்தஸேஷத்வேத்யாதி. ஆக ப்ரபந்தவைலக்ஷண்யத்தை பஹுமுகமாக அருளிச்செய்து, ப்ரஸக்தஸங்காபரிஹாரங்களையும்பண்ணி, இனி ப்ரதிபாத்யவைலக்ஷண்யமருளிச்செய்ய நினைத்து, அந்தவைலக்ஷண்யம்தோற்றும்படி ஈடுபடுகிறார்-இவ்வேதாந்தேத்யாதி. கீழ் பன்னிரண்டுபாட்டாய் என்னுகின்றீர், பன்னிருநாமப்பாட்டுக்களைப்போலே ஒரு நியதிகண்டிலோமேயென்ன, அருளிச்செய்கிறார்.இப்ரபந்தத்தில் இத்யாதி. புத்திஸமாதாநார்த்தமாக காதாப்ரதிபாத்யங்களை உபந்யஸிக்கிறார் என்னவுமாம்.அடியோமோடுமென்று பஹுவசநமுண்டாயிருந்தாலும், அது ஸ்வாபிப்ராயத்தாலேயாகையாலே தாம் மங்களாஸாஸநம்பண்ணுகிறார் என்கிறார். பகவச்சரணார்த்திகள் - தம்மைப் போல்பவர்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# திருப்பல்லாண்டு.

## முதற்பாட்டு.

வெண்செந்துறை.

பல்லாண்டுபல்லாண்டுபல்லாயிரத்தாண்டு
பல்கோடிநூறாயிரம்
மல்லாண்டதிண்டோண்மணிவண்ணாவுன்
செவ்வடிசெவ்விதிருக்காப்பு. (க)

(இ-ள்.) மல் - ஒருவராலுமடங்காத சாணூரமுஷ்டிகரொன்கிற மல்லவர்க்கத்தை, ஆண்ட-நிரஸித்த, திண்-திண்ணிய, தோள்-திருத்தோள்களையுடையனாய், மணி-நீலரத்நம்போன்ற, வண்ணா-வடிவழகையுடையவனே!, பல்லாண்டு பல்லாண்டு - பலவர்ஷங்களிலும், பல்லாயிரத்தாண்டு-அநேகப்ரஹ்மகல்பங்களிலும், பல்கோடிநூறாயிரம் - இப்படியுண்டான காலமெல்லாம், உன்-உன்னுடைய, செம்-சிவந்த, அடி-திருவடிகளின்,செவ்வி-அழகுக்கு, திருக்காப்பு-குறைவற்ற ரக்ஷையுண்டாகவேண்டுமென்று மங்களாசாஸநம் பண்ணுகிறார்.

(தா-ம்.) மல்லரைவென்று ஸ்வாதீநமாக்கின த்ருடமான திருத்தோள்களோடு விளங்காநின்ற நீலரத்நம்போலும் காந்தியையுடையவனே,உனதுசிவந்த திருவடிகளின் அழகுக்கு எப்போதும் மங்களமுண்டாகவேண்டும்என்பதாம்.

அ-கை.—முதற்பாட்டு. ஸௌந்தர்யாதி கல்யாணகுணோபேதமான விக்ரஹத்தோடேவகுத்த சேஷியானவனைக் காலாதீநமானதேசத்திலேகாண்கையாலே"இத்தால் இவனுக்கு என்ன தீங்குவருகிறதோ!"என்று அதிசங்கைபண்ணி, "ஊநாதிர்ஹ்ஃமவாநுகாலொ நாஸொஸ்ய விஜவிஷ்யதெ" "அநாதிர்பகவாந்காலோ நாந்தோஸ்யத்விஜவித்யதே" என்கிறபடியே - காலதத்வமுள்ளதனையும் இச்செவ்விமாறாதே நித்யமாய்ச்செல்லவேணும் என்று மங்களாசாஸநம் பண்ணுகிறார்.

வ்யா-ம்—(பல்லாண்டு)அல்லாத (க)அவச்சேதகங்களையொழிய ஆயுஸ்ஸுக்கு பர்யாயமான ஆண்டைக்கொண்டு காலத்தைப் பெருக்குகிறார். ஆயுஸ்ஸை ப்ரார்த்திக்கிறவராகையாலே; "யாஶோஷயிஶிவாயஷூநு யாமோஷதிமிசாயுஷ்மந்" என்று - ஆயுஸ்ஸை ப்ரார்த்தித்தாரிறே (உ) பெரியவுடையார். "வேதநூற்பிராயம் நூறு" என்று -ஆயுஸ்பர்யாயமாகச் சொல்லிற்றிறே (ஙு) வத்ஸரத்தை. இந்த (ச) பஹுவசநத்துக்கு அஸங்க்யாதத்வமே முக்யார்த்தமாகையாலே, அஸங்க்யாதமான

(க) அவச்சேதகம் - பகுக்கும் தர்மம். (உ) பெரியவுடையார் - ஜடாயு மஹாராஜர். (ஙு) வத்ஸரம் - வருஷம். (ச) பஹுவசநம்-பன்மையெண்.

ஸர்வேச்வரன் இவ்வழகோடே நித்யமாய்ச் செல்லவேணுமென்கிறார். "பல்லாண்டு" என்கிற சப்தம் ஸ்வரூப வாசியுமாயிருக்கிறது. (க) உத்க்ர்ஷ்டனா யிருப்பா னொருவனை (உ) அபக்ர்ஷ்டனா யிருப்பா னொருவன் கண்டால் அவனுடைய உத்கர்ஷாநுரூபமாகச்சொல்லும் பாசுரமாகையாலே. ஸர்வேஸ்வரனுடைய உத்கர்ஷத்துக்கு அவதியில்லாமையாலும், அவனைக்குறித்துத் தம்முடைய நிகர்ஷத்துக்கு அவதியில்லாமையாலும், இந்த உத்கர்ஷாபகர்ஷ ரூபஸவைஷம்யம் ஸ்வரூபப்ராயுக்தமாகையாலே "பல்லாண்டு" என்கிறசப்தம் (ங) ஸ்வரூபவாசியாகிறது. மேல்பண்ணுகிற மங்களாசாஸநம் ஸ்வரூபப்ரயுக்தம் என்கைக்காகச் சொல்லிற்று. "ஜிதம்" என்றும், "நமஃ" என்றும், "தோற்றோம்" என்றும், "போற்றி" என்றும், "பல்லாண்டு" என்றும், இவை பர்யாயம். இச்சப்தங்களுக்கு அர்த்தபேத மில்லையோவென்னில்; ப்ரவ்ர்த்திநிமித்த பேதத்தாலேவரும் விசேஷமுண்டானாலும் (ச) விழுக்காட்டில் (ரு) ஆத்மஸ்பர்சியாய்த்தலைக் கட்டுகையாலே பர்யாயமாகிறது. "ஜிதம்" என்று-அவனாலே தன்னபிமாநம்போனபடியை யிசைந்து, அத்தலையில் வெற்றிக்குமேலெழுத்திடுமவன் வ்யவஹாரம். இத்தால் - ஸ்வரூபப்ரகாசத்தாலல்லது அபிமாநம் போகாமையாலே, இச்சப்தமும் விழுக்காட்டால் ஸ்வரூபவாசியாகிறது. "நமஃ" என்று - எனக்குரியேனல்லேனென்றபடி. இது (சு) நிவர்த்தஸ்வதந்த்ரனுடைய வ்யவஹாரம்; இதுவும் ஸ்வரூப ப்ரகாசத்தாலல்லது கூடாமையாலே ஸ்வரூப ஸ்பர்சியாகிறது. "தோற்றோம்" என்கிறது - "அத்தலையில்வெற்றியே தனக்கு ப்ரயோஜநம்" என்றிருக்குமவனுடைய வ்யவஹாரம்; அதுவும், அஹங்கார நிவ்ர்த்தியிலே யல்லது (எ) ஸம்பவியாமையாலே ஸ்வரூப ஸ்பர்சியாகிறது. "போற்றி" என்று - தன்னைப் பேணாதே அத்தலையில் ஸம்ர்த்தியேபேணுமவன் வ்யவஹாரம்; இது ஸ்வரூபாநுரூபமிறே. "பல்லாண்டு" என்று-தன்னைப்பாராதே "அத்தலையில் ஸம்ர்த்தியே நித்யமாய்ச்செல்லவேணும்" என்றிருக்குமவன் வ்யவஹாரம்.—ஆக, இச்சப்தங்கள்-ஸ்வரூபத்தையும், ஸ்வரூபாநுரூபமான வ்ர்த்தியையும் ப்ரகாசிப்பிக்கையாலே ஸ்வரூபாநுபந்தியாகிறது.

(பல்லாண்டு) மறித்து, "பல்லாண்டு" என்கிறதென்னென்னில்; அகவாயறியாதவனுக்கு, தெரியாமையாலே பலகாற்சொல்ல வேண்டியிருக்கும்; (அ) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாய் * எதிர்சூழல்புக்குத் திரிகிறவனுக்கு இருகாற் சொல்லவேண்டா. (கூ) இப் புநருக்திக்குப பொருளேன் என்னில்; அவனுடைய ஸர்வஜ்ஞத்வத்தில் குறையாலல்ல; "ஒருகாற்சொன்

(க) உத்க்ர்ஷ்டன் - உயர்ந்தவன். (உ) அபக்ர்ஷ்டன-தாழ்ந்தவன். (ங) ஸ்வரூபவாசி-ஆத்மஸ்வரூபத்தைச்சொல்லும் சப்தம். (ச) விழுக்காடு - தன்கடையே. (ரு) ஆத்மஸ்பர்சியாய் - ஆத்மாவைச்சொல்லுமதாய், (சு) நிவ்ர்த்தஸ்வதந்த்ரன் - ஸ்வாதந்த்ர்யத்தினின்றும் நீக்கினவன். (எ) ஸம்பவித்தல் - நேர்படுதல். (அ) ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாய்-எல்லாவற்றையும் தானே யறிந்தவனாய். (கூ) புநருக்தி-இரண்டாந்தரம் சொல்லுதல்.

ளோம்" என்று ஆறியிருக்கமாட்டாத தம்முடைய (க) ஆதராதிசயத்தா லும், பலகாற்சொல்லுமத்தாலும் பர்யாப்திபிறவாத விஷயவைலக்ஷண்யத் தாலும் அருளிச்செய்கிறார். (உ) த்ர்ஷார்த்தனானவன் தண்ணீர்பெறுமள வும் "தண்ணீர், தண்ணீர்" என்னுமாப்போலே, தம்முடைய பயம் (ங) சமிக்குமளவும் "பல்லாண்டு, பல்லாண்டு" என்ன ப்ராப்தமிறே.

(பல்லாயிரத்தாண்டு) கீழில் பஹுவசநத்திலே- வர்ஷங்களினுடைய (ச) அஸங்க்யாதத்வம் சொல்லியிருக்க, இதுக்கு (ரு) உதயமில்லையே என்னில்; அவச்சேதகங்களுக்கு ஸங்க்யையில்லாமையாலே காலாவச்சேதத் துக்குத் தொகையில்லை; ஆகையாலே யருளிச்செய்கிறார். அவச்சேதகங் களாவன-ஸூர்யபரிஸ்பந்தாதிகள்; அவச்சேத்யங்களாவன - க்ஷணலவாதி கள். வர்ஷத்துக்கு அவச்சேதகர் - தேவர்கள்; அத்தைப் பற்றச்சொன் னார் கீழ்; பலவர்ஷத்துக்கு அவச்சேதகன் - ப்ரஹ்மா; அத்தைப்பற்றவரு ளிச்செய்கிறார் (பல்லாயிரத்தாண்டு) என்று.

(பல்கோடிநூறாயிரமென்று) ப்ரஹ்மாக்களுக்குத் தொகையில்லா மையாலே யருளிச்செய்கிறார். (சா) காலக்ர்தபரிணாமமில்லாத தேசத்தி லுள்ளார்க்கும் ஸ்வஸத்தை உள்ளவளவும் விஷயவைலக்ஷண்யத்தைப்பற்ற அதிசங்கையும் மங்களாசாஸநமும் நித்யமாய்ச்செல்லாநின்றது; காலக்ர்த பரிணாமமுள்ள தேசத்திலே இருக்கிறவர்க்கு அதிசங்கையும் அத்தால் வந்தபயமும், பயநிவர்த்திக்காகக் காலத்தைப்பெருக்கி, இக்காலமுள்ளத னையும் இப்படி மங்களாசாஸநம்பண்ணச் சொல்லவேணுமோ, இப்படி மாறிமாறி பயத்தைவிளைத்துக் காலத்தைப்பெருக்கி இதுவேதமக்கு யாத் ரையாய்ச்செல்லப்புக்கவாறே, அவன், "இவருடைய பயத்தைப்பரிஹரி க்கவேணும்" என்று பார்த்து, "புலிகிடந்த தூற்றுக்கு அஞ்சிக்காவல்தே டுவாரைப்போலே நீர் நமக்கு அஞ்சக்கடவீரோ! மல்லவர்க்கத்தை நிரஸி த்ததோளிருக்கிறபடி பாரீர்!" என்று தோள்வலியைக்காட்டினான்:ராவணா நுஜனைக்குறித்து மஹாராஜர்க்குப் பிறந்தபயத்தைப் போக்குகைக்காகத் தன்மிடுக்கைக்காட்ட அவர் பயம்சமிக்கக்காணாமையாலே, "இவ்விஷயத் திலும் பலிக்கும்" என்று மிடுக்கைக்காட்ட, இவர்க்கு இதுதானே பய ஹேதுவாய்த்து. மஹாராஜர் பயத்தைத் தீர்த்தபடி யென்னென்னில்; "பிஸாசாநுதாநவாநுயக்ஷாநு-பிஸாசாந்தாநவாந்யக்ஷாந்" "கள்ளர்,பள் ளிகள், வலையர்" என்னுமாப்போலே (எ) ஹிம்ஸகருடைய (அ) அவாந்தர பிதையிருக்கிறபடி. "ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந்" லங்கையிலுள்ள ராக்ஷஸரளவன்றிக்கே, * பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையான பூமியிலுள்ள ராக்ஷஸரெல்லாரும் எதிரிகளானாலும்,

(க) ஆதராதிசயம் - அன்பின் மிகுதி. (உ) த்ர்ஷார்த்தன் - தாஹத்தாலேபீடிக் கப்பட்டவன். (ங) சமித்தல்-தணிதல். (ச) அஸங்க்யாதத்வம் - எண்ணில்லாமை. (ரு) உதயமில்லை-உதிக்கவேண்டுவதில்லை. (சா) காலக்ர்தபரிணாமம் - காலத்தால்பண் ணப்படும் வேறுபாடு. (எ) ஹிம்ஸகர்-கொடுந்தொழிலோர். (அ) அவாந்தரபேதை - உட்பிரிவு.

[illegible]ணகாநுஷநஹ்ராழ அங்குல்ய க்ரோணதாம்ஹஸ்யாம். ஆக, சத்ரு [illegible]களெல்லாம் ஒரு கலத்திலே உண்டு எதிரிட்டாலும் இவற்றினுடைய நிரஸநத்துக்கு அஸ்த்ரசஸ்த்ரங்கள்வேணுமோ, க்ஷுத்ரக்ரிமிகளை நிரஸிக்குமோபாதி (க) அங்குல்யக்ரத்தாலே நிரஸிக்கவல்லோங்காணுமென்றார். ஆனால் நம்மை நலிந்த ப்ரதிபக்ஷம் நசியாதேகிடக்கிறதென்னென்னில்; "அழிப்போம்" என்னும் இச்சையில்லாமை; இச்சையுண்டானால் அழிக்கையில் அருமையில்லை. அதுதனக்கு அடியென்னென்னில்; உயிரோடே தலைசாய்க்குமாகில் அழிக்கிறதென்! என்னுமிரக்கத்தாலே. இவ்வார்த்தை ராமபாக்யத்தாலே மஹாராஜர் நெஞ்சில்பட்டு பயநிவர்த்திக்குடலாய்த்து; இவர்க்கு இதுதானே பயஹேதுவாய்த்து.

(மல்லாண்டதிண்டோள்) மல்லவர்க்கத்தை ஸ்வாதீநமாகப்பண்ணின திண்ணியதோள். பிற்பாடரான கம்ஸாதிகளை அநாயாஸேந கொல்லுகையாலே திண்ணியதோளென்கிறது. "மல்" என்று-மிடுக்காய், அத்தை யடிமைகொண்ட திண்ணியதோளென்கிற தாகவுமாம். இம்மிடுக்கு இவர்க்கு பயஹேதுவாவானென்னென்னில்; சூரனை புத்ரனைக்கண்டால், பெற்றதாய், "இவன்மதியாதே யுத்தத்திலேபுகும், என்வருகிறதோ!" என்று பயப்படுமாப்போலே பயப்படுகையுக்தம். "மல்லையழியச்செய்த தோள்" என்று இவரறிந்தபடியென்னென்னில்; காதில்தோடுவாங்கினாலும் "தோடிட்டகாது" என்று அறியுமாப்போலே.

(மணிவண்ணா) நீலமணிபோலேயிருக்கிறதிருநிறத்தையுடையவனே. (உ) அதிரமணீயமாய் அத்யுஜ்ஜ்வலமாய் அதிஸுகுமாரமாய் அதிஸுலபமாயிருந்துள்ள வடிவைக்கொண்டு முரட்டசுரர்களுடைய (ந) ஸகாசத்திலே செல்லுவதே!, "க்வ யௌவநோந்முகீபூத ஸுகுமாரதநுர்ஹரி: க்வ வஜ்ரகடிநாபோக ஶரீரோயம்மஹாஸுர:" க்வயௌவநோந்முகீபூத ஸுகுமாரதநுர்ஹரி:। க்வவஜ்ரகடிநாபோக ஶரீரோயம்மஹாஸுர:" என்று - வெண்ணெயமுதுசெய்து வளர்ந்த சிறுபிள்ளையை, முரட்டுவடிவையுடைய மல்லரோடே ஒக்கப்பொரவிடுவதே!, "நஸமம்யுத்தமித்யாஹு:" "நஸமம்யுத்தமித்யாஹு:" என்று கூப்பிட்டார்களிறே ஸ்ரீமதுரையிற் பெண்கள். ஸௌகுமார்யம் பயஹேதுவாகிறது, ஸௌலப்யம் பயஹேதுவோவென்னில்; அஸுரநிரஸநார்த்தமாக தேவதைகள் சரணகதியைப் பண்ணினமாத்ரத்திலே, ஸுலபனாய் அஸுரர்களாஸ்யத்திலேபுகும் என்று அத்தாலே பயப்படுகிறார்.

ஆச்ரிதர்க்குத்தஞ்சமான ஸௌலப்யத்தையும் மிடுக்கையுங்கண்டால் நீரிங்ஙனே அஞ்சக்கடவீரோவென்ன (உன்செவ்வடி) அது என்னால் வருகிறதன்று, உன்வடிவின் வைலக்ஷண்யத்தாலேவருகிறது. நீதான் உன்னைக் கண்ணாடிப்புறத்திலே கண்டால், ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான நீயும் கலங்கிப்

(க) அங்குல்யக்ரம் - சுண்டுவிரலின்முனை. (உ) அதிரமணீயமாய் - மநதுக்கு இனியமாய். (ந) ஸகாசம் - ஸமீபம்.

பரியவேண்டும்படியன்றோ உன்வடிவிருப்பது. (செவ்வடி) செவ்விய அடி யென்னுதல்; சிவந்தஅடியென்னுதல். (க) குடிலஹ்ருதயர்க்கும் செவ்வி தாகையும், திருமேனிக்குப் பரபாகமாகையும், இரண்டும் இவர்க்கு பயஸ்தா நமாகிறதிறே. சேஷபூதன் சேஷிவடிவைக்கண்டால் "திருவடிகள்" என் றிறே (உ) வ்யவஹரிப்பது. ஆச்ரயணவேளையோடு போகவேளையோடு மங்களாசாஸநவேளையோடு வாசியற ஆச்ரிதரிழியுந்துறை திருவடிகளிறே. (செவ்வி) "அருமபிணையலரை" என்னுமாப்போலே நித்யயௌவநமாயிரு க்கை.

(திருக்காப்பு) குறைவற்ற ரக்ஷை; உண்டான அமங்களங்கள்போகைக் கும் இல்லாத மங்களங்களுண்டாகைக்கும் பண்ணின ரக்ஷையென்கை. ஒரு (௩)க்ரியையின்றிக்கே குறைந்திருப்பானென்னென்னில்; தாழ்ந்தாரைக்கு றித்து "ரக்ஷையுண்டாயிடுக" என்றும், ஸமரைக்குறித்தும் பரிச்சிந்நமான உத்கர்ஷமுடையாரைக்குறித்தும் "ரக்ஷையுண்டாகவேணும்" என்றும் சொல்லக்கடவது. தமக்கும் ஈஸ்வரனுக்குமுண்டான நிரவதிகமான(௪) உ த்கர்ஷாபகர்ஷத்தாலே பாசுரமில்லாமையாலே குறைந்துகிடக்கிறது; வே தாந்தத்தாலே நாட்டையடைய வெனறிருக்கிற இவர் லக்ஷணத்தில்விழக் கவிபாடமாட்டாமையன்றிறே: இன்னமும இவ்விஷயத்திலே மங்களாசாஸ நமபண்ணினோம்" என்று கைவாங்கவொண்ணாத (௫) அபர்யாப்திக்கு (௬) ஸூசகமாயிருக்கிறது.

எல்லாப்பாட்டுக்கும இதுதான் முகவுரைபோலேயிருக்கிறது.

"மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா! பல்லாண்டு, பல்லாண்டு, ப ல்லாயிரத்தாண்டு, பல்கோடிநூறாயிரம - உன்செவ்வடிசெவ்வி திருக்கா ப்பு" என்றந்வயம.

## அரும்பதம்.

பல்லாண்டுஇத்யாதி—வ்யாக்யாதஇதிஶேஷ:, மணிவண்ணா, பல்லா ண்டித்யாதி, செவ்விதிருக்காப்பு, என்கிறபதங்களைக்கடாக்ஷித்து அவதா ரிகை ஸௌந்தர்யேத்யாதி—இத்தால் - இக்காலத்தால்—இச்செவ்வி-கீழ் ச்சொன்ன ஸௌந்தர்யாதிகள்—நாள் என்னாதே ஆண்டென்று விசேஷித் ததுக்குத் தாத்பர்யம் அல்லாதஇத்யாதி—அவச்சேதகங்கள் என்றது விபா ஜகதயாகாலவ்யாவர்த்தகங்களை; அவையாவன-நிமேஷகலாகாஷ்டாதிகள்- இப்படிஆயுஸ்ஸை ப்ரார்த்தித்தாருண்டோவென்ன "யாஓஷதீ" இத் யாதி—"வ்யாஜஹார..." என்றபிராட்டியுடைய விஸ்லே ஷத்தால் இவர்க்கென்னதீங்குவருகிறதோவென்று நினைத்திருக்கிற இவர் "ஆயுஷ்மந்" என்றுஸம்போதிக்கையாலே ஆயுஸ்ஸையுடையீராவீரென் றுப்ரார்த்தித்தாரென்று கருத்து. ஆண்டென்றால் ஆயுஸ்ஸைக்காட்டுமோ

---

(க) குடிலஹ்ருதயர்-கொடிய மனதுடையவர்கள். (உ) வ்யவஹரிப்பது-சொல் லுவது. (௩) க்ரியை-பயனிலை. (௪) உத்கர்ஷாபகர்ஷம்-உயர்வு தாழ்வுகள். (௫) அபர் யாப்தி - நிறையாமை. (௬) ஸூசகம்-குறிப்பு.

வென்ன, "வேதநூல்" இத்யாதி—"ஶதாயு:" என்ற ஶ்ருதியைப்பற்ற வேதநூல்என்றது—பிராயம்-வத்ஸரம்—இந்தபஹுவசநத்துக்கென்றது-பலவென்கிறதுக்கு என்றபடி. முக்யார்த்தமாகையாலே என்றது-அஸங்குசிதார்த்தமாகையாலே யென்கை. சதாதிகளைச்சொன்னால் ஸங்குசிதமாமென்றுகருத்து—நாள்என்னாதே ஆண்டுஎன்று காலதத்வத்தைப் பெருக்குகிறதுக்கு நியாமகாந்தரம்காட்டுகைக்காகஅர்த்தாத்ஸ்வரூபபோதகமுமாயிருக்கிறதென்கிறார் பல்லாண்டென்கிற இத்யாதி—அதுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் உத்க்ருஷ்டனாய் இத்யாதி—இத்தை ப்ராக்ருதத்துக்குச்சேர உபபாதிக்கிறார் ஸர்வேஶ்வரன் இத்யாதி—உத்கர்ஷாபகர்ஷங்கள் ஸாவதிகங்களாதல் ஸோபாதிகங்களாகக் கண்டோமிறே என்றுகருத்து—காலத்தைப்பெருக்குகையன்றோ வேண்டுவது, இவ்வர்த்தம்தோன்றும்படி இந்த சப்தம்ப்ரயோகிப்பானென்னென்ன, மேல்பண்ணுகிற இத்யாதி—மேல்என்றதுக்குக்கருத்து - திருக்காப்பென்றதிலேநோக்கு—ஆனாலும் ஜிதமித்யாதிகளோபாதி இது ஸ்வரூபவாசியாமோவென்ன, ஜிதமித்யாதி—ஈஶ்வராபிமாநி புண்டரீகாக்ஷனை ஜிதமென்கையாலே ஸ்வரூபஞ்ஜனாய்ச்சொன்னதென்றுதோன்றுகையாலும், "தொலைவில்லிமங்கலந்தொழும்" என்கையாலே, ஸ்வரூபஞ்சொல்லிற்று என்கிறபடியே, மத்யமபதம்ஸ்வரூபவாசகமாகையாலும், "தோற்றோம்மடநெஞ்சம்" என்றுஇருளுக்குத்தன்ஸ்வரூபஞ்சொல்லுகையாலும், "போற்றியென்றேகைகளாரத்தொழுது சொன்மாலைகள்" என்ற இடத்தில் ஸ்வரூபவாசகமாகையாலும், இவற்றோபாதிஇதுவும்என்று தாத்பர்யம்—அர்த்தபேதமிருக்க,பர்யாயமென்னவொண்ணாதே என்கிறசங்காநுவாதம்பண்ணி, பரிஹரிக்கிறார் இந்தசப்தமுமித்யாதி-விழுக்காட்டாலேயென்றது-அர்த்தாத்என்றபடி—இந்த சப்தங்களுக்கு ப்ரவ்ருத்திநிமித்தங்களையும், ஆத்மஸ்பர்ஶிகளாகிற ப்ரகரணங்களையும்வ்யக்தமாக அருளிச்செய்கிறார் ஜிதமென்றித்யாதி—வெற்றிக்கு-ஜயத்துக்கு-மேலெழுத்திடுகை - ஸம்மதிக்கையென்றபடி—இதுவும் - நமஶ்ஶப்தமும் ஜிதம்என்றதுக்கும், தோற்றோம்என்றதுக்கும் பேதம்மேலெழுத்திடும் என்கையாலும், தனக்குப்ரயோஜநம் என்கையாலும் கண்டுகொள்வது—அதாவது-ஜிதம்என்றுஜயம் - அத்தலைக்கும் தோற்றோம் என்றுஜயம்-இத்தலைக்கும் ப்ரயோஜநமென்கை—உக்தார்த்தநிகமநம்-ஆக இத்யாதி—"அந்திதொழுஞ்சொல்" என்கையாலே, பலம்சொல்லிற்றென்கிறபடியே, மத்யமபதம்போலே இந்தசப்தங்களெல்லாமென்று திருவுள்ளம்பற்றி, ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியையும் என்கிறார்—ஸர்வஜ்ஞத்வாதிகளைமறந்து,மங்களாசாஸநம்பண்ணுகிறபக்ஷத்திலே சங்காநுவாதம்பண்ணுகிறார் மறித்துஇத்யாதி—மறித்து - புநரபி—மங்களாசாஸநம்சேஷத்வகார்யமாகச்சொன்னபக்ஷத்தில் சங்காநுவாதம்பண்ணுகிறார் அகவாய்இத்யாதி—எதிர்சூழல் புகுகை-சேதநவஶீகரணார்த்தமாக எதிராகச்சுற்றிவருகை; அதாவது அந்தர்யாமியாயிருக்கை—த்விதீயசங்காபரிஹாரம் அவனுடையஇத்யாதி—ப்ரதமசங்காபரிஹாரம் த்ருஷார்த்தன்இத்யாதி-கீழில் பஹுவசநமென்றது பல்லாண்டென்கிறதைப்பற்ற—இதுக்கு- பல்லாயிரத்தாண்டென்றதுக்கு—

பலகோடி நூறாயிரமென்றதுக்கு முபலக்ஷணம்; மேலிதுக்கும் பரிஹாரஞ்சொல்லுகையாலே—கீழில் பல்லாயிரத்தாண்டென்கிற இடத்தில் அஸங்க்யாதகாலதத்வஞ்சொல்லுகையால், அதிலுங்குறைந்து ஆயிரமென்றும் பலகோடியென்றும் ந்யூநகாலத்தையிட்டு மங்களாசாஸநம்பண்ணுமது ஆதரகார்யமாகக்கூடாது, ஸமாதிககாலங்களையிட்டு மங்களாசாஸநம்பண்ணுமதுவே ஆதராதிசயகார்யமாகையாலேயென்று இச்சங்கைக்குக்கருத்து—"யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" என்கிறஶ்ருதியில், ஸர்வவிசேஷ்யக ஞ்ஜாநத்வரூபேண ஸர்வஜ்ஞாநம்முதல்பதத்துக்கும், ஸர்வப்ரகாரகஜ்ஞாநத்வரூபேண ஸர்வஜ்ஞாநம்இரண்டாம் பதத்துக்கும், அர்த்தபேதம்சொல்லி, பௌநருக்த்யம்பரிஹரிக்குமாபோலே, "பல்லாண்டுபல்லாண்டு" என்றதற்குஅஸங்க்யாததேவவர்ஷத்வே எனவும், "பல்லாயிரத்தாண்டு" என்றஇடத்திலே ப்ராஹ்மஸம்பந்தாஸங்க்யாதவர்ஷத்வே எனவும், "பலகோடி நூறாயிரம்" என்றஇடத்தில் அஸங்க்யேய ப்ராஹ்மாக்களுடைய அஸங்க்யாத வர்ஷத்வே எனவும் காலதத்வமெல்லாம் அர்த்தமாகச்சொல்லி,பௌநருக்த்யம்பரிஹரிக்கிறார் அவச்சேதகங்களுக்கித்யாதி—அவச்சேதகங்களுக்கு - காலவ்யாவர்த்தகங்களுக்கு—தொகையில்லை-இயத்தாநிஷ்கர்ஷமில்லை—அவச் சேதகங்கள்தானெவையென்ன, வர்ஷத்துக்கித்யாதி—வர்ஷம் - ஸம்வத்ஸரம்—இப்படிகாலத்தைப் பெருக்கவேணுமோ காலமெல்லாமென்னுமேயென்ன,காலக்ருதபரிணாமமுள்ள தேசமென்றுதோற்றுகைக்காக என்னுநின்றுகொண்டு, "ஸஹஸ்ராந்த ஸஹஸ்ராந்தம்" என்றத்தை உட்கொண்டு, கைமுத்திகந்யாயத்தாலே ஸாதிக்கிறார் காலக்ருதேத்யாதி—மங்களாசாஸநம்பண்ணவென்றது - மங்களாசாஸநம் பண்ணுகையும் என்றபடி—"மல்லாண்டதிண்டோள்" என்றதுக்கு அவதாரிகை இப்படிஇத்யாதி—பார்த்து என்ற அநந்தரம் ஸர்வேஶ்வரன் என்று அத்யாஹார்யம்—நூறு - நிருஞ்ஜம்-தோள்வலியைக்காட்டினான் என்னுநின்றீர், இது கைக்கொண்டானேவென்ன, ராவணாநுஜனையித்யாதி—இவ்வாக்யத்தை சங்காபரிஹரிக்கிறார். மஹாராஜர்இத்யாதிபயஹேதுவாயிற்று என்னுமளவும்—இந்தசங்கைக்கு இவ்வார்த்தையென்கிற வாக்யபர்யந்தம்பரிஹாரம்"ஹநிஷ்ய" என்கையாலே-எதிரிகளானதும்என்றது-அர்த்தஸித்தம்--தான்என்கிறதச்சப்தபஹுவசநத்தாலே எல்லாரையுங் கூட்டினதுக்குத் தாத்பர்யம் ஆக இத்யாதி—இச்சைஎன்றதுக்கு சங்காபரிஹாரரூபேண தாத்பர்யம்ஆனால் இத்யாதி—அது தனக்கென்றது - இச்சையில்லாமைக்கென்றபடி—"யதிவாராவணஸ்வயம்" என்றதைப்பற்ற உயிரோடே இத்யாதி—இவ்வார்த்தை - இந்தஶ்லோகம்—ராமபாக்யத்தாலே என்றதுக்குத்தாத்பர்யம் - மஹாராஜருக்குப் பெருமாளிடத்தில் ப்ரேமாதிசயத்தாலே இவ்வார்த்தைநெஞ்சிற்படாதே பயஹேதுவாகச்செய்தேயும் விபீஷணலாப ஹேதுவானமஹா பாக்யத்தாலேயென்று-இதுதான்- இந்தமிடுக்குத்தான்—ஆகையாலே மங்களாசாஸநம்பண்ணுகைக்குத் தோள்வலியையிட்டு ஸம்போதிக்கிறானென்று "மல்லாண்டதிண்டோள்" என்றத்தோடேகூட்டுவது—மல்லவர்க்கம்என்றது-விகடஸகலகௌஸலப்ரப்ருதிகளை—"ஆண்ட" என்றதின் தாத்பர்யம்-ஸ்வாதீ

மாக வென்றது—மல்லலையாளும்போது திண்மை அர்த்தஸித்தமன்றோ; "திண்" என்று, விசேஷிப்பானென்னென்ன, பிற்பாடரித்யாதி—"மல்", என்றுசக்திவிசேஷமாய், ஆளுகை-உடைமையாய்; திண்மை-காடிந்யமாய், மிடுக்கையுடைத்தான திண்ணியதோள் என்கிறார் மல் என்றித்யாதி—மதியாதே-எண்ணாதே—முதல் அர்த்தத்தைசங்கித்து பரிஹரிக்கிறார் மல்லையித்யாதிக்ருஷ்ணவதாரத்தில் விக்ரஹம்போலேஸேவைஸாதிக்கையாலே, அருளிச்செய்கிறார் காதில்தோடுஇத்யாதி—தோடு-தாடங்கம்—சப்தார்த்தம்நீலமணிஇத்யாதி—கீழ்பதத்தோடேகூட்டி, "மணிவண்ணா" என்றதுக்கு, அர்த்தாந்தரம் அதிரமணீயமித்யாதி—வண்ணம்-வடிவு—ரமணீயம் - மநோஹரம்—உஜ்வலம் - தேஜிஷ்டம்—ஸுகுமாரமென்றது ஸ்நிக்தமதையாலே—ஸுலபமென்றது முடிந்தாளலாம்படியிருக்கையாலே - ஸௌகுமார்யத்துக்கஞ்சிக்கூப்பிட்டார்களுண்டோவென்ன "ஸுயமவந" இத்யாதி—ஶ்லோகார்த்தம் வெண்ணெயித்யாதி—பொர-யுத்தம்பண்ண—முந்தினஎன்று என்றபதத்தை "நவஸூ"என்றதுக்குமுன்னே கூட்டுவது—என்று என்கிற இரண்டுபதத்திலும் சகாரம்அத்யாஹார்த்தம்—ஸௌலப்யம் பயஹேதுவாகிறபடியை சங்காபூர்வகமாக உபபாதிக்கிறார் ஸௌகுமார்யமித்யாதி—"மல்லாண்ட" என்கிறபதத்தையும், "மணிவண்ணா" என்றதிஸிரண்டாம்அர்த்தத்தையும் அவலம்பித்து, அவதாரிகைஆஶ்ரிதர்க்கித்யாதி—எமக்கு முபயுக்தமான என்றுகூட்டுவது—ஆஶ்ரிதர்க்குஸௌலப்யம் நமக்கு மிடுக்கென்று யோஜிப்பது—வ்யாவ்ருத்திபூர்வகமாக அன்று என்கிறதுக்குத் தாத்பர்யம் அதித்யாதி—உக்தார்த்தத்தைகைமுத்திகந்யாயேந த்ருடீகரிக்கிறார் நீதானித்யாதி—"அடி" என்றதைத்திருமேனிக்கு உபலக்ஷணமாக்கி, அடி என்றது—மிடுக்கும் ஸௌகுமார்ய ஸௌலப்யங்களும் பயஹேதுவானவோபாதி, ஆர்ஜவஸௌந்தர்யங்களும் பயஹேதுக்களென்றருளிச்செய்கிறார் முடிலேத்யாதி—திருமேனியென்னாதே அடியென்பானென்னென்ன, சேஷபூதனித்யாதி—ஆஶ்ரயணவேளையிலன்றோ திருவடிகளைப் பற்றுவது; மங்களாசாஸநவேளையில் இப்படிச் சொல்லுவானென்னென்ன, ஆஶ்ரயணேத்யாதி—"அடிக்கீழ்" என்கையாலும், "பாதபற்புத்தலைசேர்த்து" என்கையாலும், "அடிபோற்றி" என்கையாலும், எப்போதும் அடிவிடார்களிறே யென்றுகருத்து—ப்ரமாணகதநபூர்வகமாகத் தாத்பர்யம் "அரும்பினை" இத்யாதி—அரும்பினையலரை - முகுளமென்னவுமாய் மலரொன்னவுமாயிருக்கைஸ்வபாவமாகையாலே;—நித்யயௌவனம்பவிதம்—"திரு"என்றதுக்கர்த்தம் குறைவற்றவென்றது. இதைவிவரிக்கிறார் உண்டான இத்யாதி—உண்டாயிடுகவென்றது - அநுக்ரஹம்தோற்றச் சொல்லுகை—உண்டாகவேணுமென்றது-ப்ரார்த்தனைதோற்றச்சொல்லுகை;—இப்படிச் சொல்லுகைக்குநியாமகம்வேதாந்தேத்யாதி நாட்டையடையவென்றது-நாட்டில் விஶ்வஜநங்களையெல்லாமென்றபடி—வென்று - ஜயித்து—லக்ஷணத்தில் என்றது-லக்ஷணேபேதமாக என்றபடி—கீழில்சங்கைக்கு பரிஹாராந்தரம் இன்னமுமித்யாதி—மூன்றும் பரிஹாரம் எல்லாப்பாட்டுக்கு மித்யாதி—முகதுணா-ஸ்ரீமுகங்களிலே ஸ்ரீமதேராமாநுஜாயநம: என்று மங்களார்த்தமாக

முன்னேசொல்லும் பாசுரம்; அதில் அர்த்தஸித்தமாகையால் அல்லாளென்கிற க்ரியையில்லாதாப்போலே இங்குமென்றுகொள்வது; அதாவது ப்ரபந்தாதியில்நமஸ்காராசீஸ்ஸுக்கள்வேண்டுகையால் மங்களார்த்தமாகக் காப்பென்று பாட்டுக்களுக்குமுன்னே சொல்லப்படும் பாசுரமென்கை;—ஆகையால் இதுக்குக்ரியை வேண்டாவென்று கருத்து;—அன்றிக்கே, முகவுரையாவது-ராஜக்ருஹங்களில் கர்ணிகர்கள் ஆயவ்ரயங்களையெழுதும் பத்ரிகைகளுக்குமுன்னே இன்னவர்ஷம் இன்னமாஸம் என்றெழுதும் பாசுரம். அதுதான்முதலடியில் ஒருகாலெழுத்துப்பட்டதாயினும் முடிய அந்வயித்துக்கிடக்குமிறே, அதுபோலே இப்பாட்டும் மேற்பாட்டுக்களுக்கடைய அந்வயிக்கும்போது, க்ரியையுண்டாகி, நிராகாங்க்ஷயுமாகையாலே மேலோடேஅந்விதமாமிறே; ஆகையால், இந்தப்பாட்டில் ஒருக்ரியையில்லாமலிருக்கிறதென்றுமாம்—முகவுரையென்று பாடமாம்போது நாயகக் கல்லுபோலே பாட்டுக்களுக்கெல்லாம் ப்ரகாசகமாயிருக்குமென்று அர்த்தவிசேஷமருளிச்செய்தாரென்றுகருத்து.

---

## இரண்டாம்பாட்டு.

அடியோமோடுநின்னோடும்பிரிவின்றியாயிரம்பல்லாண்டு
வடிவாய்நின்வலமார்பினில்வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு
வடிவார்சோதிவலத்துறையுஞ்சுடராழியும்பல்லாண்டு
படைபோர்புக்குமுழங்குமப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டே.

(இ-ள்.) அடியோமோடும் - சேஷபூதரானவெங்களோடும், நின்னோடும்-சேஷியானவுன்னோடும், பிரிவின்றி - பிரிவில்லாமல், ஆயிரம்பல்லாண்டு-இந்தஸம்பந்தம் நித்யமாய்ச்செல்லவேணும்; வடிவாய்-ஆபரணபூஷிதையாய், நின் - ஸர்வசேஷியானவுன்னுடைய, வலமார்பினில்-வலத் திருமார்விலே, வாழ்கின்ற - பொருந்திவர்த்திக்கிற, மங்கையும்-நித்ய யௌவநஸ்வபாவையான பெரியபிராட்டியார் தொடக்கமான நாய்ச்சிமார்களும், பல்லாண்டு-நித்யமாய்ச்செல்லவேணும்; சோதி-தேஜோராசியாயிருக்கிற, வடிவுஆர் - வடிவையுடையனாய், வலத்து - உன் வலத்திருக்கையிலே, உறையும் - நித்யவாஸம்பண்ணுமவனாய், சுடர்-பகைவனையெரிக்குமவனை, ஆழியும்-திருவாழியாழ்வானும், பல்லாண்டு - நித்யமாய்ச்செல்லவேணும்; படை-ஆயுதமாய், போர் - யுத்தத்திலே, புக்கு-புகுந்து, முழங்கும்-கோஷியாநின்றுள்ள, அப்பாஞ்சசன்னியமும்-அந்தப் பாஞ்சஜந்யாழ்வானும், பல்லாண்டு-நித்யமாய்ச்செல்லவேணுமென்கிறார்—எ-று.

(தா-ம்.) சேஷபூதரான எங்களோடும், சேஷியான உன்னோடும் பிரிவின்றிக்கே பல்லாயிரமாண்டு மங்களமாய்ச் செல்லவேணும்; உன்வலத் திருமார்பிலேஆபரணபூஷிதையாய்வாஸம்பண்ணுகிற நித்யயௌவநத்தையுடைய பெரியபிராட்டியும்ஸர்வகாலமும் மங்களமுண்டாயிருக்கவேணும்; திருமேனியில் வ்யாப்தமான தேஜஸ்ஸையுடைய பிறர்க்கு அநபிபவநீயனாயிருக்கிற திருவாழியாழ்வானும் எப்போதும்

மங்களமுண்டாயிருக்கவேணும்; ஸேனைகளையுடைய யுத்தத்தில் ப்ரவேசித்தகோ ஷிக்கிற பாஞ்சஜந்யாழ்வானும் எப்போதும் மங்களமுண்டாயிருக்கவேணும் என்பதாம்.

அ-கை.—இரண்டாம்பாட்டு. கீழ்-விக்ரஹயோகத்தையும் குணயோகத்தையுங் குறித்து மங்களாசாஸநம் பண்ணினார்; இதில்-உபயவிபூதியோகத்தைக்குறித்து மங்களாசாஸநம் பண்ணுகிறார்.

வ்யா.—(அடியோமோடும்நின்னோடும்பிரிவின்றியாயிரம்பல்லாண்டு) (அடியோமோடும்) தம்மைப்பேணாதே மங்களாசாஸநம்பண்ணுகிறவிவர், தம்முடைய (க) நித்யதையை ப்ரார்த்திப்பானென்னென்னில்; ஒரு ஸாத்யத்தைக்குறித்து ஸாதநாநுஷ்டாநம் பண்ணுமவர்கள் "ஆயுராஸாஸ்தே" என்று ஆயுஸ்ஸை ததங்கமாக ப்ரார்த்தியா நின்றார்களிறே; அதுபோலே, "மங்களா சாஸநத்துக்குத் தாம்வேணும்" என்று தம்மையுங் கூட்டிக்கொள்ளுகிறார். அத்தலைக்குப்பரிகைக்குத்தாமல்லது இல்லாமையாலே; தாமில்லாதபோது அத்தலைக்கு அபாயம்ஸித்தமென்றிருக்கிறாரிறே. ஆனால் "என்னோடும்" என்னாதே "அடியோமோடும்" என்பானென் னென்னில்; தேஹாத்மாபிமாநி, தேஹத்திலே ஆத்மபுத்திபண்ணும்; மாயாவாதி, அஹங்காரத்திலே ஆத்மபுத்திபண்ணும்; ஸாங்க்யன், "அஹமர்த்தம் ப்ரக்ருதேஃபரம்ஸ்வயம்ப்ரகாஸம்ஸ்வதந்த்ரம்" என்றிருக்கும; அங்ஙன் கலங்கினவரன்றிறே இவர். முறையறியுமவராகையாலே "அடியோம்" என்றார். (உ) "கர்மோபாதிகமாக வந்தவவஸ்தைகளெல்லாம் மறைந்தாலும் மறையாதஸ்வபாவம்தாஸ்யம்" என்றிருக்குமவரிறேயிவர். ஆனால் "அடியோமோடும்" என்கிற பஹுவசநத்துக்குக் கருத்தென்னென்னில்; தாம் தனியராய்நின்று மங்களாசாஸநம் பண்ணுமத்தால் (௩) பர்யாப்திபிறவாமையாலும், ஸர்வாத்மாக்களுக்கும் (௪) சேஷத்வம் அவிசிஷ்டமாகையாலும், இப்ப்ரதிபத்தி அவர்களுக்கின்றிக்கே யிருக்கச்செய்தேயும் (௫)ஸ்வாபிப்ராயத்தாலே யருளிச்செய்கிறார். (நின்னோடும்) வ்யாவர்த்தமானசேஷித்வம் மங்களாவஹமாகையாலே ஸர்வரும் கூடிப்பரிந்தாலும்போராதபடியாயிறேயிருப்பது.—இத்தால் - திவ்யாத்மஸ்வரூபத்தைப்பற்றி மங்களாசாஸநம் பண்ணுகிறார்.—(பிரிவின்றி) இரண்டுதலையும் நித்யமான வோபாதி,ஸம்பந்தமும் நித்யமாயிறேயிருப்பது; அதுவும் தம்முடைய மங்களாசாஸநத்தாலே யுண்டாவதாக நினைத்திருக்கிறார். (ஆயிரம்பல்லாண்டு) காலதத்வமுள்ளதனையும் இஸ்ஸம்பந்தம் நித்யமாய்ச்செல்ல வேணுமென்கிறார்.

(வடிவாயித்யாதி) உண்டான அமங்களங்கள் போகைக்கும் இல்லாத மங்களங்களுண்டாகைக்கும் தன்கடாக்ஷமே யமைந்திருக்கிறவிவள், "அ

---

(க) நித்யதை-நிலைநிற்குந்தன்மை. (உ) கர்மோபாதிகமாக -கர்மரூபமான ஹேதுவினாலே. (௩) பர்யாப்தி - த்ருப்தி. (௪) சேஷத்வம் அவிசிஷ்டம் - சேஷத்வம்ஸமானம். (௫) ஸ்வாபிப்ராயம்-தம்முடையகருத்து.

கலகில்லேன் இறையும்” என்று நம்மைப்பிரியமாட்டாதேயிருக்க, நமக்கு வருவதொரு அமங்களமுண்டோ, (க) என்றியபடுகிறீரென்ன; தேவரீரும் பிராட்டியுமானசேர்த்தி நித்யமாய்ச்செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுகிறார். (வடிவாய்வு) “வடிவு” என்று-நிறமாய், இவளோட்டைச் சேர்த்தியாலே திருமேனிக்குண்டான புகரைச்சொல்லுகிறது. “ஙுப்ரயெயம்ஹிதஜொயஸஹஸாஜநகாத்ஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜோயஸ்யஸாஜநகாத்மஜா” என்று - ஸ்ரீஜநகராஜன்திருமகளை எனக்கென்ன இட்டுப்பிறந்ததத்வத்தோடே எதிரிட்டு வெல்லநினைக்கிறாயோ என்றானிறேமாரீசன். “ஶ்ரத்தயாதெவொதெவக்ஷமஶ்நுதெ - ஶ்ரத்தயாதேவோதேவத்வமஶ்நுதே” என்னக்கடவதிறே. ஆனால் இவளாலே அவனுக்கு உத்கர்ஷமாகில் அவனுடையசேஷித்வம் குலையாதோவென்னில்; மாணிக்கம் ஒளியாலே (உ) பெருவிலையனாங்காட்டில் மாணிக்கத்தினுடைய (ந) ப்ராதாந்யமழியுமோ; பூமணத்தாலே பெருவிலையனாங்காட்டில் பூவுக்கு ப்ராதாந்யமழியுமோ. (வடிவாய்) ஸ்ரீகௌஸ்துபாதிகள்போலே ஆபரணபூதையாய். அத்தால்வந்த அழகைச்சொல்லவுமாம். (நின்வலமார்பினில்) ஸர்வாதிகனான வுன்னுடைய வலமார்வினில். (ச) ஸர்வயஜ்ஞமயமாய்(ரு) யோகிசிந்த்யமாயிறே வடிவிருப்பது. (வலமார்பினில்) அணைக்கைக்கு அணித்தாயிருக்கை. (வாழ்கின்ற) மார்விலிருப்புத்தானே நித்யமாய் போகரூபமாயிருக்கை. அம்மார்விலே யிருக்கச்செய்தேயும் “இறையும்- அகலகில்லேன்” என்று அதிசங்கைபண்ணும்படியிறே போக்யதையிருப்பது. (மங்கையும்) “யுவதிஶ்சகுமாரிணீ - யுவதிஶ்சகுமாரிணீ” என்கிற பருவத்தைச்சொல்லுகிறது. “யுவாகுமாரः - யுவாகுமாரः” என்று இவ்விரண்டவஸ்தையுமுண்டு அவனுக்கு; இவளுக்கு கௌமாராவஸ்தையால் வந்த (சு) மௌக்த்யமேயுள்ளது. யுவதியுமாகக்கடவள். எங்ஙனேயென்னில்; (எ) போகஸ்ரோதஸ்ஸில்வந்தால் இவள் தளர்த்திக்கு அவன் கைகொடுக்கவேண்டும்படியான மௌக்த்யத்தைச் சொல்லுகிறது. (மங்கையும்) (அ) சசப்தத்தாலே - மஹிஷ்யந்தரத்தைச்சொல்லுதல்; மங்களாவஹையானவிவளும் ஆசாஸ்யையென்னுதல். (பல்லாண்டு) காலதத்வமுள்ளதனையும் இச்சேர்த்தி நித்யமாய்ச்செல்லவேணும்.

(வடிவார்சோதியித்யாதி) இச்சேர்த்திக்கு ஒரு தீங்குவாராதபடி கல்மதிளிட்டாற்போலேயிருக்கிற ஆழ்வார்களைப்பாரீரென்ன; அவர்களோட்டைச்சேர்த்திக்கு என்ன தீங்குவருகிறதோ! என்றுமங்களாசாஸநம்பண்ணுகிறார். (வடிவார்சோதி) * காளமேகநிபச்யாமமானதிருமேனி, ஸ்வதேஜஸ்ஸாலே வ்யாப்தமாம்படியிருக்கை. “புருஷம்க்ருஷ்ணபிங்களம் - புருஷம்க்ருஷ்ணபிங்களம்” என்னும்படியாயிறேயிருப்பது. (கூ) தேஜோராசியாயிருக்கும் வடிவையுடையவனென்னவுமாம். (வலத்துறையும்சுடராழி

(க) என்றிய-ஏதுக்காக. (உ) பெருவிலையன் - மிகவிலையுள்ளது. (ந) ப்ராதாந்யம்-உயர்த்தி. (ச) யஜ்ஞமயமாய் - யஜ்ஞஸ்வரூபமாய். (ரு) யோகிசிந்த்யம்-யோகிகளாலே சிந்திக்கத்தக்கது. (சு) மௌக்த்யம் - அழகு. (எ) போகஸ்ரோதஸ்ஸு-போக ப்ரவாஹம். (அ) சசப்தம் -உம்மை. (கூ) தேஜோராசி-தேஜஸ்ஸமூஹம்.

யும்பல்லாண்டு) வலவருகே நித்யவாஸம்பண்ணுமவனாய், பிறர்க்கு (க) அநபிபவநீயனாயிருக்கிற ஆழ்வானோட்டைச்சேர்த்தி நித்யமாய்ச்செல்ல வேணுமென்கிறார். "ஆழியும்" என்கிற சசப்தத்தாலே - ஆயுதாகாரத்தாலே ரக்ஷகமாகக்காட்ட, ஆபரணபுத்தியாலே அவனையுங்குறித்து மங்களாசாஸநம்பண்ணுகிறாரென்கை.

(படைபோரித்யாதி) நம்மையைவிடாதே, த்வநியாலே எதிரிகளையழிக்கு மிவனைப்பாரீரென்ன (படைபோர்புக்குமுழங்கும்) ஸேனையையுடையயுத்தத்திலே புக்கு முழங்குமென்னுதல்; யுத்தத்திலே ஆயுதமாய்ப் புக்குமுழங்குமென்னுதல். (முழங்கும்) "ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநிவ்யதாரயத்" என்றும், "யஸ்யநாதேநதைத்யாநாம்பலஹாநிரஜாயத" என்றும் ப்ரதிகூலர் மண்ணுண்ணும்படியும் அநுகூலர் வாழும்படியுமாயிறே த்வநியிருப்பது. இத்த்வநி இவர்க்கு பயஸ்தாநமானபடி என்னென்னில்; த்வநிவழியே நின்று இடங்காட்டிக்கொடுக்குமென்று பயப்படுகிறார். (அப்பாஞ்சசன்னியமும்) முன்னிலையாயிருக்க பரோக்ஷ நிர்த்தேசம்பண்ணுவானென்னென்னில்; புத்ரனை அலங்கரித்ததாய் "தன்கண்படிலும் கண்ணெச்சிலாம்" என்றுபார்க்கக்கூசுமாப்போலே, மங்களாசாஸநம் பண்ணுகிறதம்முடைய கண்ணையும்செறித்து முகத்தை மாறவைத்துச்சொல்லுகிறார். அன்றுயுத்தத்திற்பிறந்த (உ) ப்ரமாதத்துக்கு இன்று மங்களாசாஸநம் பண்ணுகிறாரென்றுமாம்.

இவ்விரண்டுபாட்டும் - திருமந்த்ரார்த்தமாயிருக்கிறது. "அடியோமோடும்" என்கிற விடத்தாலே-ப்ரணவார்த்தத்தைச் சொல்லிற்று; முதற்பாட்டில் "பல்லாண்டு" என்கிற ப்ரதமபதத்தாலே -நமஸ்ஸப்தார்த்தஞ் சொல்லிற்று; "மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா" என்று - அப்பாட்டில் விக்ரஹயோகத்தையும், சௌர்யவீர்யாதி குணயோகத்தையும், இரண்டாம்பாட்டில் விபூதி யோகத்தையும் சொல்லுகையாலும்-நாராயணசப்தார்த்தஞ் சொல்லிற்று; "உன்செவ்வடிசெவ்வி திருக்காப்பு" என்கையாலே-சதுர்த்தியில் ப்ரார்த்திக்கிற அர்த்தத்தைச்சொல்லிற்றாய்த்து. (உ)

## அரும்பதம்.

அடியோமோடு மித்யாதி—வ்ருத்தாநுவாத பூர்வகமாக ஸங்கதியருளிச்செய்கிறார் கீழித்யாதி—அடியோம், மங்கை, ஆழி, அப்பாஞ்சசந்யம் என்கையாலே, உபயவிபூதியோகஞ்சொல்லிற்று—நாலடியும் நாலு வாக்யங்களென்கைக்காக ப்ரதமோபாதாநம் அடியோமித்யாதி—ப்ரதிபதார்த்தமருளிச்செய்வதாக புநஃப்ரதீகோபாதாநம் அடியோமோடுமென்றது—பல்லாண்டென்றது - தன்னைப்பாராதே அத்தலையில் ஸம்ருதி நித்யமாய்ச்செல்ல வேணுமென்றிருக்குமவன்வ்யவஹாரமென்னாநின்றீர், இங்கே அடியோமோடும் என்று தம்மைப்பேணக்கூடுமோ. என்கிற ஶங்கையை அநுவதித்து, இதுவும் அத்தலைக்காகவே யென்று த்ருஷ்டாந்தபூர்வகம் பரிஹரிக்கிறார் தம்மை யித்யாதிவாக்ய சதுஷ்டயத்தாலே.—தாமில்லாத

(க) அநபிபவநீயன் - பிறரால்அவமதிக்கக்கூடாதவன். (உ) ப்ரமாதம்-தீங்கு.

போது பரிவாரில்லையோவென்ன, அத்தலைக்கித்யாதி—[illegible]
நுக்ருத்து—மேலே நின்றேயும் என்றிருக்கையாலே அதுக்கு[illegible]
மென்னுதொழிவானென்னென்கிற ஶங்கையை அநுவதித்து-அத [illegible]
மாகையாலே விஶேஷிக்கவேணுமென்று பரிஹரிக்கிறார் ஆனலித்யாதி [illegible]
த்தாலே—அஹங்காரத்திலே-அந்தঃகரணத்திலே—அஹமர்த்தமாத்மா—முறை-ஶே
ஷத்வம்—இவர்தெளிந்தவராகைக்கு ஶேஷத்வம் ஸ்வாபாவிகமோவென்ன, வீ
மௌபரி[illegible]சமித்யாதி—ஆனலென்றது - இவரொருவருமே தெளிந்தவரானுமென்ற
படி—இந்த ஶங்கைக்கு ஹேதுத்வயஸமுச்சயேந பரிஹாரம் தமியரித்யாதி—வ்யா
வ்ருத்தமான ஶேஷித்வம்-நிருபாதிகஸர்வஶேஷித்வம்—நீ மங்களஸம்பாதகனாகை
யாலே சேதநரெல்லாருங் கூடிப்பரிந்தாலும் போராமையாலே அடியோங்களைப்
போலே நீயுமுன்னைப்பரிகைக்கு நித்யமாய்ச்செல்லவேணுமென்று இவ்வாக்யத்
துக்குத்தாத்பர்யம்—கீழ்ப்பாட்டில் உன்சேவடியென்று அத்தலைக்கு மங்களாஶாஸ
நம்பண்ணியிருக்க, புநঃ நின்றேயுமென்பானென்னென்னில், இத்தாலித்யாதி—
இத்தால் என்றது-நின்றேயுமென்றதாலே யென்றபடி—பிரிவின்றி யென்றது-பிரி
வின்றிக்கே யிருக்கையைச்சொல்லுகிறது—"ஆவியுள்ளுமாக்கையுள்ளுமல்லபுறத்தி
னுள்ளும் நீக்கமின்றி யெங்குநின்றாய்" என்கிறபடியே,ஜீவபரஸம்பந்தம் நித்யமா
யிருக்க, பிரிவின்றியென்றதுக்கு ப்ரஸக்தியேதென்ன, அருளிச்செய்கிறார் இரண்டு
தலையுமித்யாதி—இரண்டாம்பதத்துக்கு ஶங்காஸமாதாநமுகேந பாவம் உண்டான
இத்யாதி—உண்டான அமங்களங்கள் போகைக்கும் இல்லாத மங்களங்களுண்டா
கைக்குமென்றது ஆழ்வாருடைய ப்ரேமஸ்வபாவத்தைப்பற்ற—அன்றிக்கேலோகத்
தார்க்குண்டான அமங்களங்கள் போகைக்கும் என்று கூட்டுவது—"நின்வலமார்பி
னில் வாழ்கின்ற" என்கிறவிஶேஷணத்தைக்கடாக்ஷித்து, தேவரீரும் பிராட்டியு
மான சேர்த்தியென்றது—அவளுடைய சேர்த்தி நிறங்கொடுக்கு மென்னுமதுக்கு
ப்ரமாணம் "[illegible]" இதயாதி—"[illegible]" என்றதுக்கு பாவம் எதிரி
ட்டுவெல்ல நினைக்கிறாயோவென்றது—ப்ரமாணாந்தரம் "[illegible]" இத்யாதி—
ஶேஷித்வம்-ப்ராதாந்யம்—"வடிவாய்" என்றதை நிறமுடைத்தாயிருக்கிற என்று
திருமார்பிற்கு விஶேஷணமாக்கிக் கீழருளிச்செய்து "மங்கை" என்றதுக்கு விஶே
ஷணமாக்கிஅர்த்தாந்தரம்ஸ்ரீகௌஸ்துபேத்யாதி —"நின்"என்றதுக்குத்தாத்பர்யம்
ஸர்வேத்யாதி—ஸர்வாதிக்யத்துக்கு ப்ரமாணம் ஸர்வயஜ்ஞேத்யாதி—இவ்வாக்யத்
துக்குக்கருத்து ஶ்ருதியினுடைய பூர்வோத்தர பாகங்களில் ப்ரதிபாத்யங்களான
கர்மோபாஸநங்களுக்கு விஷயமிறே யென்று—"மார்பு" என்றதுக்கு வாஸனை
ஸர்வயஜ்ஞேத்யாதி யெனனவுமாம்—"வலம்" என்றதுக்கு வாஸனை - அணைக்
கைக்கு இதயாதி—அணித்து - ஸமீபம்—உறைகின்ற என்னாதே வாழ்கின்ற என்பா
னென்னென்ன, மார்பிலிருப்பு இத்யாதி—இதில் வர்த்தமானார்த்தம் நித்யமா யித்
யாதி—போகரூபதையை உபபாதிக்கிறார் அம்மார்பிலே யித்யாதி—எடுத்த ப்ரமா
ணத்துக்குவ்யாவ்ருத்தி பூர்வகம் அர்த்தம் "யுவாகுமார:" இத்யாதி—சகாரத்
தை அப்ராதாந்யத்திலேயாக்கி யுவதியுமாகக்கடவள் என்கிறார் இவளுக்கித்யாதி—
தளர்த்தி-ப்ரமம்—அநுக்தஸமுச்சயமாகவும் சேர்த்தியோடே ஸமுச்சயமாகவும்
அருளிச்செய்கிறார் சப்தத்தாலே யித்யாதி—ஆஶாஸ்யை யென்றது மங்களா
ஶாஸநத்துக்கு விஷயபூதை என்றபடி—மூன்றாமடிக்கு ஶங்காஸமாதாநமுகேந
தாத்பர்யம் - இச்சேர்த்திக்கித்யாதி—இச்சேர்த்திக்கென்றது-மங்கையுமான சேர்த்
திக்கென்றபடி—ஆழ்வார்களையென்ற பஹுவசநம் மங்கையுமென்ற இடத்தில்
மஹிஷ்யந்தர ஸமுச்சயமாகச்சொன்னாற்போலே, இங்கும் ஆழியுமென்ற சகாரம்

நந்தகாதிகளைச் சொல்லிற்றாகவுமொருயோஜனை திருவுள்ளம்பற்றி யருளிச்செய்தாரென்று கண்டுகொள்வது—வடிவு என்றதுக்கு இரண்டர்த்தம் எம்பெருமான் திருமேனியாதல், ஆழ்வார் திருமேனியாதல்—முதலர்த்தம் காளமேகேத்யாதி—ஸ்வதேஜஸ்ஸாலே யென்றது ஆழ்வாருடைய தேஜஸ்ஸாலே யென்றபடி. ஶ்யாமமான திருமேனியை ஆழ்வாருடைய தேஜஸ்ஸமுட்டாக்கிடுகையாலே வந்த பரபாகத்துக்கு ப்ரமாணம் "வ-ர-ஷ." இத்யாதி—இரண்டாமர்த்தம் தேஜோராஶி இத்யாதி. "சோதியார்வடிவு"என்று இப்பக்ஷத்தில் அந்வயம்—சுடர் பததாத்பர்யம் பிறர்க்கித்யாதி—ஆக ஆழியுமென்ற சகாரத்தாலே சொல்லுகிற நந்தகாதிகளுடைய சேர்த்திக்கு மங்களாஶாஸநம் பண்ணுகிறாரென்று கருத்து—இந்த சகாரத்தை ப்ராதாந்யபரமாக்கி அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் ஆழியுமித்யாதி—இப்போது ஆழி பதம் நந்தகாத்யுபலக்ஷணம்—நங்கையைவிடாதே என்கையாலே திருவாழியை வ்யாவர்த்திக்கிறது—படை-ஸேனையும், ஆயுதமும்—முதலர்த்தம் ஸேனை இத்யாதி-இரண்டாமர்த்தம் யுத்தத்திலே யித்யாதி--இப்பக்ஷத்திலே போரிலே படையாகப் புக்கு என்றந்வயம்—போர்-யுத்தம்—எதிரிகளை அழியச்செய்யுமென்றதுச்கு ப்ரமாணங்கள்-"ஸவொஷ" இத்யாதி—செறித்து-நெருக்கி. மூட்டியென்றபடி—முகத்தை மாறவைத்து பரோக்ஷநிர்த்தேஶம் பண்ணினாரென்றார்கீழ், பூர்வ வ்ருத்தாந்தத்தைப்பற்றத் தாத்பர்யாந்தரம் அன்றுயுத்தத்திலித்யாதி—தத்வஹிதபுருஷார்த்த ப்ரதிபாதகமான திருமந்த்ரார்த்தமென்று ப்ரதிஜ்ஞைபண்ணுநின்று கொண்டுபதங்களிலே யேறிட்டுக்காட்டுகிறார் இவ்விரண்டு இத்யாதி அஞ்சுவாக்யத்தாலே—அடியோமோடுமென்கிற இடத்தாலே என்றது இங்குமுதலடியாலே யென்றபடி—முதல் அடிப்பாட்டு வ்யாக்யாநத்திலே பல்லாண்டு என்கிற ஶப்தம், ஸ்வரூபத்தையும், ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியையும், ப்ரகாஶிப்பிக்குமென்று அருளிச்செய்திருந்தாரோயாகிலும், நமஶ்ஶப்தம்போலே யிருப்பதொன்றாகையாலே உபாயத்தைக்காட்டக்கடவதென்று திருவுள்ளம்பற்றி நமஶ்ஶப்தார்த்தம் சொல்லிற்றென்கிறார் இங்கே—அடியோமோடும் என்ற இடத்தில் ஸ்வரூபமும் திருக்காப்பு என்ற இடத்தில் வ்ருத்தியைச்சொல்லுகிறதென்று மிருக்கையாலே இப்படிகொள்ளவேணும்.

---

## மூன்றாம்பாட்டு.

வாழாட்பட்டுநின்றீருள்ளீரேல்வந்து மண்ணுமணமுங்கொண்மின்
கூழாட்பட்டுநின்றீர்களையெங்கள் குழுவினிற்புகுதலொட்டோம்
ஏழாட்காலும்பழிப்பிலோநாங்க ளிராக்கதர்வாழிலங்கை
பாழாளாகப்படைபொருதானுக்குப் பல்லாண்டுகூறுதுமே.

(இ-ள்.) வாழ் ஆள் - கைங்கர்யரூபமான போகத்துக்கு, பட்டு-பொருந்தி, நின்றீர் - நிலைநின்றவர்களாய், உள்ளீரேல் - இருப்பீர்களானால், வந்து-விரைவாகவந்து, மண்ணும் - திருமுளைத்திருநாளுக்குப் புழுதிமண் சுமக்கையையும், மணமும் - அந்தக்கல்யாணத்துக்கு அபிமாநியாயிருக்கையையும், கொள்மின்-நீங்கள் ஸ்வீகரியுங்கோள்; கூழ் - சோற்றுக்காக, ஆள்பட்டு - அடிமையோலை யெழுதிக்கொடுத்து, நின்றீர்களை - கண்டவிடமெங்கும்நிற்கிற வுங்களை, எங்கள்குழுவினில் - அநந்யப்ரயோஜநரான வெங்க

ள்திரளிலே, புகுதலொட்டோம் - சேரவொட்டோம்; எங்கள்திரளிற்காட்டில் உங்கள்திரளுக்கு வாசியென்னென்ன; நாங்கள்—, ஏழாட்காலும்-முன்னேழ் பின்னேழ் நடுவேழ் ஆகிய இருபத்தொருதலைமுறையிலும், பழிப்பிலோம் - ப்ரயோஜநாந்தரபரரென்றும் ஸாதநாந்தரபரரென்றும் பழிக்கப்படாதவர்கள் என்ன; அது உங்கள் தொழில்கொண் டறியவேண்டுமென்ன; இராக்கதர் - ராக்ஷஸர், வாழ்-வர்த்திக்கிற, இலங்கை - லங்கையானது, பாழாளாக - ஆள்பாழாம்படியாக, படை - யுத்தத்திலே, பொருதானுக்கு - அன்று எதிரிகளம்பு மார்விலேதைக்கும்படி பொருதவனுக்கு, பல்லாண்டுகூறுதும் - இன்றிருந்து மங்களாசாஸநம்பண்ணிப் போருவோம் சிலர் நாங்களென்கிறார்.

(தா-ம்.) கைங்கர்யரூபமான போகத்துக்கு அடிமையாகி நிலைப்பட்டவர்களாய், பகவதநுபவிகளாயிருப்பீரேயானால், ஸ்ரீவைஷ்ணவர்திரளில்வந்து, மண்ணுமத்தலும் மங்களத்துக் கபிமானிகளாயிருத்தலும் உங்களுக்கு உரியனவாக்குங்கள், உணவுக்குத் தொண்டுபட்டு ப்ரயோஜநாந்தரபரராய்நின்ற வுங்களை அநந்யப்ரயோஜநராகிய எங்கள் கூட்டத்தில் புகவிடோம்; ஏனெனில், ஏழுபுருஷஸந்ததியளவும் ப்ரயோஜநாந்தரபரதைமுதலான தோஷங்கள் இல்லையாயினோம் நாங்கள், ஆகையாலே ராக்ஷஸர் வர்த்திக்கிறலங்காபுரியில் ஆள்பாழாகும்படி யுத்தஞ்செய்தவனுக்குப் பல்லாண்டு கூறுகின்றோம் என்பதாம்.

அ-கை.—மூன்றும்பாட்டு. (வாழாளித்யாதி)கீழிரண்டு பாட்டாலே தாம் திருப்பல்லாண்டு பாடினார்; இனிமேல், தம்முடைய மங்களாசாஸநத்தால் தமக்கு பர்யாப்தி பிறவாமையாலே, “வதாவி-யாஹஜெஹௌ-சதுர்விதாபஜந்தேமாம்” என்கிறபடியே (க) ஐஶ்வர்யகைவல்ய பகவச்சரணார்த்திகள் மூவரையும் கூட்டிக்கொள்வாராகநினைத்து, அதில் மங்களாசாஸநத்துக்கு பகவத்ப்ராப்திகாமர்ப்ரத்யாஸந்நராகையாலே அவர்களை யழைக்கிறார். “வாக ஸாஉ-நஹ-ஜீக-ஏகஸ்ஸாது நபுஞ்ஜீத” என்கிற ந்யாயத்தாலே - இம்மங்களாசாஸந ரஸம் எல்லாரும்புஜிக்கவேணும் என்னும் நினைவாலே அழைக்கிறாரென்றுமாம். அவர்களோடேகூட மங்களாசாஸநம் பண்ணுகை தமக்கு தாரகமாகையாலே யென்றுமாம். “அடியார் தங்கள் இன்பமிகு பெருங்குழுவுகண்டு” என்றும் “அடியார்களை - உடன் கூடுவதென்றுகொலோ” என்றும் - கண்ணாலே காண்கையும் அத்திரளிலே புகுருகையும் இவையெல்லாம் உத்தேச்யமாயிறே யிருப்பது.

வ்யா —(வாழாள் என்று) நிரதிசயஸுகரூபமான வ்ர்த்தியைச்சொல்லுகிறது. வ்யதிரிக்த விஷயங்களிலடிமை, (உ) துராராதநமாகையாலும், (ரு) துஸ்ஸகமாகையாலும்,அத்யல்ப பலமாகையாலும். துஃகரூபமாயிறே யிருப்பது. “ஸவ-ஂபரவஶ-ஂது-ஃகஂ - ஸர்வம்பரவசம்துஃகம்” “ஸெ

(க) ஐச்வர்யகைவல்ய பகவச்சரணார்த்திகள் - பொருளை விரும்புமவனும், கைவல்யத்தை விரும்புமவனும், ஸர்வேச்வரன்திருவடிகளைவிரும்புமவனும். (உ) துராராதநம்-கிட்டக்கூடாமை. (ரு) துஸ்ஸகம்-அடிமைசெய்யக்கூடாமை.

[illegible] - ஸேவாஶ்வவ்ருத்தி:" என்னக்கடவதிறே. இவ்விஷயந்தன்னிலும் ப்ரயோஜநாந்தரபரராயிருந்தால் பலம் பந்தகமாகையாலும், அநந்யப்ரயோஜந ரோபாதி (க) அநவரதபாவனையும் (உ) அந்திமப்ரத்யயமும் வேண்டுகையாலும் (ங) துக்கப்ராயமாயிருக்கும்; ஸாதநாந்தர நிஷ்டனுக்கும் கர்த்தவ்ய புத்தியாலே ரஸமில்லை. இக்குறைகளொன்றுமின்றிக்கே, ப்ராப்தவிஷயத்திலே தன்னைப்பேணாதே பரஸம்ருத்தியை ஆசாஸிக்க: ஸர்வநிரபேக்ஷனான ஈஶ்வரன் இத்தைக்கண்டு "இதொரு ப்ரேமஸ்வபாவமிருந்தபடியென்" என்று ப்ரீதனாக; இவனுக்கு அந்த ப்ரீதியேபுருஷார்த்தமாயிறே யிருப்பது. (பட்டு) என்பது - உவரிக்கடலில் முத்துப்பட்டது என்னுமாப்போலே. "நான், எனக்கு" என்றிருக்கிற ஸம்ஸாரத்திலே பகவத் ஸம்ருத்தியை ஆசாஸிக்கும்படி கையொழிந்திருப்பார் சிலரைப்பெறுகையாவது (ச) அலப்யலாபமென்னுமிடந்தோற்ற வருளிச்செய்கிறார். (நின்றீர்) வாயுபரவசமாய்த்திரிகிற (ரு) த்ருணம்போலே கர்மபரதந்த்ரனாய்த் திரிகிற ஸம்ஸாரிசேதநனுக்கு பகவத்ஜ்ஞாநபூர்வகமாக தத்ஸம்ருத்தியை ஆசாஸிக்கப்பெற்றாலிறே ஸ்திதியுண்டாவது. (உள்ளீரேல்) "[illegible] - ஸமஹாத்மா ஸுதுர்லப:" என்று - அநந்யப்ரயோஜநரைக் கிடையாதென்று ஸர்வேஶ்வரன் கைவிட்ட ஸம்ஸாரமாகையாலே மங்களாசாஸநத்துக்கு ஆள்தேட்டமாயிறேயிருப்பது. நாகபாசத்தினன்று அடையமோஹித்துக் கிடக்க, திருவடியும் ஸ்ரீவிபீஷணாழ்வானும் "ப்ராணனுடையாருண்டோ" என்று தேடினாப்போலே, ஸம்ஸாரத்தில் ஸ்வரூபஜ்ஞாநமுடையார் தேட்டமாயிறே யிருப்பது, இந்த (சா) யதிசப்தத்தாலே-ஸம்ஸாரத்தில் வைஷ்ணவத்வம் (எ) துர்லபமென்றதாய்த்து.

அநந்யப்ரயோஜநரான வைஷ்ணவர்களும் "நம்மைவிரும்புவார் சிலருண்டாவதே" என்று ஸங்க்ருஹீதராக (வந்து) அவர்களுடைய ஸ்வரூபஸ்வபாவம் ஆராய்வதற்குமுன்பே அவர்களோடே கலந்துகொடு நிற்கவேண்டும்படியான த்வரைசொல்லுகிறது. (மண்ணும் மணமுங்கொண்மின்) என்கிறார். மண்ணுக்கும் மணத்துக்கும் உரியார் அந்தரங்கரான அடியாரிறே. அடிமை விலையோலையெழுதும்போதும் "மண்ணுக்கும் மணத்துக்கும் உரியனாக வேணும்" என்றிறேயெழுதுவது. மண்ணாவது- (அ) ஸ்வாமிக்கு ஒருமங்களமுண்டானால் (கூ) அங்குரார்ப்பணத்துக்குப் புழுதிமண் சுமக்கை; அந்த ந்யாயத்தாலேயிறே நம் ஆழ்வார்களுக்கு அது க்ருத்யமாகிறது. மணமாவது-அந்தக்கல்யாணத்துக்குத் தான் அபிமாநியாயிருக்கை. இவ்விரண்டும் - ஸர்வகைங்கர்யத்துக்கு முபலக்ஷணம். "கொண்மின்" என்றதால் - அடிமைசெய்யுமிடத்தில் (க0) கிடந்தானைகண்டேறுகையன்

---

(க) அநவரதபாவனை - எப்பொழுதும் நினைக்கை. (உ) அந்திமப்ரத்யயம் - ப்ராணன் நீங்கும்போது எம்பெருமானை நினைக்கை. (ங) துக்கப்ராயம்-பெருந்துன்பம். (ச) அலப்யலாபம் - பெறும்பேறு. (ரு) த்ருணம்-துரும்பு. (சா) யதிசப்தம்-ஏல். (எ) துர்லபம்-அடையக்கூடாமை. (அ) ஸ்வாமி-தலைவன். (கூ) அங்குரார்ப்பணம்-திருமுளைத்திருநாள். (க0) கிடந்தானைகண்டேறுகை - ஸ்வதந்த்ரப்படுகை.

றிக்கே சிலர் தாக்கொள்ளவேணும் என்கையும், தருமவர்களும் "உங்கள் தான அடிமையை நீங்கள் ஸ்வீகரியுங்கோள்" என்று சிறிதாகக்கொடுக்கக்கடவர்களென்கையுமாகிற சாஸ்த்ரார்த்தத்தையும் வெளியிடுகிறது.

(கூழாளித்யாதி) இவர் அழைத்தவாசியறியாதே ப்ரயோஜநாந்தரபரரடையப்புகுரத் தொடங்கிற்று; அவர்களை (க) நிஷேதிக்கிறார். "கூழாள்" என்று - சோற்றுக்காக ஆரோனுக்கும் தன்னையெழுதிக்கொடுக்கை; இது (உ) ப்ரயோஜநாந்தரபரர்க்கு முபலக்ஷணம். தன்னை (ங) "பகவத்தாஸ்யைகபோகன்" என்னுமிட மறியாதே, ப்ரயோஜநாந்தரங்களைக்குறித்து அவன்றன்னையே (ச) ஆஸ்ரயிக்கிறார்களிறே. "கூழாள்" என்று - அநந்ய ப்ரயோஜநராயிழிந்து, ப்ரயோஜநாந்தரங்களை வேண்டிக்கொள்ளும்(ரு) இருகரையரைச்சொல்லுகிற தென்றுமாம். "பட்டு" என்கிறது-அகப்பட்டென்றபடி. அதாவது - பந்தகமாகையாலே ஸ்வரூபவிரோதியாய் (சு) அநர்த்தத்தைப் பண்ணுமென்னுமத்தாலே சொல்லுகிறது. (நின்றீர்களை) பஹுவசநத்தாலே "உள்ளீரேல்" என்று தேடவேண்டாதே பார்த்தபார்த்தவிடமெங்கும் ப்ரயோஜநாந்தரபரராயிருக்கை. "எங்கள்குழு" என்று இத்திரளுக்குண்டான வ்யாவ்ருத்தி தோற்றவருளிச்செய்கிறார். தேஹாத்மாபிமாநிகள், தேவதாந்தரப்ரவணர், இவ்விஷயந்தன்னிலேபுகுந்து ப்ரயோஜநாந்தரங்களை (எ) அபேக்ஷிப்பார், அநந்யப்ரயோஜநராய் ஸாதநாந்தரங்களிலே அந்யபரராயிருப்பாராகிற திரள்களெல்லாவற்றிலும் வ்யாவ்ருத்தமாயன்றோ எங்கள் திரளிருப்பதென்கிறார். (புகுதலொட்டோம்) "ஆரே புகுவார்" என்று ப்ரார்த்திக்கிற விவர், (அ) நிர்த்தயரைப்போலே "புகுரவொட்டோம்" என்பானென்னென்னில்; வஸிஷ்டன் (கூ) பரமதயாளுவானும் சண்டாளனை அக்நிகார்யத்திலே கூட்டிக்கொள்ளானிறே. இத்தால்-அநந்யப்ரயோஜநர்க்கு ப்ரயோஜநாந்தர பரரோட்டை ஸஹவாஸம் (கO) அஸஹ்யமாயிருக்குமென்றதாய்த்து.

எங்கள் திரளிற்காட்டிலும் உங்கள்திரளுக்கு வாசியென்னென்னில் (ஏழாள்காலும் பழிப்பிலோம்நாங்கள்) என்கிறார். "ஏழாள்" என்று-தமக்குக்கீழே ஒருமூன்றும், மேலே ஒருமூன்றும், தாமுமாக ஏழுபடியைச் சொல்லுகிறது. இஸ்ஸமுதாயத்தைப்பற்றி சாஸ்த்ரங்கள் ஸப்த ஸப்த ஸப்த - ஸப்தஸப்தஸப்தச" என்று - இந்தஏழையும், இதுக்குக்கீழேயோரேழையும், இதுக்குமேலேயோரேழையும்; ஆக, இருபத்தொருபடிகாலைச் சொல்லுகிறது. "[illegible]

(க) நிஷேதிக்கிறார் - தடுக்கிறார். (உ) ப்ரயோஜநாந்தரபரர் - ப்ரயோஜநத்தை விரும்புமவர்கள். (ங) பகவத்தாஸ்யைகபோகன் - எம்பெருமானுக்கடிமைசெய்கையையே தொழிலாகவுடையவன். (ச) ஆஸ்ரயித்தல்-அடைதல். (ரு) இருகரையர்-இரண்டுஉத்தேச்யத்தையுடையவர்கள். (சு) அநர்த்தம்-தீங்கு. (எ) அபேக்ஷித்தல்-விரும்புதல். (அ) நிர்த்தயர்-தயையில்லாதவர்கள். (கூ) பரமதயாளு-மிக்கதயையுள்ளவன். (கO) அஸஹ்யம்-பொறுக்கக்கூடாமை.

ஸம்ஜ்ஞவ-நாதி - தஸ்பூர்வாந்தஸாபராநாத்மாநஞ்சைகவிம்சதிம் பங்க்தி ஞ்சபுநாதி" என்று முகபேதேநசாஸ்த்ராந்தரஞ் சொல்லிற்று. "ஏழாட்காலும்" என்கிற சப்தம் இவ்வளவைநினைக்கிறது. இத்தால்-(க) ஒருஸந்தாநத்திலே ஒருவன் அநந்யப்ரயோஜநனானால், அவனைப்பற்ற, பகவத்ப்ரபாவம், ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் செல்லக் கீழும்மேலும் வெள்ளமிடுமென்கிறது. (பழிப்பிலோம்) (உ) விஷயாந்தரப்ராவண்யமென்ன, (ங) தேவதாந்தரபஜநமென்ன, இவை (ச) தூரதோநிரஸ்தமாகையாலே, பதர்கூட்டித்தூற்றவேண்டா. இனி அநந்யப்ரயோஜநராய் அநந்யஸாதநராயிருப்பார்க்குப் பழிப்பாவது - ப்ரயோஜநாந்தரபரதையும் ஸாதநாந்தர பரதையுமிறே; அவற்றை யுடையோமல்லோமென்கிறார். (நாங்கள்) "எங்கள்குழுவு" என்றபோதைச்செருக்குப்போலே, பகவத்விஷயீகாரத்தால் வந்த செருக்குத்தோற்றச் சொல்லுகிறார்.

உங்கள் ஸ்வரூபம் நீங்கள்சொன்னவளவிலே விஸ்வஸித்திருக்குமத்தனை யளவுடையோமல்லோம், உங்கள் வ்ர்த்தி விசேஷத்தைக்கொண்டு உங்களையறியவேணுமென்ன; அது நீங்களறியும்படியல்ல, எங்ஙனேயென்னில்; ஒருகார்யப்பாடாக உள்ள அமங்களங்கள்போக மங்களாசாஸநம்பண்ணும்படியாதல், இல்லாதமங்களங்களுண்டாகவேணுமென்று மங்களாசாஸநம்பண்ணுதல் செய்யுமளவிறே நீங்களறிவது; முன்பு வ்ர்த்தமாய்க் கழிந்த செயலுக்கு இன்றிருந்து (ரு) வயிறுபிடிக்கும் திரள்காணெங்களது.(இராக்கதர்வாழிலங்கை) தூர்வர்க்கம் களித்துவர்த்திக்கும் தேசம். புறம்பேபோய் பரஹிம்ஸைபண்ணி, குளவிக்கூடுபோலே திரண்டுகிடலையும்மதிளையும் அரணாக்கி, (சா) அமணக்கூத்தடிக்கும் தேசமென்கை. (இலங்கைதான் விபீஷண (எ) விதேயமிறே. இனி, "நநமேயம் - நநமேயம்" என்ற ராவணனையும் அவனுடைய (அ) அதிக்ரமத்துக்குத் துணையானராக்ஷஸரையு மழியச்செய்து "ஸஸாநவஸ்ரீஹவெக- ஸஸாநஸத்ருஸீபவேத்" என்று பிராட்டியருளிச்செய்தபடியே அவ்வூரை (கூ) மூலையடியேபோம்படிபண்ணினான். (படைபொருதானுக்கு) இப்படிசெய்தது ஈஸ்வரத்வப் (க0) பெடாரான ஸங்கல்பத்தாலன்றிக்கே,எதிரிகளம்பு மார்விலே தைக்கும்படி பொருதவனுக்கு. (பல்லாண்டுகூறுதுமே) அப்போதை கையும்வில்லுமாய்ச்சிறிச்சிவந்து எதிரிகள்மேலே வ்யாபரிக்கும்போதை(கக) ஆகர்ஷகமான வடிவழகுக்கு மங்களாசாஸநம்பண்ணிப் போருவோம் சிலர்காண் நாங்களென்கிறார். "ராவவார்யெ-ராகவாக்ராஞ:நவ-ராணெக-ராதஷயா-ராகவார்த்தேபராக்ராந்தாநப்ராணேகுருதேதயாம்" என்கி

(க) ஒருஸந்தாநம்-ஒருவம்சம். (உ) விஷயாந்தரம்- ஸர்வேஸ்வரனொழிந்த விஷயம். (ங) தேவதாந்தரம் - ஸர்வேஸ்வரனொழிந்ததேவர்கள். (ச) தூரதோநிரஸ்தம் - தூரத்திலே தள்ளப்பட்டது. (ரு) வயிறுபிடித்தல் - துக்கப்படுதல். (சா) அமணக்கூத்து - லஜ்ஜையின்றிக்கே நிர்வாணமாய் ஆடுகிறகூத்து. (எ) விதேயம் - ஸ்வாதீநம். (அ) அதிக்ரமம் - அளவுக்குமீறுதல் (கூ) மூலையடியேபோம்படி - ஸ்வதந்த்ரமாம்படி. (க0) பிடார் - பெருமை. (கக) ஆகர்ஷகம்-ஸ்வாதீநப்படுத்துமது.

றபடியே அக்காலத்தில் முதலிகளுக்கு (க) அம்புக்கு இறாய்க்கப் பணி போருகையாலே அக்காலத்திலே மங்களாசாஸநம் பண்ணுவாரைப்பெற்ற தில்லை; "பிராட்டிபிரிந்தபோதே நம்குடியிருப்புப்பெற்றோம்" என்கிற ப் ரீதியாலே ப்ரஹ்மாதிகள் அஞ்யபராரானார்கள்; அக்காலத்தில் மங்களாசாஸ நம்பண்ணப்பெறாத குறைதீர இன்று இருந்து மங்களாசாஸநம் பண்ணு வோம்சிலர்காண் நாங்களென்கிறார். (௩)

சக்கிரவர்த்தி. வெ. ஸ்ரீநிவாஸ

## அரும்பதம்.

வாழாளித்யாதி—கீழிரண்டு பாட்டுக்கும், மேல்மூன்றுபாட்டுக்குமாக, பேடிகாஸங்கதி யருளிச்செய்துகொண்டு, இப்பாட்டில் முதலடியைக்கடாக்ஷித்து, "கூதெ-ூாஜிஜாஸூஃ" என்கிற ப்ரமாணத்தில், பிற்பட்டவர்கள் முற்பட்டதுக்கு ஹேதுவைச்சொல்லிக்கொண்டு அவதாரிகை கீழிரண்டு இத்யாதி—"ஹ-ூவி-ூயாஃ" என்றதை மூவராகச்சொன்னது ஆர்த்தனையும் அர்த்தார்த்தியையும் ஒருகோடியாக நினைத்துஅவதாரிகாந்தரம்ஏகஇத்யாதி—மூன்றாமவதாரிகைஅவர்களித்யாதி—மேல் வாக்யத்தில் காண்கையும் புகுதுகையும் என்று சொல்லுகையாலே, இங்கேயும் அவர்களைக்கண்டு அவர்களோடே கூடவென்று கூட்டுவது—ஆக இவர்களை யழைக்கைக்கு ஹேது மூன்று; அதாவது-அத்தலையில் வைலக்ஷண்யத்தைப்பற்றிவரும் தம்முடைய அபர்யாப்தியாதல், ஸ்வாதுஃமமான இதிலுண்டான இவர்களிழவைப்பற்றி யாதல், இவர்களோடே கூடாதபோது தம்செல்லாமையைப்பற்றி யாதல்—மூன்றாம் ஹேதுவை ப்ரமாணபூர்வகமாக த்ருடீகரிக்கிறார் அடியாரித்யாதி—குழுவு-ஸமூகம்—"ஆள்" என்றதுக்கு ஆட்சியை நிரூபகமாகச் சொல்லுமிடத்தில் அவதிசொல்லாமையாலே, வேறு எஞ்சினதில்லையென்று பலிக்கிறது-அத்தை யருளிச்செய்கிறார் நிரதிஶயேத்யாதி—இப்படிவிஶேஷிப்பானேன், உகந்த விஷயத்துக்கு ஶேஷமாயிருக்கை ஸுகமாயிருக்குமோவென்ன, இவ்விஷயமித்யாதி—இவ்விஷயம் தன்னிலும் அடிமையென்று ஶேஷம்—அநந்யப்ரயோஜநன் என்றது உபாஸகனை-அந்திமப்ரத்யயமாவது-அந்திமஸ்ம்ருதி—ப்ராயமென்றது-இதரவிஷயங்களை வ்யாவர்த்திக்கைக்காக—ஸாதநாந்தரநிஷ்டனுக்கும் என்றது-கீழ்அநந்யப்ரயோஜநனைச் சொன்ன உபாஸகனுக்கும்என்றபடி-கர்த்தவ்யபுத்தியென்றதுஶாஸ்த்ரவிஹிதமென்கிற நினைவு என்றபடி—ஆக இவ்வளவும் வ்யாவ்ருத்தங்களை யருளிச்செய்து நிரதிஶயஸுகரூபதையையும் உபபாதிக்கிறார் இக்குறைகளித்யாதி—இக்குறைகளொன்றுமின்றிக்கே என்றதுக்கு அந்தப்ரீதியே புருஷார்த்தமாயிறே யிருப்பது என்றதனோடுஅந்வயம்—நிரபேக்ஷனை என்றது-ஸம்ருத்தியில் ஸர்வஹேது நிரபேக்ஷனை என்றபடி—ஆனாகி என்னுமல் "ஆட்பட்டு" என்பானென்னென்னில்; த்ருஷ்டாந்தமுகேந அருளிச்செய்கிறார் பட்டு என்றது இத்யாதி—போலேயிருக்கிற என்று ஶேஷம்—உவரிடக்கடல்-லவணுப்தி—இத்தை விவரிக்கிறார்நானெனக்கித்யாதி—நான் என்றது-அஹங்காரம் - எனக்கென்றது-மமகாரம்—இப்போது "நின்றீர்" என்கையாலே, முன்புநில்லாமைதோற்றுகிறது;-அத்தைவிவரிக்கிறார் வாயுஇத்யாதி—"ஏல்" என்கிறயத்யர்த்தத்தை ஸப்ரமாணமாக உபபாதிக்கிறார்"ஸஹோதா" இத்யாதி—அநந்யப்ரயோஜநர் - மங்களாஶாஸநபரர்—இதுக்கு த்ருஷ்டாந்தம் நாகபாஶ இத்

---

(க) அம்புக்கிறாய்க்கப்பணி போருகை - அம்புக்குப் பின்வாங்குகைக்கே காரியம்போருகை.

யாதி—நாகபாஶத்தினன்று அடையமோஹித்ததில்லாமையாலே, நாகபாஶத்தினன்று என்றது ப்ரஹ்மாஸ்த்ரபந்தநத்தினன்று என்றபடி—பலிதம் இந்தஇத்யாதி-மேனுக்கவதாரிகை - அநந்யேத்யாதி—உரியார் -ப்ராப்தரானவர்—உக்தார்த்தத்தை லோகவ்யவஹாரமுகேந த்ருடீகரிக்கிறார் அடிமை யித்யாதி—விலையோலை - க்ரய பத்ரம்—மண்ணுவது என்றது-மண்கொள்ளுகையாவது என்றபடி—அந்த ந்யாயத்தாலே-விலையோலையெழுதுகிற ந்யாயத்தாலே யென்றபடி—நம் ஆழ்வார்கள் என்றது-ஜனைமுதலியாரையும், திருவாழியாழ்வானையும்—அங்குரார்ப்பணததி னன்றைக்கு ஆழ்வார் திருநாளென்றிறே ப்ரஸித்தி—மணமாவது என்றது மணங்கொள்ளுகையாவதென்றபடி—செய்மின் என்றுதல்,வாங்குமின்என்றுதல்சொல்லாதே, "கொள்மின்" என்றதுக்குத் தாத்பர்யம் "கொள்மின்" இத்யாதி—இத்தால்கொள்வாரும் கொடுப்பாரும் நிரஹங்காரராய் நிர்மமகாரராயிருக்கையைச் சொல்லுகிறதென்றுகருத்து—கிடந்தானையைக்கண்டேறுகை யென்றது-படுத்துக்கொண்டிருக்கிற யானையைத்தானேயேறுகை—சீரிதாக-ஸாதரமாக—கொடுக்கக்கடவர்களென்றதுநந்தரம், என்கையும் என்று ஶேஷம்—ஶாஸ்த்ரார்த்தம் என்றது - தாத்ருத்வத்திலும் ப்ரதிக்ரஹீத்ருத்வத்திலும் மமகாரநிவ்ருத்தியைச்சொல்லுகிறதிருமந்த்ரார்த்தமென்றபடி—"கூழாள்" இத்யாதிகளுக்கு பாவம் இவ்வார்த்தையித்யாதி—இவ்வார்த்தையென்றது-வாழாட்பட்டு என்கிறவார்த்தை—வாசியறியாதே யென்றது-தங்களுடைய ப்ரயோஜநாந்தரங்களும் வாழ்ச்சியென்று ப்ரமித்து அநந்யப்ரயோஜநரையழைத்தாரொன்கிற விஶேஷமறியாதேயென்றபடி—இது என்றது-கூழ் என்றத்தை—ஈஶ்வரனுக்கு எழுதிக்கொடுப்பார் அநந்யப்ரயோஜநங்களைக்கேட்பாரோவென்ன, தன்னை யித்யாதி—இது வித்தவ்யாக்யாத்ருவாக்யமாதல்—பரமித்தவர்களன்றிக்கே அநந்யப்ரயோஜநராயே, வந்த ப்ரயோஜநாந்தரங்களைக் கொள்வாரை நிஷேதிக்கிறாரொன்று அர்த்தாந்தரம் "கூழாள்" இத்யாதி—"பட்டு" என்றதுகீழும் இங்கும் ஒத்திருக்க, இங்கு அகப்பட்டு என்பானென்னென்ன, பந்தகேத்யாதி—நாங்கள் என்று அஹங்கரிக்கலாமோவென்ன, எங்கள் இத்யாதி—வ்யாவ்ருத்தியை உபபாதிக்கிறார் தேஹேதயாதி—அவதாரிகையிலே தம்முடைய அபர்யாப்தியாலே சதுர்வித புருஷர்களையும் அழைக்கிறாரொன்றுநின்றீர், ஆனால் "புகுதலொட்டோம்" என்னக்கூடுமோ என்கிற ஶங்கையை அநுவதித்து, பரிஹரிக்கிறார் ஆரோஇத்யாதி. இந்த பரிஹாரத்துக்கு அவர்கள் திருந்தாதே கேவலப்ரயோஜநாந்தர பரராயிருந்தால் த்யாஜ்யமொன்று கருத்து—"புகுதலொட்டோம்" என்றதாலே ஸ்வரூபஶிக்ஷைசெய்தருளுகிறார் இத்தால் இத்யாதி—இத்தால் ஏழுதலைமுறையைச்சொல்லுகிறதென்கிறார் "ஏழாள்" இத்யாதி—அந்யகாதாநாதிஸாமாந்ய தர்மங்களுக்கு இருபத்தொருதலைமுறைக்கு அதிஶயஞ்சொல்லியிருக்க, எழ்படியென்று பகவத்ப்ரபாவத்தைக்குறையச்சொல்லக்கூடுமோவென்ன, இந்தஸமுதா யேத்யாதி—இந்த ஸமுதாயத்தைப்பற்றியென்றது-கீழ்ச்சொன்ன ஸப்தகத்தை மத்யமாவதியாக்கி யென்றபடி—ஆள் என்று புருஷர்களைச்சொல்லுகிறது—கால் என்றது-ஸந்ததி—இவ்வளவையென்றது-இருபத்தொருபடியை—ஓரொழுக்குச்சொன்னது மற்றவற்றுக்கும் உபலக்ஷணம்—ஸாமாந்ய தர்மத்துக்கு இத்தனையுண்டானால், பகவந்நிஷ்டைக்குச் சொல்லவேண்டாவிறேயென்று கருத்து—பலிதார்த்தத்தை யருளிச்செய்கிறார இத்தால் இத்யாதி—"பழிப்பு" என்பது-தோஷம்—இதுஸாமாந்ய ஶப்தமாகையாலே, விஷயாந்தரப்ராவண்யாதிகளைச்சொன்னாலும், ப்ரயோஜநாந்தரபரரானவர்களுக்கும் த்யாஜ்யமானதை அப்ரஸக்தமென்றுநின்றுகொண்டு, விஶேஷபர்யவஸாநம்பண்ணுகிறார் விஷயாந்தரேத்யாதி வாக்யத்ரயத்தாலே—"பழிப்பிலோம்" என்றநாங்கள் என்று ஸித்தமன்றோ, விஶேஷிப்பானென்னென்ன, எங்கள் இத்யாதி—எங்கள்என்ற இடத்தில் வ்யாவ்ருத்திசொல்லுகையும் செருக்காலே யென்று கண்டு

கொள்வது—மேலுக்கு அவதாரிகை உங்கள் இத்யாதி—அளவு-ஜ்ஞாநம் - புடை-ப்ரகாரம்—காரியப்பாடாக-ப்ரயோஜந நிமித்தமாக—முன்பு வ்ருத்தமாயென்று விஶேஷித்தது யுகாந்தரவ்யவதாநம் தோற்றுகைக்காக—எங்களது என்ற அநந்தரம் என்கிறொன்று ஶேஷம்—இராக்கதர்-ராக்ஷஸர்-கீழ்வாக்ய விவரணம் புறம் பேயித்யாதி—குளவி-கீடவிஶேஷம்—"இலங்கை" என்கையாலே அர்த்தஸித்தம். கடலையும்மதிளையும் அரணாக்கியென்றது—"வாழ்" என்றதிலே நோக்காக அமணக்கூத்தென்றது; அதாவது லஜ்ஜையின்றியிலே நக்நதையோடே கூத்தாடுகை—இலங்கை பாழ் ஆள் ஆக என்னாதே, ஆள் பாழ் ஆக என்பானென்னென்ன, இலங்கைதான் இத்யாதி—ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு லங்காதிபத்யம் கடற்கரையிலே கொடுக்கையாலே, அத்தையழிக்கவொண்ணாதென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம்—ஆனால் ஆள்பாழ் ஆம்படி பண்ணுவானென்னென்ன, இனி "நநமேயம்" இத்யாதி—அதிக்ரமம்-மர்யாதாதிக்ரமம்—அழியச்செய்துபோம்படி பண்ணினான் என்று அந்வயம்—படைபொருதானுக்கு படையிலே பொருதானுக்கென்றபடி—படை-யுத்தம்;—ஆயுதமாகவுமாம்—இப்படிவிஶேஷித்ததுக்கு வ்யாவர்த்தக பூர்வகமாகத்தாத்பர்யம் இப்படி யித்யாதி—பெடார் - அஹங்காரம்—ஸங்கல்பத்தாலே யென்றது - "ஸநிஷ்ட்ராதி" என்கிற ஸங்கல்பத்தாலே யென்றபடி—"பொருதானுக்கு" என்றத்தைக்கடாக்ஷித்து பாவம் அப்போதை இத்யாதி—கூறுதும் - சொல்லுவோம்—இப்படி நீங்கள் கழிந்தகாலத்திற் செயல்களுக்கு மங்களாஶாஸநம் பண்ணுவானேன், அக்காலத்தில் பரிவரானவர்கள் மங்களாஶாஸநம் பண்ணியிரார்களோ வென்ன, "ராவணாயெஷு" இத்யாதி—"ஜயாம் நக்ஷவ்ருதே" என்றது அப்ரஸக்தப்ரதிஷேத மல்லாமையால், ப்ராணன்களிலே தயைபண்ணியிருக்கத் தோற்றுகையாலும், பராக்ரமித்தது பெருமாளுக்காக வென்கையாலே இதுவே ஸ்வாபாவிகமென்றும், திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் அக்காலத்தில் இத்யாதி—இருக்கப்பண்ணிப்போருகையாலே யென்றது-பின்வாங்குகையே கார்யமான படியாலே யென்றபடி—ஆனால் ப்ரஹ்மாதிகள் இருந்தார்களே யென்ன, "ராவணஸ்வயாயிஷ்ஹி" என்றதிலே நோக்காக அருளிச்செய்கிறார் பிராட்டியையித்யாதி—அந்யபரரானார்கள் என்ற அநந்தரம் ஆகையாலே யென்று கூட்டுவது—சிலர் என்கையாலே வைலக்ஷண்யம் ஸூசிதம்.

---

## நாலாம்பாட்டு.

ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்வந்தெங்கள்குழாம்புகுந்து
கூடுமனமுடையீர்கள்வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ
நாடுநகரமுநன்கறியநமோநாராயணாயவென்று
பாடுமனமுடைப்பத்தருள்ளீர்வந்துபல்லாண்டுகூறுமினே.

(இ-ள்.) ஏடு-பொல்லாங்கான, நிலத்தில் - மூலப்ரக்ருதியிலே, இடுவதன்முன்னம் - சேர்ப்பதற்குமுன்னே, வந்து—, எங்கள்குழாம் - அநந்யப்ரயோஜநரான வெங்கள்திரளிலே, புகுந்து—, கூடுமனமுடையீர்கள்- கூடவேணுமென்கிற நினைவுடையவர்களா யிருப்பீராயின், வரம்பொழி-வரம்பொழிய, ஒல்லை - விரைவாக, வந்து—, கூடுமினோ - சேருங்கோள்; நாடும் - நாட்டிலுள்ள அவிசேஷஜ்ஞரும், நகரமும்-நகரத்திலுள்ள விசேஷ

ஞரும், நன்கறிய - நன்றாகவறியும்படி, நமோநாராயணாயவென்று—, பரவும்-பாடத்தக்க, மனமுடை-மனஸ்ஸுண்டாம்படியான, பத்தருள்ளீர்-ப்ரேமத்தை யுடையீராகில், வந்து—, பல்லாண்டுகூறுமின் - பல்லாண்டு பாடுங்கோளென்கிறார்.

(தா-ம்.) உங்களைப் பொல்லாநிலத்தில் இடுவதற்கு முன்பேவந்து, எங்களுடைய ஸமூஹத்தில் ப்ரவேசித்து, பகவதநுபவத்தைக் கூடுதற்கு நினைவுண்டானவர்களாய், ஆத்மாநுபவத்துக்கிட்ட வரம்பு ஒழியவந்து விரைவிலே கூடக்கடவீர்கள்; நாட்டாரும் நகரத்தாரும் நன்றாக விடவும் பற்றவும் அறிய, அர்த்தபஞ்சகத்தையுஞ் சொல்லி, மங்களம்பாடுகிற ப்ரேம நெஞ்சையுடைய பக்தர்களாயிருப்பீராகில், விரைந்து வந்து பல்லாண்டு பாடுங்கள் என்பதாம்.

அ-கை.—நாலாம்பாட்டு. (ஏடுநிலத்தில்) கீழே - அநந்யப்ரயோஜநரையழைத்தார்; அவர்கள் மங்களாசாஸநத்துக்கு (க) ப்ரத்யாஸந்நராகையாலே, நீரிலேநீர்சேர்ந்தாற்போலே சேர்ந்திருக்குமிறே. அவ்வளவிலும் (உ) பர்யாப்திபிறவாமையாலே, "ஈஶ்வரன்கைபார்த்திருக்குமவர்கள்" என்னுமிவ்வளவைக்கொண்டு, ஆத்மப்ராப்திகாமரையும் ஐஶ்வர்யகாமரையும் அழைக்கக்கோலி, அதில்முந்துற ஆத்மப்ராப்திகாமரையழைக்கிறார். ஐஶ்வர்யத்திற் காட்டில் (௩) ஆத்மப்ராப்தி (௪) உத்க்ர்ஷ்டமென்னும் நினைவாலே யழைக்கிறாரல்லர் ; அந்தமோக்ஷத்தை இவர் அநர்த்தமென்றிருக்கையாலே. இனி எத்தாலே முற்பட அழைக்கிறதென்னில்; பகவத்ஸம்பந்தத்துக்கு உபகரணமான (௫) சரீரமோக்ஷம்அணித்தாகையாலும், அம்மோக்ஷத்தை (௬) ப்ராபித்தால் மீளவொண்ணாமையாலும், ஐஶ்வர்ய காமனுக்கு காலாந்தரத்திலேயாகிலும் பகவத்ஸம்பந்தம்பண்ண யோக்யதையுண்டாகையாலும்; இவனுக்கு அந்தயோக்யதையு மழிகையாலேதுர்க்கதியைக்கண்டு முற்படவழைக்கிறார். ப்ரயோஜநாந்தரபரர், "மங்களாசாஸநம்பண்ண வாருங்கோள்" என்றால் வருவர்களோவென்னில்; பகவத்ப்ராப்தியினுத்கர்ஷத்தையும், அத்தைப்பற்ற கைவல்யத்தினுடைய நிகர்ஷத்தையுமறிவித்தால், "விட்டுப்பற்றவேணும்" என்னும் (எ) ஆத்மகுணோபேதரையிறே இவரழைக்கிறது.

வ்யா.—(ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்) ஏடு என்பது-பொல்லாங்கு. "உங்களைப் பொல்லாநிலத்திலே யிடுவதற்குமுன்னம்" என்று பிள்ளையமுதனார். "ஏடு" என்கிறது-ஸூக்ஷ்மசரீரத்தை, ஸ்தூலசரீரத்திற்காட்டில்ப்ரதாநமாய் அதினுடைய ப்ரயோஜநரூபமாய் நிற்கையாலே, "பாலில் ஏடு" என்னுமாப்போலே சொல்லுகிறது. (நிலத்திலிடுவதன்முன்னம்) ஸ்வகாரணமான மூலப்ரக்ர்தியிலே (அ) லயிப்பதற்குமுன்னே. இது நிர்வஹித்துப்போரும்படி;—"ஏடு" என்று - உடம்புக்குப்பேராய், ஸ்தூல

(க) ப்ரத்யாஸந்நராகையாலே - கிட்டினராகையாலே. (உ) பர்யாப்தி-த்ர்ப்தி. (௩) ஆத்மப்ராப்தி - கைவல்யப்ராப்தி. (௪) உத்க்ர்ஷ்டம்-உயர்ந்தது. (௫) சரீரமோக்ஷம் - சரீரம்நீங்குகை. (௬) ப்ராபித்தால் - அடைந்தால். (எ) ஆத்மகுணோபேதர் - ஆத்மகுணமுடையவர்கள், (அ) லயித்தல் - நசித்தல்.

ஸூக்ஷ்மரூபமான சரீரம், ஸ்வகாரணமான மூலப்ரக்ருதியிலே லயிப்பத்தைக் குழுமென் என்னவுமாம். இவ்வாக்யத்தால் - அவர்களுடைய அநர்த்தத்தைக் கண்டழைக்கிறானென்னுமிடந் தோற்றவிருக்கிறதிறே. (வந்து) ஸ்வதந்த்ரரா யிருப்பார்க்குத் தம்மளவில் வருமிடத்திலுண்டான தூரத்தைச்சொல்லுகிறது. (எங்கள் குழாம்புகுந்து) கேவலரும் ஒரு ஸமஷ்டியாயிறே யிருப்பது; அது ஸ்வதந்த்ர மாகையாலே அந்யோந்யம் சேர்த்தியற்றிருக்கும். ஒருத்தருடையஸம்ர்த்தி ஒருத்தரதாயிறே யித்திரளிருப்பது. "பரஸ்பர நீசபாவை: - பரஸ்பரநீசபாவை:" என்னக்கடவதிறே. இத்திரளில்புகுவார்க்கு எவ்வளவதிகாரம்வேணுமென்னில் (கூடுமனமுடையீர்கள்) "புகுருவோம்" என்னும் நினைவேவேண்டுவது. அவிலக்ஷணங்களான புருஷார்த்தங்களுக்கு (க) புரச்சரணங்கள் கனக்கவேண்டியிருக்க, அதில் விலக்ஷணமான இத்திரளிலே புகுருகைக்கு புரச்சரணம் வேண்டாதிருப்பதென்னென்னில்; அவை அப்ராப்த புருஷார்த்தங்களாகையாலே புரச்சரணாதிகள் அபேக்ஷிதங்களாயிருக்கிறன; இது ஸ்வரூபப்ராப்தமாகையாலே வேண்டா. மாதாபிதாக்களை யநுவர்த்திக்கைக்கு இச்சையேயிறே வேண்டுவது. (உடையீர்கள்) இந்த இச்சையால்வந்த ப்ரயோஜநாதிசயத்தாலே "வைஶ்ரவணன்" என்னுமாப்போலே யருளிச்செய்கிறார். கூடநினைப்பார்க்குச்செய்யவேண்டுவது, முன்புநின்ற சிறுமையைக்குலைத்துவரவேணும் (வரம்பொழிவந்து)"வரம்பொழிய" என்கிறவிது, "வரம்பொழி" என்று கிடக்கிறது. ஸர்வேஶ்வரனுக்கு ப்ரகாரபூதனாய், அவனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை அநுபவிக்க இட்டுப்பிறந்தவன், "ஜராமரணமோக்ஷாய-ஜராமரணமோக்ஷாய" என்று(உ) ஸ்வாநுபவத்தளவிலே ஒருவரம்பையிட்டுக்கொண்டானிறே; அத்தையொழிந்து வாருங்கோளென்கிறார். (ஒல்லைக்கூடுமினோ) பற்றுகிற புருஷார்த்தத்தினுடைய வைலக்ஷண்யத்தையநுஸந்தித்தால் பதறிக்கொண்டுவந்து விழவேண்டாவோ. "எடுநிலத்திலிடுவதன்முன்னம்" என்றது-சரீரத்தில் அஸ்தைர்யத்தைப்பற்ற; இங்கு "ஒல்லை" என்கிறது - பற்றுகிறவிஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தைப்பற்ற. "கூடுமனமுடையீர்கள்" என்றும், "கூடுமினோ" என்றும் அருளிச்செய்கிறாரிறே யோக்யதையைப்பற்ற. அத்திரளில்நின்றும் பிற்கதிர்ப்பட்டார்சிலரிவர்களென்று தோற்றுமிறே, ஸ்வரூபம் (ந) வெளிச்செறித்தக்கால்.

(நாடுநகரமும்நன்கறிய)இத்திரளிலே புகுருகைக்குவேண்டுவனவருளிச்செய்தார்; இதுக்குமேல் மங்களாசாஸநத்துக்கு வேண்டுவனவருளிச்ய்கிறார் "நாடு" என்று-அவிசேஷஜ்ஞரைச்சொல்லுகிறது; "நகரம்" என்று-விசேஷஜ்ஞரைச்சொல்லுகிறது. ராஜாவுக்கு ப்ரத்யாஸந்நரிறே நகரத்தார்; நாட்டார் தூரஸ்தரிறே: ஆகையாலே யருளிச்செய்கிறார். (நன்கறிய) நன்றாகவறிய. பகவத்ப்ரத்யாஸத்தியாலே அவிசேஷஜ்ஞர் விடும்படியாகவும், அதுதானே ஹேதுவாக விசேஷஜ்ஞர் பரிக்ரஹிக்கும்படியாகவும்.

(க) புரச்சரணம் - அங்கம். (உ) ஸ்வாநுபவம் - தன்னுடைய அநுபவம். (ந) வெளிச்செறித்தல் - விளங்கிற்றல்.

(கன்கறிய) இந்நன்மையை யறியவென்றுமாம். (நமோநாராயணாயவென்று) இவ்வளவும்போராது, "தன்ஸ்வரூபத்தை உள்ளபடியறிந்து ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைப்பெறவேணும்" என்று வைஷ்ணவனாய்வரவேணுமென்று. "அஹமஸ்மி - அபராதாநாமாலய:" "ஸமஸ்த கல்யாணகுணாத்மகோ-பகவதஸ்வாஸ்மி" என்றிறே நமஶ்ஶப்தத்துக்கு அர்த்தமிருப்பது. ஸ்வாமிபக்கல்பண்ணும் அநுகூலவ்ர்த்தியேயிறே புருஷார்த்தமாவது. (பாடுமனமுடைப்பத்தருள்ளீர்) நினைத்திருக்குமவ்வளவுபோராது, ப்ரீதிக்குப்போக்குவிட்டுப்பாடுவோமென்னும் நெஞ்சுண்டாம்படியான ப்ரேமத்தையுடையீராகில். (வந்து பல்லாண்டுகூறுமினே) வந்து, திருப்பல்லாண்டு பாடுங்கோள். இத்திரளிலே புகுரவேணுமென்றிருப்பீர்! அத்தைச்செய்யுங்கோள்; அவ்வளவுபோராது, உங்களுடைய வ்ர்த்திவிசேஷமும்பெறவேணுமென்றிருப்பீர்! திருப்பல்லாண்டு பாடுங்கோளென்று (க) க்ரியையை இரண்டாக்கி நிர்வஹிக்கவுமாம். (௩)

## அரும்பதம்.

ஏடுநிலத்தில் இத்யாதி—வ்ருத்தாநுவாத பூர்வகமாக மேற்பாட்டுக்குங்கூட ஸங்கதியருளிச்செய்துகொண்டு, "கூடுமனமுடையீர்" "பத்தருள்ளீர்" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை கீழ் இத்யாதி இவரழைக்கிறது என்னுமளவும்—சேர்ந்திருக்குமிறே ஆகையாலே கீழ் அநந்யப்ரயோஜநரை யழைத்தார் என்று கீழோடே ஸம்பந்தம்.—அநந்ய ப்ரயோஜநரோடே கூடி மங்களாஶாஸநம் பண்ணுவதன்றோ வேண்டுவது, இவர்களை யழைப்பானென், அழைக்க ப்ரஸக்திதானுண்டோவென்ன, அவ்வளவிலும் இத்யாதி—உத்கர்ஷத்தைப் பற்ற இவர்களையழைக்கவொண்ணாதென்று நின்றுகொண்டு, முற்படுவானென்னென்கிற ஶங்கையை அநுவதிக்கிறார் ஐஶ்வர்யத்திலித்யாதி—ஐஶ்வர்யார்த்திகளைப்பற்றதுர்க்கதொன்று முற்பட அழைக்கிறதென்கிறார் பகவதித்யாதி—உபகரணமான ஶரீரமென்றது-"விவித்ரா தேஹஸம்பத்தி:" இத்யாதியைக் கடாக்ஷித்து—மோக்ஷத்தை - கைவல்யத்தை—இவ்வாக்யம் பகவல்லாபஹேதுவான ஶரீரபரிக்ரஹத்துக்கும் யோக்யதையில்லாதபடி கைவல்யம் நித்யமாயிருக்கையாலே வந்ததுர்க்கதியைச்சொல்லுகிறது—இத்தால் மீளுகையும் வருகையும் போகையுமின்றிக்கே மின்மினிபோலேயிருந்து தன்னைத்தானே தின்று கிடக்குமென்றபடி—ஆக இவர்களை யழைக்கைக்கு ப்ரஸக்தியருளிச்செய்தார் கீழ்; அவர்தாம் ஸ்வாபீஷ்டங்களை விட்டுவருவார்களோவென்று ஶங்கித்து, "மனமுடையீர்" என்றத்தைக்கடாக்ஷித்து பரிஹரிக்கிறார் ப்ரயோஜநாந்தரேத்யாதி—"ஏடு" என்றதற்கு மூன்றர்த்தம், "நிலம்" என்றதற்கிரண்டர்த்தம்; இவற்றைக்காட்டுகிறார் ஏடென்பது என்றுதொடங்கி என்னவுமாம் என்னுமளவும்—பொல்லாநிலம் என்றது-ஸம்ஸாரபூமி—ஸூக்ஷ்மஶரீரத்தைக்காட்டும் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் ஸ்தூலேத்யாதி—ப்ரதாநமாய்-ஆமோக்ஷ ப்ரளயமநுவர்த்தமாநமாகையாலே அதிஶயிதையாய்,—ப்ரயோஜநரூபமாய் என்றது-பலரூபமாயென்றபடி;—அதாவது-பூர்வபூர்வ கல்பஸ்தூலஶரீரம்கர்மத்வாரா உத்தரோத்தரகல்ப ஸூக்ஷ்மஶரீரத்துக்கு ஹேதுவாகையாலே யென்கை—"வந்து எங்கள் குழாம்புகுந்து" என்னு மிவ்வளவே யமைந்திருக்க, இப்படி யிவ்வாக்யம் ப்ரயோ

(க) க்ரியை-பயனிலே.

இப்பானென்னென்ன, அருளிச்செய்கிறார் இவ்வாக்யமித்யாதி—தோற்ற என்றது-தோற்றுவிக்க என்றபடி—“மனமுடையீர்கள்” என்று ஸம்போதிக்கச்செய்தே,வந்தென்னக்கூடாதே யென்ன, ஸ்வதந்த்ரரித்யாதி—ஸ்வதந்த்ரர் - கேவலர்;—இவர்க்கும், அத்யந்தபாரதந்த்ர்ய ஸ்வரூபாநுரூபமான மங்களாஶாஸநபரர்க்குமுண்டான மாநஸஜ்ஞாந வைஷம்ய ப்ரயுக்தமான தூரத்தைச் சொல்லுகிறதென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம்—“எங்கள்குழாம்” என்பானென், அவர்களும் குழாங்களாக இரார்களோ, அதுக்கும் இதுக்கும் வாசியேதென்ன, அருளிச்செய்கிறார் கேவலருமித்யாதி—சேராச்சேர்த்தியென்றது - ஸ்வார்த்தபரராகையாலே ப்ரோத்கர்ஷாஸஹிஷ்ணுக்களாயிருக்கை—“ஸவ-ஷுஸாய-ஓஂஸஜீஹ0-த” அன்றோ, இவர்களிப்படி யிரார்களோவென்ன,ஒருத்தரித்யாதி—பரஸம்ருத்தியே ப்ரயோஜநமாகையாலே அந்தவிரோதமில்லையென்று கருத்து—இப்படி யிருப்பார்களென்னுமதுக்கு ப்ரமாணம் “ஸுஹவா” இத்யாதி “நிக்ரஹிவாஂஹித ஸுஹவா நீவுஹா ைவெஉைவெஷவெ தஃவரிஜவெநஷவஸஂஷீய” இது ஸ்ரீவைகுண்டஸ்தவஶ்லோகம்—மேலுக்கவதாரிகை இத்திரளித்யாதி—“மனமுடையீர்கள்” என்று இவ்வளவைச்சொல்லுகையாலே வேறொன்றுவேண்டாவென்று தோன்றுகிறது, அத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் புகுருவோமித்யாதி—இப்படி ஸாதாரணமாகச் சொல்லுவானென்னென்கிற தடஸ்தஶங்கையை ஸோபபத்திகமாசஶங்கித்து பரிஹரிக்கிறார் அவிலக்ஷணேத்யாதி—உபாஸநா பூர்வாங்கமான தீர்த்தயாத்ராதி கர்மங்கள் ஸ்வரூபப்ராப்தமாகையாலே வேண்டாவென்றதுக்கு த்ருஷ்டாந்தம்-மாதா பிதா இத்யாதி—“உடையீர்கள்” என்கிறமதுப்பு பூமாவிலேயாக்கி யருளிச்செய்கிறார் இந்தஇச்சையித்யாதி—வைஶ்ரவணன் என்னுமாப்போலே யென்றது-தநவான் என்னுமாபோலே யென்றபடி—கீழ்பதத்தோடேவரம்பொழி யென்றதுக்கு அவதாரிகை கூட நினைப்பார்க்கு இத்யாதி—வரம்பாவது இன்னதென்கிறார் ஸர்வேஶ்வரனுக்கித்யாதி—இட்டுக்கொண்டானிறே யென்கையாலே ஸ்வகல்பிதமான துஸ்வரூபமன்றென்றுதோற்றுகிறது—“ஒல்லை” என்றதுக்கு வாஸனை - பற்றுகிற இத்யாதி—பற்றுகிற புருஷார்த்தமாவது-திருப்பல்லாண்டு பாடுகை—“இவ்வதன்முன்னம்” என்றபோதே ஐஶ்வர்யம்தோன்றாநிற்க, “ஒல்லை” என்பானென்னென்ன, விஷயடேதத்தாலே பரிஹரிக்கிறார் ஏடுநிலத்திலித்யாதி—ஶரீரத்தில்அஸ்தைர்யத்தையென்றது பிள்ளையமுதனார் நிர்வாஹத்தைப்பற்ற—வாருங்கோள் என்னுமல்,பிரிந்துபோனை அழைக்குமாபோலே “கூடுமின்” என்பானென்னென்ன,அருளிச்செய்கிறார் கூடுமனமித்யாதி—யோக்யதை-ஶேஷத்வரூபஸம்பந்தம்—என்னென்றாலும் ஸம்பந்தஜ்ஞாநமுண்டானால் பிரிந்தாராகத்தோற்றுமோவென்ன, இத்திரளித்யாதி—பிற்கதிர்-கதிர்பிற்படுகை—வெளிச்செறித்தக்கால்-ப்ரகாஶித்தால்-வ்ருத்தாநுவாதம் பண்ணிக்கொண்டுஉத்தரார்த்தத்துக்கெல்லாம் அவதாரிகைஇத்திரளித்யாதி—விஶேஷஜ்ஞரையும் அவிஶேஷஜ்ஞரையும் சொல்லுகிறது என்கைக்குநியாமகம் ராஜவுக்தித்யாதி—ஆகையாலே யென்றது-விஶேஷஜ்ஞாவிஶேஷஜ்ஞ லக்ஷணமாகையாலே யென்றபடி—ஆகையாலேயென்ற அநந்தரம் நாடும்நகரமும் என்று ஶேஷம்—இவர்களறியவென்னுமல் “நன்கு” என்றுவிஶேஷிக்கையாலே, நன்மையை விஶதீகரிக்கிறார் பகவதித்யாதி—இவ்வாக்யத்திலறியவென்றும் அநுஷங்கித்துக்கொள்வது—“நன்கு” என்றதுக்கு அர்த்தாந்தரம் இந்நன்மை இத்யாதி—இவ்வளவென்றது நாடும் நகரமும் நன்கறிகை—நமஶ்ஶப்தத்திலே நோக்காகத்தன் ஸ்வரூபத்தை உள்ளபடியறிந்து என்றது—சதுர்த்யந்தத்தைப்பற்றி ஸ்வரூபேத்யாதி—இவ்வாக்யத்தால் பலிதம் வைஷ்ணவனாய் வரவேணுமென்றது—நமஶ்ஶப்தம்ஸ்வரூபயாதாத்ம்ய ப்ரதிபாதகமென்றதுக்கு நியாமகமும் கைங்கர்ய புருஷார்த்தமென்ற

க்கு உபபத்தியுங் காட்டுகிறார் "ஸஹஸ்லே" இத்யாதி வாக்யத்ரயத்தாலே—"மன முடையீர்கள்" "பத்தருள்ளீர்" என்று கூட்டித்தாத்பர்யம் நினைத்திருக்கு மித்யாதி—"பாமெனமுடை" என்றதுக்கு வ்யாவ்ருத்தி பூர்வகமாக அர்த்தம் நினைத்தித்யாதி—பத்தருள்ளீர் என்றதின் தயத்யர்த்தவிவக்ஷையாலே ஏகவிஷயமாக்கிக் கீழருளிச்செய்து, ஸம்போதகவிவக்ஷையாலே பிந்நபுருஷவிஷயமாக யோஜநாந்தரம் இத்திரளிலே இத்யாதி—அவ்வளவிலே-கூடுகைமாத்ரம்—க்ரியையை யிரண்டாக்கி இரண்டு க்ரியையை இரண்டு அதிகாரிவிஷயமாக்கி யென்றபடி.

---

## அஞ்சாம்பாட்டு.

அண்டக்குலத்துக்கதிபதியாகியசுரரிராக்கதரை
யிண்டக்குலத்தையெடுத்துக்களைந்தவிருடிகேசன்றனக்குத்
தொண்டக்குலத்திலுள்ளீர்வந்தடிதொழுதாயிரநாமஞ்சொல்லிப்
பண்டைக்குலத்தைத்தவிர்ந்துபல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்மினே.

(இ-ள்.) அண்டக்குலத்துக்கு - அண்டஸமூஹத்துக்கு, அதிபதியாகி-தலைவனாய், அசுரரிராக்கதரை - அஸுரராக்ஷஸர்களுடைய, இண்டக்குலத்தை - நெருங்கினதிரளை, எடுத்து - சேரத்திரட்டி, களைந்த-நிர்மூலமாகப்போக்கின, இருடிகேசன்றனக்கு - இந்த்ரியங்களைத் தன்வசமாகநடத்துமவனுக்கு, தொண்டக்குலத்தில்-அடிமைசெய்யுங்குலத்திலே, உள்ளீர்-உளரானநீங்கள், வந்து—, அடி - ஸர்வேஶ்வரன் திருவடிகளை, தொழுது—, ஆயிரநாமம் - அவன்திருநாமங்களையெல்லாம், சொல்லி - வாயாரச் சொல்லி, பண்டைக்குலத்தை - பகவத்விமுகராயிருந்தகாலமான பழைய ஜாதியை, தவிர்ந்து - "நான், எனக்கு" என்கிறநினைவோடுவிட்டு, பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்மின் - அநேகமாயிரம் ஸம்வத்ஸரங்கள் நித்யமாய்ச் செல்லவேணுமென்று மங்களாசாஸநம்பண்ணுங்கோள்.

(தா-ம்.) அண்டஸமூஹத்துக்கு அதிபதியாகி, ஹிரண்யாத்யஸுரரையும், ராவணாதிராக்ஷஸரையும், நடைவழுவின சண்டாளரையும், ஆஶ்ரிதவிரோதிகளென்று சேரத்திரட்டி, நிர்மூலமாக நாஶம்பண்ணின ஹ்ருஷீகேஶனுக்கு, அடிமைக்குடியிற்பிறந்துள்ள நீங்கள், அண்டாத்யைஶ்வர்யங்கள் நிஷ்ப்ரயோஜநமென்று வந்து, திருவடிகளே ப்ரயோஜநமென்று ஸேவித்து, போக்யமாகையாலே திருநாமங்களெல்லாம் வாயாரச்சொல்லி, பழையஜாதியைநீங்கி, அநேகஸம்வத்ஸரங்கள் மங்களமுண்டாகவேணும், அநேகமாயிரம் ஸம்வத்ஸரங்கள் மங்களமுண்டாகவேணும் என்று பாடுங்கள் என்பதாம்.

அ-கை.—அஞ்சாம்பாட்டு. (அண்டமித்யாதி) முற்பட அநந்யப்ரயோஜநரையழைத்தார்; கேவலரும் ஐஶ்வர்யார்த்திகளும் ப்ரயோஜநாந்தரபரரா யிருக்கச்செய்தேயும், கேவலருடைய துர்க்கதியைக்கண்டு மூன்றாவழைத்தார்; இப்பாட்டிலே - ஐஶ்வர்யார்த்திகளையழைக்கிறார்.

வ்யா.—(அண்டக்குலத்துக்கதிபதியாகி) தேவதைகளுடைய ஐஶ்வர்யத்துக்கெல்லாம் மேலான (க) அண்டாதிபத்யமிறே ஐஶ்வர்யத்துக்கு

(க) அண்டாதிபத்யம் - அண்டங்களுக்குத் தலைவனாகுகை.

மேலெல்லை; அந்த ப்ரஹ்மா ஈஶ்வரனை ஆஶ்ரயிக்கும் ப்ரகாரஞ்சொல்லுகிறது. "அண்டாதிபதயே நம: - அண்டாதிபதயேநம:" என்றிறே இப்பத ப்ராப்திக்கு ஸாதநமந்த்ரம்; அந்த அண்டைஶ்வர்ய விஶிஷ்டனாகவிறே ஸர்வேஶ்வரனை யநுஸந்திப்பது. "வ்யாஹரந் மாமநுஸ்மரந் - வ்யாஹரந்மாமநுஸ்மரந்" என்கிறபடியே இம்மந்த்ரத்தைச் சொல்லவும், நெஞ்சாலே ஐஶ்வர்யவிஶிஷ்டனாக அநுஸந்திக்கவுமாயிறே ஆஶ்ரயணப்ரகாரமிருப்பது. * அண்டக்குலத்துக்கு அதிபதியான ஆகாரமேயன்றோ இச்சப்தத்திலுள்ளது, ஆஶ்ரயணப்ரகாரம் தோற்றவிருந்ததில்லையேஎன்னில்; (க) உதாரனாயிருப்பானொருவன் கையிலே எலுமிச்சம்பழமிருந்தால் "இதிருந்தவழகென்!" என்று சொன்னவளவிலே, (உ) பாவஜ்ஞனாயிருக்குமவன் "கொள்ளலாகாதோ" என்று கருத்தறிந்துகொடுக்குமிறே; அப்படியே, அண்டாதிபத்யத்திலே அபேக்ஷையுண்டென்று தங்களபேக்ஷையை (௩) ஆவிஷ்கரிக்கிறார்கள், இத்தால் - ப்ரயோஜநாந்தரபரரைக்குறித்து "உதாரா: - உதாரா:" என்னுமவனுடைய ஔதார்யம் ப்ரகாஶிக்கிறது. (அண்டக்குலத்துக்கு) "அண்டாநாம் ஸஹஸ்ராணாம் - அண்டாநாந்துஸஹஸ்ராணாம்" என்றுதொடங்கி, "கோடிகோடிஶதாநிச - கோடிகோடிஶதாநிச" என்று (௪) அஸங்க்யாதமான அண்டங்களுக்கு நிர்வாஹகனாகையாலே அபேக்ஷித்தாரபேக்ஷித்த அண்டங்களைக்கொடுக்கைக்கு உடைமையைச் சொல்லுகிறது. (அதிபதியாகி) உபயவிபூதிக்கும் நிர்வாஹகனாகை. (ஆகி) ஆஶ்ரிதர் தன்னை யநுஸந்தித்தவளவிலே யாயிருக்கை. ஐச்வர்யார்த்தி, ஐச்வர்ய விஶிஷ்டனாக அநுஸந்தித்தால் அவ்வளவாயிருக்கும்; கைவல்யார்த்தி, (௫) அஸ்ப்ருஷ்ட ஸம்ஸார கந்தனாக அநுஸந்தித்தால் அவ்வளவாயிருக்கும்.

(அசுரரிராக்கதரை) இப்பதத்துக்கு அஸுரர்களாலேவேதாபஹாராத்யாபத்துக்களில் களையறுத்துக்கொடுக்கையும் ரக்ஷகனுக்கு பரமிறே. "ஆர்த்தன்" என்றும், "அர்த்தார்த்தி" என்றும் ஐச்வர்யபுருஷார்த்தம் இரண்டு (௬) முகமாயிறேயிருப்பது. அதில் (௭) அர்த்தார்த்தியைக்கீழே சொல்லி, இவ்வம்சத்தாலே ஆர்த்தனைச் சொல்லுகிறது. (அ) ஜந்மப்ரப்ருதி பராநர்த்தமே பண்ணிப்போருவது இரண்டுவர்க்கமிறே. ஸம்பந்தமொத்திருக்க நிரஸநத்திலே யிழிகிறது, ஆச்ரிதவிரோதிகளென்றிறே. (இண்டக்குலத்தை) மிகவும்நெருங்கினதிரளை. "இண்டர்" என்று - சண்டாளர். இவர்களை சண்டாளரென்று சொல்லுகிறது - (௯) நிஹீநரென்னும் நினைவாலே. உத்கர்ஷத்துக்கெல்லை - பரஸம்ர்த்யைகப்ரயோஜநராயிருக்கை; நிகர்ஷத்துக்கெல்லை-பராநர்த்தமே யாத்ரையாயிருக்கை. இவ்வாபத்துக்களிலே "அஸுரஶத்ரவே நம: - அஸுரஶத்ரவேநம:" என்றிறே இவர்

---

(க) உதாரன்-கொடையாளி. (உ) பாவஜ்ஞன்-நினைவறியுமவன். (௩) ஆவிஷ்கரித்தல்-ப்ரகாசிப்பித்தல். (௪) அஸங்க்யாதம்-எண்ணில்லாதது. (௫) அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தன்-ஸம்ஸாரஸம்பந்தம் சற்றுமில்லாதவன். (௬) முகம்-வகை. (௭) அர்த்தார்த்தி-பொருளைவிரும்புமவன். (அ) ஜந்மப்ரப்ருதி - பிறப்புமுதல். (௯) நிஹீநர்-தண்ணியர்.

[illegible]ய ஆச்ரயண ப்ரகாரமிருப்பது. (எடுத்துக்களைந்த) பொல்லாவரக் [illegible]கிள்ளிக் களைந்தானை" என்னுமாப்போலே, ஆச்ரிதர்பக்கல் அழல் [illegible]தபடி ரக்ஷிக்கை. "இலங்கைபாழாளாக" என்றதும் (க) விபீஷண பரிக்ரஹத்துக்கு ஒருநோவுவாராதபடியிறே; விபீஷணக்ர்ஹத்துக்கு அழல் தட்டாதபடியிறே லங்காதஹநம் பண்ணிற்றுத் (உ) திருவடியும். (இருடிகேசன்) ப்ரயோஜநாந்தரபரர்க்கு ஐச்வர்யாதிகளிலே கர்மாநுகூலமாக ருசியைப் பிறப்பிக்கும்; தன்பக்கலிலே (ங) ந்யஸ்தபரராயிருப்பார்க்கு ஸ்வரூபாநுரூபமாக ருசியைப்பிறப்பிக்கும். ஐச்வர்யார்த்தமாக அவன் பக்கலிலே கண்வைக்கும்போதே அவன் வடிவழகிலே உறைக்கவைப்புங்கோள்; அவன் (ச) "மமேதம்" என்கிற அபிஸந்தியைக் குலைத்துத் தன் பக்கலிலே ருசியைப்பிறப்பிக்கும்; அத்தாலே, அபேக்ஷித்த ஐச்வர்யத்தை (ரு) விஸ்மரித்து அவன்றன்னையே பற்றலாம்.

(தனக்குத் தொண்டக்குலத்திலுள்ளீர்) இப்படி ஐச்வர்யத்தில் ப்ரேமம்போய் பகவத்ப்ரேமயுக்தருடைய திரளிலேயுளரானநீங்கள். "தொண்டக்குலம்" என்று-தனியே ஒருஸந்தாநம்போலே காணும். "தேஹமே ஸ்வரூபம்" என்றிருப்பார்க்கும், "சேஷத்வமே ஸ்வரூபம்" என்றிருப்பார்க்கும் இத்தனை வாசியுண்டிறே. இனி, அநந்யப்ரயோஜநராயிருப்பார்க்கு (சு) க்ர்த்யம் இன்னதென்கிறார் மேல் (வந்தடிதொழுது) திருவடிகளை ப்ரயோஜநமாகவந்து, அநுகூலவ்ர்த்திகளைப்பண்ணி. ஐச்வர்யமே ப்ரயோஜநமாய் விஷயாநுபவமே யாத்ரையாயிருக்கை தவிர்ந்து, திருவடிகளே ப்ரயோஜநமாய் அநுகூலவ்ர்த்தியே யாத்ரையாயிருக்கும்படிபாருங்கோள். (ஆயிரநாமஞ்சொல்லி) இரண்டு திருநாமத்தையே நிர்ப்பந்திக்கவேண்டுவது "மமேதம்" என்றிருக்குமன்றிறே; "தவேதம்" என்கிற புத்தி பிறந்தால், பகவத்குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களெல்லாம் போக்யமாயிறே யிருப்பது; அவற்றை வாயாரச்சொல்லி. (பண்டைக்குலத்தைத்தவிர்ந்து) தொண்டக்குலத்திலே வந்தந்வயித்தவாறே "மமேதம்" என்றிருந்தகாலம் (எ) ஜந்மாந்தரமாய்த் தோற்றுமிறே. ஒரு ஜந்மத்திலே (அ) த்விஜந்மனாகிறானிறே—ராஜர்ஷியான விச்வாமித்ரன், அந்த ஜந்மத்திலே (கூ) ப்ரஹ்மர்ஷியானானிறே. அங்கு தபஸ்ஸாலே வர்ணபேதம்பிறந்தது; இங்கு பகவத்ப்ரஸாதத்தாலே ஸ்வரூபபேதம் பிறந்தது. "உனக்கு நான்" என்ற வருந்தரம், முன்பு "நான் எனக்கு" என்றிருந்தவிது வ்யதிரேகமாய்த் தோன்றுமிறே.

(பல்லாண்டு) இப்படி அநந்யப்ரயோஜநரான நீங்கள் மங்களாசாஸநம்பண்ணுங்கோள். "ப்ரயோஜநாந்தரபரனைப் போந்தவன் நமக்கு ஸம்ர்த்தியை ஆசாஸிக்குமித்தனை பரிவனைப்பெற்றோமே!" என்று அவன்

---

(க) விபீஷணபரிக்ரஹம்-விபீஷணஸம்பந்திகள். (உ) திருவடி-ஹநுமான். (ங) ந்யஸ்தபரர் - வைக்கப்பட்டசுமையுள்ளவர். (ச) மமேதம் - இது என்னுடையது. (ரு) விஸ்மரித்து-மறந்து. (சு) க்ர்த்யம் - செய்கை. (எ) ஜந்மாந்தரம் - முன்பிறப்பு. (அ) த்விஜந்மன்-இருபிறப்பாளன். (கூ) ப்ரஹ்மர்ஷி-ப்ராஹ்மணரிஷி.

குளிரநோக்கும்; (பல்லாயிரத்தாண்டென்மின்) பின்னை, பல்லாயிரத்தாண்டு என்னுங்கோள். அந்நோக்கழகு நித்யஸ்ரீயாய்ச்செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுங்கோள். உங்களுக்கு இம்மாத்ரத்தாலே ஸ்வரூபமும், அத்தாலே ஈச்வரனுக்கு ஸம்ருத்தியு முண்டாகப்பெற்றால்ஆறியிருக்கிறதென்? சடக்கென மங்களாசாஸநம் பண்ணுங்கோளென்கிறார். (ரு)

## அரும்பதம்.

அண்டமித்யாதி—கீழ் இரண்டுபாட்டில் ப்ரமேயங்களை யருளிச்செய்து கொண்டு, இப்பாட்டுக்கு ஸங்கதி யருளிச்செய்கிறார் முற்பட இத்யாதி—த்ரிலோகாதிபதியென்னாதே இப்படி ப்ரயோகிப்பானென்னென்ன, தேவதைகளுடைய இத்யாதி—மேலான-உத்க்ருஷ்டமான—சதுர்த்தஸலோகாதிபதியென்னாதே, "அண்டக்குலத்துக்கதிபதி" என்பானென்னென்ன, மந்த்ரலிங்கம் தோற்றுகைக்காக என்கிறார் அந்த இத்யாதி—அந்த ப்ரஹ்மாவென்றது - அண்டாதிபத்யத்தையுடைய ப்ரஹ்மாவென்றபடி—சொல்லுகிற ப்ரகாரந் தன்னைக் காட்டுவாராக அதிஷ்டிக்கை "ஜ்ஞாயிவைதயெநஃ" என்கிற வாக்யத்வயமும்—மந்த்ரத்தைச் சொன்னால் போராதோ, ஐஸ்வர்யவிஸிஷ்டனாகவும் அநுஸந்திக்கவேணுமோ, என்கிற ஸங்கையை பரிஹரிக்கிறார் "வ்ராஹநு" இத்யாதி—அன்றிக்கே, "நமஸ்க்ருத்ய:" என்று நமஸ்காரமன்றோ ஆஸ்ரயணமாவது, சொல்லுகையும் அநுஸந்திக்கையும் ஆஸ்ரயணமாமோவென்ன, "வ்ராஹநு" இத்யாதி—ப்ரணவவிஷயமாகச் சொன்ன இந்தப்ரமாணம் மந்த்ராந்தரங்களுக்கும் துல்யந்யாயேநவருமென்று திருவுள்ளம்—ஆஸ்ரயணத்துக்கு வாசகபதமில்லையென்று ஸங்காநுவாதம்பண்ணிக்கொண்டு,வாசகமில்லாவிட்டாலும் ஸூசகமுண்டென்று,த்ருஷ்டாந்தபூர்வகமாகப்பரிஹரிக்கிறார் அண்டத்துக்கித்யாதி வாக்யத்ரயத்தாலே—ஆவிஷ்கரிக்கிறார்களாகையாலே அண்டத்துக்கதிபதியாகியென்று அநுவதித்து ஸூசிப்பிக்கிறாரென்று கருத்து—வாசகமான ஸப்தத்தைச்சொல்லாதே, கொடுக்கைக்குறுப்பாக அபேக்ஷா ஸூசக ஸப்தம் ப்ரயோகிக்கையாலே, ஒருவிஸேஷார்த்தம் பலித்ததென்கிறார் இத்தால் இத்யாதி—குலபதப்ரயோகதாத்பர்யம் "ஜ்ஞாநாஜதஸ்ராதி—உடைமை-தேயவஸ்து—பதியென்னாதே, "அதிபதி" என்கையாலே, அதிக: பதி: என்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - உபயேத்யாதி—இவ்வாக்யம் உபாஸகாபிப்ராயமன்றிக்கே ஆழ்வாருக்குக் கருத்தாக வ்யாக்யாதா அருளிச்செய்கிறாரென்று கண்டுகொள்வது—சில ஸ்ரீகோஸங்களி லிந்த பாடமுண்டு—கோஸாந்தரங்களிலே அதிபதியாகி யென்றெடுத்துக்கூட்டி, உபயவிபூதிக்கு நாயகனாயிருக்க ஆஸ்ரிதன் தன்னை யநுஸந்தித்தவளவிலேயா யிருக்கவென்று பாடமுண்டு—இந்த பாடத்தில் உபயவிபூதிநாயகத்வம் ஸஹஜமாயிருக்க, அண்டமாத்ராதிபதியானானென்னக் கூடுமோவென்ன, அருளிச்செய்கிறார் உபயேத்யாதி என்று கண்டுகொள்வது—அநுஸந்தித்தவளவிலே-நினைத்த ஆகாரமாத்ரத்திலே—விவரணம் ஐஸ்வர்யேத்யாதி வாக்யத்வயம்—கைவல்யார்த்தியென்கிற வாக்யத்துக்கு, "அறவனை யாழிப்படையந்தணனை" என்று ஸுத்திகுணயோகத்தைச் சொல்லுவார்களிறேயென்று கருத்து—அவ்வளவாயிருக்குமென்றது - ரக்ஷ்யாபேக்ஷாநுகுணமாகத் தன்னை யமைத்துவைக்குமென்கை—ப்ரஹ்மா அண்டாதிபத்யத்துக்காக ஆஸ்ரயிக்கிற ப்ரகாரஞ் சொல்லுகிற இடத்தில் அஸுரநிரஸநஞ் சொல்லுவானென்னென்னில், அருளிச்செய்கிறார் இந்த பதத்துக்கித்யாதி—இந்த பதத்துக்கு என்றது - இந்த அண்டாதிபத்யத்துக்கென்றபடி—ரக்ஷகனுக்கு பரமானாலும், பூர்வம் ஐஸ்வர்யார்த்தியை யழைக்கிற ப்ரகரண

த்துக்கு அது சேருமோவென்ன. ஆர்த்தன் இத்யாதி—இந்த ப்ரஹ்மாவுக்கே ஆபத்து
வந்தால் ஆர்த்தியுமுண்டென்று கருத்து—அன்றிக்கே, அநிஷ்டபூர்வகேஷ்ட ப்ரா
வணங்கள் ரக்ஷக க்ருத்யமாகையாலே, இஷ்ட ப்ராவணத்தில் அநுஷங்கிகமாக
வந்ததென்று கீழருளிச்செய்து, ஐஶ்வர்யார்த்திதான் த்விவிதனாகையாலே, "அசுர
ரிராக்கதர்" என்றதுக்கு ப்ரயோஜநாந்தர மருளிச்செய்கிறார் ஆர்த்தனித்யாதி யெ
ன்னவுமாம்—இத்தயோஜனை ஸ்வரஸம்—அசுரரென்றாற்போராதோ, இராக்கதரென்
றுஞ் சொல்லவேணுமோவென்ன, ஜந்மேத்யாதி—"ஸஹோ ஹம்ஸவ ஹதெ
ஷ" என்றிருக்குமவன் இவர்களை யழியச்செய்கைக்கு நியாமக மருளிச்செய்கி
றார் - ஸம்பந்தமித்யாதி—"இண்டம்" என்றதுக்கு நெருக்கமாதல் சண்டாளரென்
றாதல் இரண்டர்த்தம்—சண்டாளரென்கிறது எவ்வழியாலேயென்ன, இவர்களை
இத்யாதி—ஹீநரானமையில் எல்லையை ஸப்ரதியோகியாக அருளிச்செய்கிறார் -
உத்கர்ஷத்துக்கித்யாதி—ஆகையாலே யிப்படி பராநர்த்தம்பண்ணுமவர்கள் சண்
டாளரென்று கருத்து—இந்த அஸுரநிரஸநமானது ஆஶ்ரயண ப்ரகாரமானமை
யை அருளிச்செய்கிறார் இவ்வாபத்துக்களித்யாதி—இவ்வாபத்துக்களென்றது-இந்
த அஸுரரால் வந்த ஆபத்துக்களென்றபடி—"களைந்த" என்றாற்போராதோ;
"எடுத்து" என்பானென்னென்ன, "பொல்லா" இத்யாதி—அழல்-ஔஷ்ண்யம்—
இப்படி நிரஸித்ததுக்கு உதாஹரணம் "பாழாள்" இத்யாதி—பரிக்ரஹம்-பரிகரமெ
ன்றபடி—இவனேயன்றிக்கே இவனைப்பற்றின திருவடியும் இப்படி செய்தானென்
கிறார் விபீஷணேத்யாதி—ஹ்ருஷீகாணாம் இந்த்ரியாணாமீஶ: நியாமக: என்றாய்,
இந்த்ரியங்களென்னுமையாலே யதாதிகாரம் நெஞ்சை மூட்டுமென்று அர்த்தமரு
ளிச்செய்கிறார் ப்ரயோஜநாந்தரபரரித்யாதி—ஆனால் எங்களுக்கு அவனைப்பற்ற
வழியேதென்ன, அருளிச்செய்கிறார், ஐஶ்வர்யார்த்தமாக இத்யாதி வாக்யத்ரயத்தா
லே—வடிவிலே யிவன் நெஞ்சுவைத்தால், அதுவும் பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரி
யாகையாலே வசீகரிக்குமாகையாலே, ப்ரயோஜநாந்தரபரதையைக் குலைக்குமெ
ன்று கருத்து—"இருடிகேசனுக்கு" என்னாதே, "தனக்கு" என்று விஶேஷிக்கை
யாலே ஐஶ்வர்யத்திலே ப்ரேமம்போய் என்றபடி—"திரள்" என்னாமல், குலம் என்
றதுக்கு வாசனை. தொண்டக்குலமித்யாதி—"இண்டக்குலத்தை யெடுத்துக்களை
ந்த" என்றும், தொண்டக்குலத்திலுள்ளீர்" என்றுஞ் சொல்லுகிற பதங்களைக் கடா
க்ஷித்து, வ்யாக்யாதா ஈடுபடுகிறார் தேஹமே ஸ்வரூபமித்யாதி—மேலுக்கெல்லாம்
அவதாரிகை இப்படி யித்யாதி—"அடிவந்துதொழுது" என்று அந்வயமுகேந அரு
ளிச்செய்கிறார் திருவடிகளே யித்யாதி—கீழ்வாக்யத்தை வ்யாவர்த்யமுகேந அருளி
ச்செய்கிறார் ஐஶ்வர்யமேயித்யாதி—ஒன்றிரண்டமையாதோ, ஆயிரம்வேணுமோ
வென்ன; அருளிச்செய்கிறார் இரண்டித்யாதி வாக்யத்ரயத்தாலே—இரண்டு என்ற
து "ஜ்ஞாயிவதயெநஃ" "ஸுஹ்ருதெநஃ" என்றத்தை நினைக்கி
றது—மமேதமென்றிருக்குமன்று-தனக்கொரு புருஷார்த்தம் வேணுமென்றபோது
என்றபடி—தவேதமென்கிற புத்தியாவது-எல்லாநன்மைகளும் அத்தலைக்கு வேணு
மென்கிற ப்ரதிபத்தி—"ஆயிரம்" என்றது அநந்தமென்று விவக்ஷித்து, திருநாமங்
களெல்லாம் என்கிறார்—ஆயிரநாமங்களோடே, "பல்லாண்டென்மின்" என்ன
அமைந்திருக்க, சொல்லியென்று விஶேஷித்ததுக்குத் தாத்பர்யம் ஆயிரஞ்சொல்லி
யென்றது—"பண்டைக்குலம்" என்றது - முன்புள்ள குலம் என்றபடியாய் ஜந்மா
ந்தரமென்றபடி—ஜந்மமொன்றாயிருக்க; ஜந்மாந்தரமாகிறபடி யெங்ஙனேயென்ன;
தொண்டக்குலத்திலே யித்யாதி—இதுக்கு உதாஹரணத்வயம் ஒரு ஜந்மத்திலே
யித்யாதி வாக்யத்வயம்—இப்படி ஆகைக்கு ஹேதுவேதென்ன, அங்கு இத்யாதி
வாக்யத்வயம்—ஸ்வரூபபேதமென்றத்தை உபபாதிக்கிறார் உனக்கித்யாதி—வ்யதி

ரோகமாய் என்றது, பிந்நமாயென்றபடி—கீழெல்லாம் கடாக்ஷித்து, "பல்லாண்டு" என்றதுக்குத் தாத்பர்யம் இப்படி யித்யாதி—கீழ் அபதாநத்தைக் கடாக்ஷித்து, "பல்லாயிரத்தாண்டு" என்றதுக்கு அவதாரிகை ப்ரயோஜநாந்தரோத்யாதி—இதுக்குத் தாத்பர்யம் அந்நோக்கு, இத்யாதி—" என்மின் " என்றதுக்குத் தாத்பர்யம் உங்களுக்கித்யாதி—சடக்கென - சீக்ரமாக—இப்படி உக்திமாத்ரத்திலே இம்மஹா பலம் ஸித்தித்தால் ஆறியிருக்கக் கூடுமோவென்று கருத்து.

---

## ஆறும்பாட்டு.

எந்தைதந்தைதந்தைதந்தைதம்மூத்தப்பனேழ்படிகால்தொடங்கி
வந்துவழிவழியாட்செய்கின்றோம்திருவோணத்திருவிழவி
லந்தியம்போதிலரியுருவாகியரியையழித்தவனைப்
பந்தனைதீரப்பல்லாண்டுபல்லாயிரத்தாண்டென்றுபாடுதுமே,

(ப-ரை.) எந்தை - நாலும் என்னப்பனும், தந்தை - அவனுக்கப்பனும், தந்தை - அவனுக்கப்பனும், தந்தை- அவனுக்கப்பனும், தம்மூத்தப்பன் - அவனுக்கு அப்பனும்பாட்டனுமாகிய, ஏழ்படிகால்தொடங்கி - ஏழுதலைமுறை முதற்கொண்டு,வந்து-மங்களாசாஸநம்பண்ணுகைக்கு யோக்யமான ஸமயங்களில்வந்து, வழிவழி-முறைமுறையாக,ஆட்செய்கின்றோம்-தப்பாமே அடிமைசெய்கிறோம்; திருவோணத்திருவிழவில்-திருவோணமென்கிற திருநாளிலே, அந்தியம்போதில்-அஸுரர்க்கு பலம் வர்த்திக்கத்தக்க அந்திப்பொழுதிலே, அரியுருவாகி-ந்ருஸிம்ஹரூபியாய்க்கொண்டு, அரியை-ஆச்ரிதனை ப்ரஹ்லாதாழ்வானுக்கு சத்ருவான ஹிரண்யனை, அழித்தவனை - உருவழித்துப் பொகட்டவனுக்குண்டான, பந்தனைதீர - அனுக்கம் தீரும்படி, பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்று—, பாடுதும் - பாடுவோம்.

தா-ம்.—நாங்கள் ஏழுதலைமுறையாய் ப்ரயோஜநாந்தரபரதை முதலான தோஷங்களில்லாமல் வந்து அடிமைசெய்கிறோம, திருவோணத்திருவிழவில், அந்திப்பொழுதில், ஸிம்ஹரூபியாய், ஸஹஜசத்ருவான ஹிரண்யனை உருவழித்தவனை, அந்த ஹிரண்யனுடைய கொழித்ததனால்வந்த அநுக்கம்போக, பல்லாண்டு, பல்லாயிரத்தாண்டு, என்று பாடுவோம் என்பதாம்.

அ-கை. ஆறும்பாட்டு. (எந்தையித்யாதி) அநந்யப்ரயோஜநர்க்கும் ப்ரயோஜநாந்தரபரர்க்கு முண்டான நெடுவாசியறிந்திருக்கச் செய்தேயும், அநந்யப்ரயோஜநரையழைத்த (க) ஸமநந்தரம இவர்களை யழைக்கக்கடவ - "உதாராஸ்ஸர்வ ஏவைதே-உதாராஸ்ஸர்வ ஏவைதே" என்னுமவன் சீலத்தாலும்,அவனோடு இவர்களுக்குண்டான (உ) அவர்ஜநீயஸம்பந்தத்தாலும், இவர்களுக்கும் அவற்றையே நினைத்துத்தேங்காதே (௩) புகலாம்படியாயிறே யிருப்பது. ஆகையாலே, அநந்யப்ரயோஜநரை யழைத்தவோபாதி

---

(க) ஸமநந்தரம் - பின்பு. (உ) அவர்ஜநீயஸம்பந்தம் - விடக்கூடாத உறவு (௩) புகலாம்படி - ப்ரவேசிக்கலாம்படி.

இவர்களையும் அழைத்தாராய்நின்றார் கீழ்; இதில், * வாழாளிலழைத்த அநந்யப்ரயோஜநர், தங்கள் ஸ்வரூபத்தையும் ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியையும் சொல்லிக்கொண்டு வந்துபுகுர, அவர்களைக்கூட்டிக் கொள்ளுகிறார். "ஏழாட்காலும் பழிப்பிலோம்" என்று ப்ரயோஜநாந்தரபரரைக்குறித்துத் தாமருளிச்செய்த தம்முடைய திரளுக்குண்டான வேற்றத்தை, புகுருகிறவர்கள், தங்களுக்குண்டாகச் சொல்லிக்கொண்டு வந்து புகுருகிறார்கள். தந்தாமேற்றஞ்சொல்லிக்கொண்டு வந்து புகுருகை (க) ஸாத்விகர்க்கு (உ) யுக்தமோவென்னில்; ஆழ்வாருடைய திருவுள்ளம் பயங்கெடுகைக்காகச் சொல்லுகிறார்களாகையாலே யுக்தம். "வநமாலநகாமெல வதஞம்வக்ஷிலெவிதெ | வெநதெயஉுறம்லக்ஷ: வபிமஞ:ம்வஹவுல:-பங்ககாலநமாகாலே பதந்தம்பக்ஷிஸேவிதே | ஸவநதேயமஹம்ஸக்த: பரிகந்தும்ஸஹஸ்ரஸ:" என்று-திருவடி, (ங) ஸ்வசக்தியைச் சொன்னனிறே முதலிகளுடைய பயம் (ச) சமிக்கைக்காக.

வ்யா.—(எந்தை) தானும் தமப்பனுமாக இருவர். (தந்தை தந்தை தந்தை) என்று-ஒரு மூவர். (தம்மூத்தப்பன்) "தம" என்று-முடிந்தவனை (ரு) அநுபாஷிக்கிறது. (மூததப்பன்) "அப்பன்" என்று - தமப்பனார்; "மூத்தப்பன்" என்று - பாட்டனார்; ஆகையாலே அங்கேயிருவர்; ஆக, எழுவரையுஞ் சொல்லுகிறது. ஆழ்வார் "ஏழாட்காலும் பழிப்பிலோம்" என்று திரளவருளிச்செய்தார்; இவர்களும், (ஏழ்படிகால்) என்று திரளச் சொல்லாநின்றார்கள். பிரித்துச்சொல்லுகிற விதுக்குபலமென்னென்னில்; (சு) ஸ்வஸந்தாநத்தில் மங்களாசாஸநம்பண்ணிப் போந்தவர்கள்பக்கலுண்டான ப்ரீத்யதிசயத்தாலே சொல்லுகிறார்கள். "ஸஹிவிஉ்யாதஸ்தம்ஜநயதிதஷ்ரேஷ்டம்ஜந்மரீயாநுவ்ருஹஜ:விதா ·ஸஹிவித்யாதஸ்தம் ஜநயதிதச்ச்ரேஷ்டம்ஜந்மகரியாந் ப்ரம்ஹத:பிதா" என்று வித்யாஸந்தாநத்தைக் கொண்டாடுமாபோலே "வீதாமதா்ஊரைாநு - பிதுராம்யாதரந்தாராந்" என்று த்யாஜ்யமான யோநிஸந்தாநத்தைக் கொண்டாடுகை யுக்தமோ வென்னில், யுக்தம்; கொண்டாடுகைக்கு ப்ரயோஜநம் பகவத்ஸம்பந்தமாகையாலே வித்யாஸந்தாநத்திலும் பகவத்விமுகன் (எ) த்யாஜ்யனல்லனோ. (ஏழ்படிகால்தொடங்கி) அர்த்தக்ரமத்தாலே ஏழையுஞ் சொல்லச் செய்தேயும் திரளச்சொல்லுகிறது. ஸ்வஸந்தாநத்திலுண்டான (அ) ஆதராதிசயத்தாலே. (வந்து) மங்களாசாஸநம்பண்ணுகைக்குயோக்யமான (கூ) தசைகளிலே வந்து. (வழிவழியாட்செய்கின்றோம்) முறைமுறையாகத்தப்பாமே அடிமை செய்கிறோம். இத்தால் - இஸ்ஸந்தாநத்துக்கு மங்

---

(க) ஸாத்விகர் - ஸத்த்வகுண முள்ளவர்கள். (உ) யுக்தமோ - தகுதியோ. (ங) ஸ்வசக்தியை - தன்வல்லமையை. (ச) சமிக்கை - தணிக்கை. (ரு) அநுபாஷிக்கிறது - அநுவதிக்கிறது. (சு) ஸ்வஸந்தாநம் - தன்னுடையவம்சம். (எ) த்யாஜ்யன் - விடத்தக்கவன். (அ) ஆதராதிசயம் - அன்பின் மிகுதி. (கூ) தசை - ஸமயம்.

களாசாஸந (க) விச்சேதம் பிறந்ததில்லையென்கை. (உ) யாஜ்ஞிகஸந்தாநத்துக்கு த்ரிபுருஷ (ங) விச்சித்தியாலே அப்ராஹ்மண்யஞ் சொல்லுமா போலே, மங்களாசாஸநவிச்சித்தியால் வைஷ்ணவத்வஹாநி சொல்லுங்குறை எங்கள் ஸந்தாநத்தில் இல்லையென்கிறார்கள். "[illegible] - யஸ்யவேதஸ்சவேதீச விச்சித்யேதேத்ரிபூருஷம்| ஸவைதுர்ப்ராஹ்மணோஜ்ஞேயஸ் ஸர்வகர்மபஹிஷ்க்ர்தஃ" என்னக்கடவதிறே. "வழிவழி" என்று - சாஸ்த்ரமார்க்கத்தாலும் சிஷ்டாசாரத்தாலு மென்றுமாம். "[illegible]-ஶாந்திஶ்ஶாந்திஶ்ஶாந்திஃ" என்றும், "[illegible] - பஶ்யேமஶரதஶ்ஶதம்" என்றும், "[illegible]-ஸர்வாந் தேவாந்நமஸ்யந்தி" என்றும், "[illegible]- மங்களாநிப்ரயுஞ்ஜாநாஃ" என்றும் சொல்லக்கடவதிறே. (ஆட்செய்கின்றோம்) ஆட்செய்கையாவது - திருப்பல்லாண்டு பாடுகையிறே.

மேலே "பந்தனைதீரப்பல்லாண்டு" என்றத்தை வ்ர்த்தியாகச்சொல்லுகையாலே, இதுக்குக்கீழ் - தங்களுடைய ஸந்தாநத்தி லேற்றஞ்சொன்னார்களாய், மேல் - தங்களுடைய வ்ர்த்திவிசேஷஞ்சொல்லுகிறார்கள்(திருவோணத்திருவிழவில்) விசேஷித்துத் திருநக்ஷத்ரஞ்சொல்லாத விடத்துக்கெல்லாம் இதுவே திருநக்ஷத்ரமாகக்கடவது. "திருவோணம்" என்கிறது ஜந்மநக்ஷத்ரமென்னில் உகவாதாரறிந்து (ச) அபிசரிப்பர்களென்று அஞ்சி, திருவோணமென்கிற திருநாளிலேயென்று மறைத்துச்சொல்லுகிறார். (அந்தியம்போதில்) தேவர்களுக்கு பலம் க்ஷீணமாய் அஸுரர்க்கு பலம் வர்த்திக்கும் ஸமயத்திலே. (அரியுருவாகி) ஒரு காலவிசேஷம் வேண்டாதே ஸர்வகாலமும் மங்களாசாஸநம் பண்ணவேண்டும்படியான வடிவையுடையனாய், "[illegible] - நாரஸிம்ஹவபுஶ்ஶ்ரீமாந்" என்றும், "அழகியான்றானே யரியுருவன்றானே" என்றும், "நரங்கலந்தசிங்கமாய்" என்றும் சொல்லக்கடவதிறே. (அரியையழித்தவனை) "அரி" என்று-சத்ரு. (ரு) ஸஹஜசத்ருவான ஹிரண்யனைக் குற்றுயிராக்கிவிடாதே உருவழித்தவனை. "சுகிர்ந்தெங்கும் சிந்தப்பிளந்த" என்னக்கடவதிறே. அவனை யழியச்செய்தது பயல்தாநமாகிறது பின்புள்ளார்பகைகொண்டாடுவ ரென்னுமத்தாலே. (பந்தனைதீர) துஷ்ப்ரக்ர்தியான ஹிரண்யனுடனேக் கீண்டு பொகடுகையால்வந்த அனுக்கம்தீர. திருவவதரித்த திவஸத்திலுண்டான (சு) அபதாநமாகையாலே "அனுக்கம்" என்றதிறே. (பல்லாண்டு) அநுகூலர்வாயாலே ஒருக்கால் மங்களாசாஸநம்பண்ண, அவ்வஸ்துவினுடைய அனுக்கம்போய், நித்யமாய்ச்செல்லுமென்றிறே இவர்கள் நினைவு. (பல்லாயிரத்தாண்டென்று பாடுதுமே) ஒருக்கால் "பல்லாண்டு" என்றத்

---

(க) விச்சேதம் - இடைவீடு. (உ) யாஜ்ஞிகஸந்தாநம்-யாகம்செய்யும் ஸந்ததி. (ங) விச்சித்தி - விட்டிருக்கை. (ச) அபிசரித்தல்-சூந்யம்வைத்தல். (ரு) ஸஹஜசத்ரு - இயல்பானசத்ரு. (சு) அபதாநம் - செயல்.

தால் (க) பர்யாப்திபிறவாமையாலே காலதத்வமுள்ளதனையும் நித்யமாய்ச்செல்லவேணுமென்று மங்களாசாஸநம்பண்ணுகையே எங்களுக்கு வர்த்தியென்கிறார்கள். (௬)

## அரும்பதம்.

எந்தை இத்யாதி—மங்களாஸாஸநத்தில் தமக்குண்டான அபர்யாப்தியாலும், அதில் ரஸ்யதாகிபந்தநமாக இவர்களிழந்திருக்கிறார்களென்கிற க்ருபாதிசயத்தாலும், திருத்தியாகிலும் இவர்களோடே தாம் மங்களாஸாஸநம்பண்ணுகை தமக்கு தாரகமாகையாலும், இவர்கள் அவன் கைபார்த்திருக்கும் யோக்யதாமாத்ரத்தாலும் அழைக்கிறார் என்றுகிழ், ஆகிலும் அநந்யப்ரயோஜநர் நீரிலே நீர்சேர்ந்தாற்போலே வருமவர்கள், ப்ரயோஜநாந்தரபரராகில் ஸ்வநிகர்ஷத்தாலே புகுதார்களென்று, இவர்களுடைய விஶேஷமறியு மாழ்வார் அழைக்கக்கூடாதேயென்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார் அநந்யப்ரயோஜநர்க்கும் இத்யாதி வாக்யத்வயத்தாலே—அழைக்கைக்கடி புகுதலாம்படி யிருக்குமிறேயென்று வாக்யாந்வயம்—தேங்காதே-தயங்காதே; பயப்படாதேயென்றபடி—இப்பாட்டில் ஆழ்வார தம் ஸ்வரூபஞ்சொல்லுகிறாரென்று கூடாது வாழாட்பட்டிலே சொல்லுகையாலே—இது ப்ரயோஜநாந்தரபரருடைய பாசுரமென்னக்கூடாது "ஏழ்படிகாலாட்செய்கின்றோம்" என்றிருக்கையாலே—ஆகையால் அநந்ய ப்ரயோஜநருடைய பாசுரமாக வர்த்திஷ்யமாணத்தை யருளிச்செய்கிறார் இதில் இத்யாதி—இது இவருக்குப் பாசுரமென்கைக்கு ஸூசகமென்னென்னில், "ஏழாட்காலும்" இத்யாதி—ஆத்மப்ரஶம்ஸையாகாதேயென்று ஶங்கித்து, இதுவும் பரமார்த்தமாகையாலே கூடுமென்று பரிஹரிக்கிறார் தந்தாமித்யாதி—பயங்கெடுகைக்காக என்றது - ப்ரயோஜநாந்தரபரர்கள் எங்கே வருகிறார்களோவென்னும் பயமாதல், "உள்ளீரேல்" என்கையாலே மங்களாஸாஸநத்துக்கு ஆள்கிடையாமல்வந்த பயமாதல்—பரார்த்தமாக ஸ்வாதிஶயத்தைச்சொன்னவர்களுண்டோவென்ன, "பங்கஜநம்" இத்யாதி—முதற்பதத்தி லிருவரும், முடிந்த பதத்திலிருவரும், மத்யே மூவரும், ஆக ஸப்தஸங்க்யையைக் காட்டுகிறார், எந்தை இத்யாதி—முடிந்தவனையென்றது—மூன்றாம் தந்தையை—மேல், "ஏழ்படிகால்" என்று சொல்லாநிற்க, "எந்தைதந்தை" என்று கொண்டாடக்கூடுமோ, ஶ்ருதிஸ்ம்ருதிகள் வித்யாஸந்தாநத்துக்கே ஶ்ரேஷ்டதையையும், இதுக்கு த்யாஜ்யதையையுஞ் சொல்லாநின்றதேயென்கிற ஶங்கையை அநுவதித்து, இவ்விரண்டுக்கும் உத்தேஶ்யதா ப்ரயோஜகம் பகவத்ஸம்பந்தமென்று பரிஹரிக்கிறார் - "ஸஹி" இத்யாதி வாக்யத்வயத்தாலே—இத்தை வ்யதிரேகமுகேந த்ருடீகரிக்கிறார் - வித்யாஸந்தாநத்திலும் இத்யாதி—இவ்விடத்திலே ப்ரயோஜகம் பகவத்ஸம்பந்தமும் அஸம்பந்தமும்—ப்ராஹ்மண்யம் விலைசெல்லுகிறது வேதாத்யயநாதி முகத்தாலே பகவல்லாபஹேதுவென்று;—அதுதானே இழவுக்குறுப்பாகில் த்யாஜ்யமாமிறே யென்கிறபடியே அநுஸந்தித்துக்கொள்வது—"எந்தைதந்தை" என்று பிரித்துச்சொன்னது ஆதரத்தாலே—ஆனால் திரளவுஞ் சொல்லவேணுமோவென்ன, இதுவுமொரு ப்ரீதியாலே யென்கிறார் - அர்த்தக்ரமேத்யாதி—அர்த்தக்ரமமாவது எந்தை யித்யாதியில் அர்த்தக்ரமமென்றபடி—வழிவழியென்கிற வீப்ஸையாலே பலிதம் தப்பாமேயென்றது—இத்தால் பலித்த தாத்பர்யம்-இத்தால் இத்யாதி —விச்சேதம் வந்தால் அதன் குறையேதென்ன, த்ருஷ்டாந்த பூர்வகமாக அருளிச்செய்கிறார்-யாஜ்ஞிகேத்யாதி—த்ருஷ்டாந்தத்துக்கு ப்ரமாணம் - "யஸ்ய" இத்யாதி—வேதி-யஜ்ஞத்தில் திண்ணை—தலைமுறையாகக் கீழருளிச்செய்து அர்த்தாந்தர மருளிச்செய்கிறார்

---

(க) பர்யாப்தி - த்ருப்தி.

ஶாஸ்த்ரோத்யாதி—ஶாஸ்த்ரந் தன்னைக் காட்டுகிறார் - ஶாங்கிரித்யாதி—சிஷ்டாசாரத்தைக்காட்டுகிறார் - "ஸர்வாங்" இத்யாதி—ஆட்செய்கை ஸாமாந்ய ஶப்தமாகிலும், ப்ரக்ருதார்த்தாநுகுணமாக விஶேஷிக்கிறார் - ஆட்செய்கையாவதித்யாதி—இதுக்கு ஹேதுமேலே யித்யாதி—மேலுக்கெல்லாம் அவதாரிகை இதுச்குக் கீழ் இத்யாதி—"அரியுருவாகி" என்று, ந்ருஸிம்ஹாவதாரம் ப்ரஸ்துதமாயிருக்க, ஸ்வாதியென்று சொல்லுகையன்றோ வேண்டுவதென்ன, விஷ்ணுநக்ஷத்ரமாகையாலே இது எல்லாத்துக்கும் ஸாதாரணமென்று பரிஹரிக்கிறார்; விஶேஷித்து இத்யாதி—குப்ஜாம்ராத் யவதாரத்தில் திருநக்ஷத்ரம் சொல்லவில்லையேயென்று கருத்து—ஆனால் ஜந்மநக்ஷத்ரமென்னாதே, திருவிழாவென்பானென்னென்னில், திருவோணம் இத்யாதி—என்னில் என்றது-என்று சொன்னால் என்றபடி—அரியுருவானது அந்தியம்போதிலாயிருக்க, அந்தியென்றதுக்குத் தாத்பர்யம், தேவர்களுக்கு இத்யாதி—இத்தால் காலமும் பயஹேதுவென்று கருத்து—"அரியுரு"என்றதுக்குத் தாத்பர்யம் ஒருகாலம் இத்யாதி—அவ்வடிவுதான் பரியவேண்டி யிருக்குமோவென்ன, ப்ரமாணங்கள், "நாரஸிம்ஹ"இத்யாதி—இவ்விடத்தில், "நாரஸிம்ஹவபு:" "ஹ்ருஷ்யாவ:" தததபேக்ஷாநுகுணம் ப்ரதிபந்ந யதாகாம திவ்யமஹா ந்ர்ஸிம்ஹ ஸம்ஹநந: அத:பரஸ்பர தூர்கடாபூர்வ விச்ருஙருபபரிக்ரஹாதபி ஶ்ரீமாந் "ஸௌந்ர்யலாவண்யாதிஶ்ரிதி ஈநே நாரஸிம்ஹவபு:" என்கிற ஸஹஸ்ரநாமபாஷ்யம் அநுஸந்திப்பது—நரம் - மநுஷ்யத்வம்—இத்தை நிரூபகமாகச் சொல்லுகையாலே ஸஹஜஶத்ருவென்கிறார்—குற்றுயிர் என்கிறது - குறுகினப்ராணன்; அதாவது - ம்ருதப்ராயன் என்றபடி—அழித்ததுச்கு மூன்றாந்திருவந்தாதியில் பாசுரத்தைக்காட்டுகிறார் "சுகிர்ந்து" இத்யாதி—சுகிர்ந்து என்றது - பலகூறுசெய்து என்றபடி—அழித்தபின்பு பயப்படுவானென்னென்ன, அவனை யித்யாதி—பந்தனை என்றது அனுக்கம்; அதாவது-ஶிஶுக்களுக்கு வரும் வ்யாதி—துஷ்ப்ரக்ருதி என்றது அஸ்ப்ருஶ்யதை தோற்றுகைக்காக—பல்லாண்டுஎன்றால்அனுக்கம்போமோவென்ன, அநுகூலர் இத்யாதி—பாடுதும்-பாடுவோம் என்றபடி—வர்த்தமாநத்தாலேஇதுவே வ்ருத்தியென்று தோற்றுகிறது; அத்தையருளிச்செய்கிறார் ஒருக்கால் இத்யாதி.—

---

## ஏழாம்பாட்டு.

தீயிற்பொலிகின்றசெஞ்சுடராழிதிகழ்திருச்சக்கரத்தின்
கோயிற்பொறியாலேயொற்றுண்டுநின்றுகுடிகுடியாட்செய்கின்றோம்
மாயப்பொருபடைவாணனையாயிரந்தோளும்பொழிகுருதி
பாயச்சுழற்றியவாழிவல்லானுக்குப்பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை.—தீயில் - சந்த்ராதித்யர்களைக்காட்டிலும்,பொலிகின்ற-மிக விளங்காநின்ற, செம் - சிவந்த, சுடர் - ஜ்யோதிஸ்ஸையுடைத்தாய், திகழ்-ப்ரகாசியாநின்றுள்ள,திருச்சக்கரத்தின் கோயில்-திருவாழியாழ்வானெழுந்தருளியிருக்கிறகோயிலாய், ஆழி -மண்டலாகாரமான, பொறியாலே-சிஹ்நத்தாலே, ஒற்றுண்டுநின்று - சிஹ்நிதராய்நின்று, குடிகுடி - எங்கள்ஸந்தாநமெல்லாம், ஆள்செய்கின்றோம் - அடிமைசெய்வோமாய்வந்தோம்;மாயம் - க்ர்த்ரிமமாக, பொரு - போர்செய்யாநின்றுள்ள, படை-ஸேனையையுடையனான, வாணனை - பாணாஸுரனுடைய, ஆயிரந்தோளும் - ஆயிரந்

தோள்களினின்றும், குருதி - ரக்தமானது, மதகுதிறந்தாற்போலே, பொழி பாய - புறப்பட்டோடும்படி, சுழற்றிய - சுழற்றின, ஆழி - திருவாழியாழ்வானை நியமிப்பதில், வல்லானுக்கு - ஸமர்த்தனானவனுக்கு, பல்லாண்டு கூறுதும் - திருப்பல்லாண்டுபாடுவோம்.

தா-ம்.—ஸோமஸூர்யாதிதேஜঃபதார்த்தங்களிற்காட்டில்மிக்குவிளங்குகிற சிவந்தஜோதியோடு மண்டலாகாரமாய் ப்ரகாசிக்கிற திருவாழியாழ்வானெழுந்தருளியிருக்கிற வாஸஸ்தாநத்தின் சிந்ஹத்தாலே சிந்ஹிதராய் நிலையாகநின்று, ஸந்தாநமாக அடிமைசெய்யக்கடவோமாய்வந்தோம், மாயமாகப்போர்செய்கின்றபடையையுடையவாணனுடைய ஆயிரந்தோள்களினின்றும் ரக்தம்ப்ரவஹிக்கும்படிச் சுழற்றின ஆழிவல்லானுக்கு மங்களம்பாடுகின்றோம் என்பதாம்.

அ-கை.—ஏழாம்பாட்டு. (தீயிற்பொலிகின்ற) * ஏடுநிலத்திலே இவராலே (க) ஆஹூதரான கைவல்யார்த்திகள், தங்கள் ஸ்வபாவத்தைச் சொல்லிக்கொண்டுவர, அவர்களோடே ஸங்கதராகிறார். இவர்களையழைத்தபோது, "வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ" என்று - நீங்கள்பற்றின புருஷார்த்தத்தைவிட்டு வாருங்கோளென்றும், நமோநாராயணாய" என்று - அநந்யப்ரயோஜநராய் வாருங்கோளென்றும், "நாடுநகரமும்நன்கறிய" என்று - விசேஷஜ்ஞர்பரிக்ரஹிக்கும்படியாகவும் அவிசேஷஜ்ஞர் (உ) உபேக்ஷிக்கும்படியாகவும் வாருங்கோளென்றிறே அவர்களையழைத்தது. அதில் (ங) க்ஷுத்ரபுருஷார்த்தத்தை விடுகையும் அநந்யப்ரயோஜநராகையும் நம்முடைய க்ர்த்யம். அநுகூலர் பரிக்ரஹிக்கைக்கும் ப்ரதிகூலர் கைவிடுகைக்கும் செய்யவடுப்பதென் என்று பார்த்து, வைஷ்ணவ (ச) சிந்ஹமான திருவிலச்சினையைத்தரிக்கவே (ரு) த்யாகோபாதாநங்களிரண்டும் ஸித்திக்குமென்று பார்த்து, அத்தைத்தரித்துக்கொண்டு வந்தோமென்கிறார்கள்.

வ்யா—(தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழியென்று) வைஷ்ணவ கோஷ்டியிலே புகுரப்பண்ணின (சு) உபகாரஸ்ம்ர்தியாலே ஆழ்வானைக் கொண்டாடுகிறார்கள். (தீயிற்பொலிகின்ற) "தீ" என்கிற சப்தம் சந்த்ராதித்யாதி தேஜঃபதார்த்தங்களெல்லாவற்றுக்கும் உபலக்ஷணம். அதிற்காட்டில் தேஜஸ்ஸுவர்த்திக்கையாகிறது. "ஸூர்யாநலதீப்தம் தஸ்ய தாநம்- அத்யர்க்காநலதீப்தம்தத்ஸ்தாநம்" என்கிற பரமபதத்தில்தேஜஸ்ஸுமிக்கிருக்கக்கடவது ஆதித்யாதி தேஜஸ்ஸுக்களிற் காட்டில்; அதிற்காட்டில் அவனுடைய திவ்யமங்களவிக்ரஹ தேஜஸ்ஸு மிக்கிருக்கக்கடவது; அதுக்கும் ப்ரகாசமாயிறே திருவாழியாழ்வானுடைய தேஜஸ்ஸிருப்பது. "வடிவார்சோதிவலத்துறையுஞ் சுடராழி என்னக்கடவதிறே. "தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி- தஸ்யபாஸா ஸர்வமிதம்விபாதி" என்கிறபடியே அவனுடைய தேஜஸ்ஸாலே ஸர்வமும் விளங்காநின்றதென்றுநிற்க, திவ்யமங்

(க) ஆஹூதர் - அழைக்கப்பட்டவர்கள். (உ) உபேக்ஷித்தல் - அசட்டைசெய்தல். (ங) க்ஷுத்ரம் - தண்ணியை. (ச) சிஹ்நம்-அடையாளம். (ரு) த்யாகோபாதாநம் - விடத்தக்கதும் பற்றத்தக்கதும். (சு) உபகாரஸ்ம்ர்தி-நன்றிநினைக்கை.

ளவிக்ரஹத்துக்கு இவன் ப்ரகாசகனும்படி வெள்ளென்[illegible] டர்) * காளமேக நிபச்யாமமான வடிவுக்கு இருட்டறையில் [illegible] றுற்போலே பரபாகரூபத்தாலேவந்த ப்ரகாசகத்வத்தைச்[illegible] (ஆழிதிகழ்திருச்சக்காம்) (க) இட்டளத்தில் பெருவெள்ளம்போலே [illegible]ம்புபோக்கற்று, தன்னிலே (உ) மண்டலாகாரமாய்க்கொண்டு விளங்கா நின்றுள்ள திருவாழியாழ்வானென்கை. (சக்கரத்தின்கோயில்) ஆழ்வா னெழுந்தருளியிருக்கிற மண்டலாகாரமான வாஸஸ்தாநம். (பொறியாலே ஒற்றுண்டுநின்று) அதாகிறது - சிஹ்நத்தாலே சிஹ்நிதராய்நின்று. திரு விலச்சினையைத் தரித்தபின்பிறே, இவன் ஜந்மாந்தரத்திற்போகாதே மோக்ஷாந்தரத்திற்போகாதே ஸ்வஸ்திரனாகப்பெற்றது. பகவதங்கீகாரமும்இது ண்டானவிறே அதிசயிப்பது. ஸ்ரீமத் த்வாரகையில் நின்றும் ஆச்ரிதவிரோதி நிரஸநார்த்தமாக எழுந்தருளுகிறபோது திருவாசல்காக்கின்ற முதலிகள், "மீளவெழுந்தருளுமளவும் இங்குப்புகுரக்கடவாரார், அல்லாதாரார்?" என்று விண்ணப்பஞ்செய்ய; [வக்ராங்கிதாஃப்ரவேஷ்டவ்யாஃ யாவதாகமநம்மம| நாசக்ராங்கிதாஃப்ரவேஷ்டவ்யாஃ யாவதாகமநம்மம - சக்ராங்கிதாஃப்ரவேஷ்டவ்யாஃ யாவதாகமநம்மம| நாமுத்ரிதாஃப்ரவேஷ்டவ்யாஃ யாவதாகமநம்மம] என்று இந்தலக்ஷணமுடையார் யாவர்சிலர், அவர்கள் (ஙூ) நிச்சங்கமாகப்புகுரக்கடவர்கள்; அல்லாதாரை (ச) பாவபரீக்ஷை பண்ணிப் புகுரவிடக்கடவது என்றானிறே க்ர்ஷ்ணன். இதுதான் ஈச்வராங்கீகாரத்துக்கு முடலாய், தானும் "நாமவனுடைமை" என்று நிர்ப்பரனாயிருக்கைக்கு முடலாய், தான்பண்ணினபாபத்தை யநுஸந்தித்து க்ரூரமாகப்பார்க்கக்கடவயமாதிகளு மஞ்சும்படியாயிருப்பதொன்றிறே. "சக்ராதிதாரணம் பும்ஸாம் பரஸம்பந்த வேதநம்| பதிவ்ரதாநிமித்தம் ஹி வலயாதிவிபூஷணம் - சக்ராதிதாரணமபும்ஸாம் பரஸம்பந்த வேதநம்| பதிவ்ரதாநிமித்த ம்ஹி வலயாதிவிபூஷணம்" என்று பகவத்ஸம்பந்தத்துக்கு ஜ்ஞாபகமாயிறேயிருப்பது. (குடிகுடியாட்செய்கின்றோம்) "ஸபுத்ரபௌத்ரஸகணஃ - ஸபுத்ரபௌத்ரஸ்ஸகணஃ" என்கிறபடியே ஸந்தாநமாக அடிமை செய்யக்கடவோமாய்வந்தோம்.

இப்படி அநந்யார்ஹராயிருப்பார் செய்யுமடிமையாவது - திருப்பல்லாண்டு பாடுகையிறே; எந்த அபதாநத்துக்கு நீங்கள் மங்களாசாஸநம் பண்ணுகிறதென்னில் (மாயப்பொருபடையித்யாதி) எங்களைப்புகுரநிறுத்தின ஆழ்வானுடைய வீரப்ரகாசகமான துறையிலே திருப்பல்லாண்டு பாடக்கடவோமென்கிறார்கள். (மாயப்பொருபடைவாணனை) ஆச்சர்யமாகப் பொரும் ஸேனையையுடைய வாணனென்னுதல். ஆச்சர்யமாகப்பொரும் ஆயுதத்தையுடைய வாணனென்னுதல். "மாயம்" என்று - க்ர்த்ரிமமாய்,

(க) இட்டளம் - நெருக்கினவிடம். (உ) மண்டலாகாரம் - வட்டவடிவு. (ஙூ) நிச்சங்கமாக - ஸந்தேஹமில்லாமல். (ச) பாவபரீக்ஷை - மநஃபரீக்ஷை.

[illegible]மான யுத்தநீதையுடையவனென்னவுமாம். (ஆயிரந்தோளும் பொ [illegible]ருதிபாய) ஆயிரந்தோள்களாலும் மதகுதிறந்தாற்போலே ரக்தவெள் [illegible]ருதிகொண்டு பூமிப்பரப்படையப் பரம்பும்படி. பொழிதல் - சொரிதல். இதுக்கு இவன்பண்ணின வ்யாபாரத்தளவேதென்னில் (சுழற்றிய) திருவாழியை விடவேண்டிற்றில்லை, சுழற்றினவித்தனை. அவனொருக்கால் திருவாழியைச்சுழற்ற, வாணனுடைய தோள்களாயிரமும் ஒருக்காலே மலைக் (ஙி) கொடுமுடிகள்போலே முறிந்துவிழுந்தன. வாணனுடைய தலையை அறுதொழிந்தது குற்றம் போராமையன்று, உஷை பித்ர்ஹீனையாகாமைக்காகவும், தேவதாந்தரபஜநம் பண்ணுவார்க்கு பலமிது என்னுமிடத்துக்கு மச்சமாகவும். அதாவது-*பரிவின்றி வாணனைக்காத்துமென்றுப்ரதிஜ்ஞைபண்ணி, யுத்தத்திலே இவனைக்காட்டிக்கொடுத்து, ஸபரிகரனாய்க்கொண்டு முதுகுகாட்டிபபோனான் ரக்ஷகன்; ரக்ஷ்யபூதன் தோள் துணியுண்டான். "உன்னை ரக்ஷிக்கப் புக்கு நான்பட்டதோ!" என்றும், "உன்னை ஆச்ரயித்து நான்பட்டதோ!" என்றும் இருவருங் கூடக்கட்டிக்கொண்டு கதறுகையிறே பலமாய்விட்டது. (ஆழிவல்லானுக்கு) "வில்வல்லான், வாள்வல்லான், தோள்வல்லான்" என்னுமாபோலே, "யஸ்ய ஸா ஜநகாத்மஜா - யஸ்யஸாஜநகாத்மஜா" என்கிறபடியே பிராட்டியை எனக்கென்ன இட்டுப்பிறத்தல், திருவடிதோளிலே நல்தரிக்கவிருத்தல், கைபேராமல் திருவாழியைப்பிடித்தல் செய்யுமதாய்த்து ஸர்வாதிகத்வத்துக்கு லக்ஷணம். (பல்லாண்டுகூறுதுமே) அத்தசையிலே அடிமைசெய்தஆழ்வானுடைய வீரஸ்ரீக்கும், அடிமைகொண்ட க்ர்ஷ்ணனுடைய வீரஸ்ரீக்கும் மங்களாசாஸநம் பணணுவாரைப்பெற்றதில்லை; அவ்விழவுதீர இன்றிருந்து திருப்பல்லாண்டு பாடுகிறோமென்கிறார்கள். (எ)

## அரும்பதம்.

தீயில் இத்யாதி—திருவிலச்சினையுந்தரித்து ஆட்செய்கின்றோம் என்று, இப்போது சொல்லுகையாலே, முன்பு மோக்ஷத்வத்துக்கு இசையாத ஸ்வதந்த்ரொன்று தோன்றுகிறது; அத்தைத்திருவுள்ளம்பற்றி அவதாரிகை. "ஏடுநிலத்தில்" இத்யாதி—தங்கள் ஸ்வபாவம் என்றது - ஒற்றுண்டு நின்று ஆட்செய்யககடவோம் எனகை—அந்தப்பாட்டில் அழைக்கப்பட்டவர்கள் என்னுநின்றீர்; அதில் திருவிலச்சினைதரித்து அடிமைசெய்யவாருங்கோள் என்று அழைத்தாரோ; இதுக்கு ஸூசகமேதென்னில், ஆழ்வார் அருளிச்செய்த அம்ஸத்தில் "நாடுநகரமுநன்கறிய" என்ற இடத்தில் திருவிலச்சினை ஸூசிதமென்று பரிஹரிக்கிறார் இவர்களை இத்யாதிவாக்யத்தாலே—க்ருத்யம் என்றது - கர்தும்ஸக்யம் என்றபடி—த்யாகோபாதாநங்கள் என்றது - ப்ரதிகூலாநுகூல புருஷர்களுடைய த்யாகஸ்வீகாரங்கள் என்றபடி—ஆழ்வானைக்கொண்டாடி வர்ணிக்கைக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் "தீயிற்பொலிகின்ற" இத்யாதி—வர்ணோத்க்ருஷ்டஸித்தமாகத் தீயென்கிற இத்தை உபலக்ஷணமாக அருளிச்செய்கிறார் தீயென்கிறஸப்தம்இத்யாதி—ஆதித்யாதி என்கிறவி[illegible]த்தில், ஆதிஸப்தத்தாலே பரமபதத்தையும் திவ்யமங்களவிக்ரஹத்தையும் சொல்

(ஙி) கொடுமுடி - சிகரம்.

துகிறது—பொலிகின்ற என்றது-மிகுகின்ற என்றபடி—மிகுகையாவது ... வில் என்று கூட்டுவது—இதுக்கு உத்தரமருளிச்செய்கிறார், "அத்யர்த்த" இத்யாதி வாக்யத்ரயத்தாலே—அதிற்காட்டில் என்றது - பரமபதாபேக்ஷயா... "பொலிகின்ற" என்றதில், வர்த்தமானார்த்தமருளிச்செய்கைக்காக ப்ரமாணமருளிச்செய்கிறார்,"அதயர்க்க" இத்யாதியென்னவுமாம்—விக்ரஹத்துக்கு ப்ராதான்யம் என்னுமதுக்கு ப்ரமாணம் "வடிவார்" இத்யாதி—இப்பாசுரத்தில் மூன்றின அர்த்தம் இக்கவேண்டுவது—திருமேனிதானே எல்லாத்துக்கும் ப்ரகாசகத்வமென்று பரிஹரிக்கிறார் "தஸ்ய" இத்யாதி—மேலே "திருச்சக்கரம்" என்னாநிற்க, "ஆழி" என்றால் புநருக்தமன்றோவென்ன, அருளிச்செய்கிறார் இட்டளத்தில் இத்யாதி—இட்டளம்-நெருங்கினஸ்தலம்—தன்னிலே ஸ்வஸ்மிந்நேவ—ஆழி - மண்டலம்—திகழ்கை-விளங்குகை— "கோயில்" என்றதுக்குஅர்த்தம் ஆழ்வான் இத்யாதி—ஆழ்வான் என்றது-ஷோடஶபாஹுவான விக்ரஹவிஶிஷ்டனை—பொறி-லாஞ்ஜநம்—ஒற்றுகை-ஸ்பர்சித்துக்கொள்ளுகை—இத்தால் பலிதார்த்தம் அதாகிறது இத்யாதி—நின்றுஎன்றபதவாஸனை திருவிலச்சினையை இத்யாதி—ஜந்மாந்தரங்களிற் போகாதே என்றது த்ருஷ்டாந்தார்த்தம்.யத்வா,—"க்ஷீவராஜஸம்ஸாரா: வராஜிகோஜிஹ்தவ:" என்றிருக்கையாலே. ஒற்றுண்டு நிற்கையை அஞ்சுக்கும் உபலக்ஷணமாக்கி, பக்திநிஷ்டனுக்கு ஜந்மாந்தரஸம்பாவனையுண்டாகையாலே தத்வ்யாவ்ருத்யர்த்தமாகஜந்மாந்தரத்திற்போகாதே என்கிறதென்னவுமாம்—மோக்ஷாந்தரம் - கைவல்யம்—ஜந்மாந்தரத்திற்போகாமைக்கும், கைவல்யத்திற் போகாமைக்கும், சக்ராங்கநம்ஹேதுவாமோ, பகவத்ப்ரஸாதாதிஶயமன்றோ ஹேதுவென்ன, அருளிச்செய்கிறார் பகவதித்யாதி;—அத்தை உபபாதிக்கிறார் ஸ்ரீமதித்யாதி—ஆஶ்ரிதவிரோதி- ஸால்வன்—"யாவதாகமநம்மம" என்றதுக்குத்தாதபர்யம் - நிஶ்ஶங்கமாகவென்றது;—"சக்ராங்கிதா:" என்றதில் அர்த்தஸித்தமாதல்— "சக்ராங்கிதா: ப்ரவேஷ்டவ்யா:" என்றபோதே "அமுத்ரிதா:" என்றது ஸித்தமன்றோ; விசேஷித்துச் சொல்லுவானென்னென்னில்; அவர்கள் துஷ்டஹ்ருதயராகையாலே நான்வருமளவும் புகுரவிடவேண்டா; அவர்களில், ஶுத்தபாவருண்டாகில், கருத்தறிந்து விடுங்கோளென்றுதாத்பர்யமாக அருளிச்செய்கிறார், அல்லாதாரை இத்யாதி—அமுத்ரிதத்வம் சங்கநீயதாஹேதுவாகையாலே பாவபரீக்ஷையென்றது.—உக்தத்தை அநுவதித்து, ஶாஸ்திரஞைக்கு ப்ரயோஜநாந்தரத்தையும் காட்டுகிறார், இதுதான் இத்யாதி;—இதுதான் என்றது-சக்ரதாரணந்தான் என்றபடி—இதுதானும என்றது-அங்கீகாரஹேதுவான அந்த சிந்ஹதாரணந்தானும் என்றபடி—அவனுடைமை என்றதுக்கு சக்ராங்கநம் ஸூசகமென்னுமதுக்கு ப்ரமாணம்-"சக்ராதி" இத்யாதி—நிமித்தம்-சிந்ஹம்; "நிமித்தம்ஹேதுலக்ஷணம்" என்று நிகண்டு—"வந்துவழிவழியாட்செய்கின்றோம்" என்றஇடததிற்போலனதிக்கே, பவிஷ்யத்தாக கேவலருடையஸ்வபாவத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் "ஸபுத்ர" இத்யாதி—ப்ரகரணாநுகுணமாக விஶேஷபர்யவஸாநம் - இப்படி இத்யாதி—மேலுக்கவதாரிகை எந்த இத்யாதி— "கோயிற்பொறியாலே யொற்றுண்டுநின்று" என்றத்தைக்கடாக்ஷித்து, தாத்பர்யமருளிச்செய்கிறார்-எங்களை இத்யாதி—வீரப்ரகாஶகமான என்றது- வீரரஸப்ரகாஶகமான என்றபடி—"மாய"என்றதுக்கு இரண்டர்த்தம்; ஆச்சர்யமாகவும், க்ருத்ரிமமாகவும்—"படை"என்றதுக்கு மூன்றர்த்தம்: ஸேனையும், ஆயுதமும், யுத்தமும்என்று—குருதி-ருதிரம்—குதிகொண்டு-குதித்துக்கொண்டு—சொரிதல் - கிளம்பிக்குதிக்கை—"சுழற்றிய" என்றதுக்குவாஸனை இதக்குஇத்யாதி—"ஆயிரம்" என்றத்தையும், "சுழற்றிய" என்றத்தையும் கடாக்ஷித்து, பலிதம் - அவனொருக்கால் இத்யாதி—வாணனுடைய-என்றிருக்கையாலே, "வாணனை" என்றஐகாரம் அவ்யயமாதல், வேறுவிபக்திமாருட்டு

[illegible]க்குறித்தச் சுழற்றியவென்றேயாய், வாணனுடையவென்றது ஆர்த்தி [illegible] - [illegible] முடிகள் - சிரங்கள்—தறைப்பவிட்டது - சுழியவிட்டது— [illegible]க்கு இரண்டுவிதமாக ப்ரயோஜநமருளிச்செய்கிறார் - வாணனுடைய இத்யாதி வாக்யத்வயத்தாலே—மச்சமாவது - சிலவானவெட்டு; அதாவது - ஆபரணம்பண்ணுமவன் பரீக்ஷார்த்தமாக வெட்டிவைக்கும்பொன்னுக்குப்பேர்;—அப்படியேதேவதாந்தர்பஜநம் பண்ணினதுக்கு அடையாளமாக, எல்லாக்கைகளையுங்கழித்து, இரண்டுகையைவைத்தானென்றபடி—இரண்டாம் ப்ரயோஜநத்தை விவரிக்கிறார்அதாவது இத்யாதி—அதாவது என்றது - மச்சமாகையாவது என்றபடி—"பரிவின்றி"வருத்தமற—"காத்தும்" காக்கக்கடவோம்—ரக்ஷகன் என்றது - வ்யங்க்யம்—துணியுண்டான் என்ற அநந்தரம், என்று நாட்டாரறிகைக்கு ஹேதுவாக என்றுசேஷம்—இத்தால் பலிதம்-உன்னை இத்யாதி—கதறுகை-ப்ரலாபிக்கை—ஆழியான் என்னுமல்வல்லான் என்பானென்னென்ன, வில்வல்லான் இத்யாதி—இப்படி ப்ரயோகித்தால் ஸர்வேஸ்வரனுக்குவரும் ஏற்றமேதென்ன, "யஸ்யஸா" இத்யாதி—திருவடி-பெரியதிருவடி—நல்தரிக்க-பொருந்தி; த்ருடமாக என்றபடி—பிராட்டியையும் திருவடியையுஞ்சொன்னது த்ருஷ்டாந்தார்த்தம்—நாங்கள் இப்போது "கூறுதும்" என்கையாலே, முன்புபரிவில்லையென்று தோற்றுமிறே; ததநுகுணமாகத்தாத்பர்யம் அந்தத்தசையில் இத்யாதிவாக்யத்வயமும்—"ஆழிவல்லானுக்கு"என்று,இப்படி ஆழ்வானை நிருபகமாகச்சொல்லுகையாலே, இருவருடைய வீரஸ்ரீக்கும் மங்களாஸாஸநம்பண்ணுகிறார்களென்று கருத்து.

---

## எட்டாம்பாட்டு.

நெய்யிடைநல்லதோர்சோறு நியதமுமத்தாணிச்சேவகமும்
கையடைக்காயுங்கழுத்துக்குப் பூணொடுகாதுக்குக்குண்டலமும்
மெய்யிடநல்லதோர்சாந்தமுந் தந்தென்னைவெள்ளுயிராக்கவல்ல
பையுடைநாகப்பகைக்கொடியானுக்குப் பல்லாண்டுகூறுவனே.

ப-ரை.—இடை - ஒத்தநிறையான, நெய் - நெய்யோடுகூடினதாய் நல்லது - நல்லதாய், ஓர் - விலக்ஷணரஸோபேதமான, சோறும் - ப்ரஸாதத்தையும், நியதமும் - எப்போதும், அத்தாணிச்சேவகமும் - பிரியாத ஸேவையையும், கை - திருக்கையாலேயிட்ட, அடைக்காயும் - வெற்றிலைப்பாக்கையும், கழுத்துக்குப்பூணொடு - கழுத்துக்கிடும் ஆபரணமான கண்டியையும், காதுக்குக்குண்டலமும் - செவிக்கிடும் ஆபரணமான குண்டலத்தையும், மெய்யிட - உடம்பிலே பூசுகைக்கு யோக்யமான, நல்லது - நல்ல பரிமளத்தாலே, ஓர் - ஒப்பற்றிருந்துள்ள, சாந்தமும் - சந்தநத்தையும், தந்து - கொடுத்து, என்னை - தாஸபூதனான வென்னை, வெள்ளுயிர் - சுத்த ஸ்வபாவனாக, ஆக்கவல்ல - செய்யவல்லனாய், பையுடை-படத்தையுடைய, நாகம் - ஸர்ப்பத்துக்கு, பகை - விரோதியான கருடனை, கொடியானுக்கு - கொடியாகவுடையவனுக்கு, பல்லாண்டு கூறுவன் - மங்களாசாஸநம்பண்ணுகிறேன்.

தா-ம்.—ஒத்தநிறையான நெய்யோடுகூடிய அத்விதீயமான சோறும், எப்போதும் அரசவீற்றிருக்குமிடத்திற் பிரியாதஸேவையும், கையில்வெற்றிலைப்பாக்

ளும், கழுத்துக்குக்கண்டிகையும், காதுக்குக்குண்டலமும், [illegible] மும் தந்து, அடியேனை சுத்தஸ்வபாவனுக்கவல்லனை, [illegible] பாடுவேன் என்பதாம்.

அ-கை.—எட்டாம்பாட்டு, (நெய்யிடையித்யாதி) *அண்டக்குலத்திலேயழைத்த ஐச்வர்யார்த்திகள் இசைந்தவர, அவர்களைக்கூட்டிக்கொள்ளுகிறார். *வாழாளிலழைத்த அநந்யப்ரயோஜநர் தங்களேற்றத்தைச்சொல்லிக்கொண்டு புகுந்தார்கள். *எந்தைதந்தை தந்தையிலே; *ஏடுநிலத்திலழைத்த கைவல்யார்த்திகள் தாங்கள்திருந்திப்புகுந்தமை சொன்னார்கள். *தீயிற்பொலிகின்றவிலே; இவர்கள் தாங்கள் க்ஷுத்ர புருஷார்த்தத்தை அபேக்ஷிக்க,அநந்ய ப்ரயோஜநர்க்கு முகங்கொடுத்தாற்போலே முகம்தந்து அந்த ஐச்வர்யத்தைத் தந்த ஔதார்யத்துக்குத் தோற்று, ஐச்வர்யத்தை விட்டு சுத்த ஸ்வபாவராய் இவ்வுதாரனை மங்களாசாஸநம் பண்ணுவோமென்று புகுருகிறார்கள். *அண்டக்குலத்திலே - அண்டாத்யக்ஷத்வம் ஐச்வர்யத்துக்கு மேலெல்லையாகப் பேசிற்று; அவ்வைச்வர்யார்த்திகள் பேச்சான இந்தப்பாட்டிலே - சரீரத்துக்கு தாரகபோஷக போக்யங்களை இரந்தார்களாய், அத்தை அவன் தந்தானாகப் பேசிற்று; இதுக்கு நிபந்தநம்-இன்று ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்து புகுருகிறவர்களாகையாலே அதினுடைய க்ஷுத்ரதை தோற்றப் பேசுகிறார்கள். அண்டாத்யக்ஷனான ப்ரஹ்மாவுக்கும் தாரகபோஷக போக்யங்களேயிறே ப்ரயோஜநம்; அதற்கு மேற்பட்ட பகவத்விபூதியை எனக்கு என்கிற அபிமாநத்தால் வந்த ஸ்வரூப ஹாநியேயிறே பலம்.

வ்யா.—(நெய்யிடை) "இடை" என்று-நிறையாய், நெய்யோடொத்த சோறென்னுதல். "இடை" என்று - நடுவாய், நெய்யினிடையிலே சில சோறுமுண்டென்னுதல். இத்தால் - போஷக ப்ரசுரமான தாரகத்ரவ்யத்தைத் தருமென்கை. (நல்லதோர சோறும்) சோற்றுக்கு நன்மையாவது - இட்டவன் "இட்டோம்" என்றிருத்தல், உண்டவன் "இதுக்கென்செய்வோம்!" என்றிருத்தல் செய்யாதசோறு. அதாவது - தாய் இட, புத்ரனுண்ணும் சோற்றுக்கு இவ்விரண்டுமில்லையிறே. (ஓர்சோறு) இப்பாவசுத்தியையன்றிக்கே, விலக்ஷண ரஸோபேதமாயிருக்கை; அங்ஙனன்றிக்கே, சேஷபூதன் சேஷிக்குஇடும் சோறுபோலேயிருக்கை. அதாவது - அஹங்காரோபேத மன்றிக்கே பக்த்யுபஹ்ருதமாயிருக்கை. ஈச்வரனும், "ஹ்ருதா நாழ் - பக்தாநாம்" என்கிற நினைவாலேயும் வத்ஸலனுமிறே யிடுவது. அநந்யப்ரயோஜநன் ஸ்வாமிவிஷயத்திலிடும் சோறு எங்ஙனேயிருக்குமென்னில்; "விதுராந்நாநி பு₂பு₄ஜே ஶுசீநி கு₃ணவந்தி ச" - விதுராந்நாநி புபுஜே ஶுசீநி குணவந்திச" என்னும்படி பாவநமுமாய் போக்யமுமாயிருக்கை. "சுசீநி" என்றது - சுத்தங்களாயிருக்கை. சோற்றுக்கு சுத்தியாவது- துர்யோதநன், தன் ஐச்வர்யத்தைப்பற்ற அபிமாநித்தான்; பீஷ்ம

[illegible]னென்று அபிமானித்தான்; த்ரோணன், வர்ணத்தாலதிகனென் [illegible]த்தான்; இவையொன்று மின்றிக்கே பக்த்யுபஹ்ர்தமா யிரு [illegible].

(நியதமும்) அதாகிறது - ஐச்வர்யம் ஈச்வரனே கொடுக்கிலும் அஸ்திரமாயிருக்கக் கடவது; அது அழிந்தவன்றும் அவ்வைச்வர்யத்தை ஸமாதானம் பண்ணிக்கொடுக்குமவனாகையாலே "நியதமும்" என்கிறது. இத்தாலேயிறே "அர்த்தார்த்தி" என்றும், "ஆர்த்தன்" என்றும் ஐச்வர்யத்துக்கு இரண்டுவகை சொல்லிற்று. அங்ஙனன்றிக்கே, தேவதாந்தரங்களைப் பற்றி ஈச்வரனை யில்லைசெய்யுமன்றும் தந்முகேந சோறிடுமவனென்கை. ஸர்வேச்வரனிட்ட சோற்றைத்தின்று அவனை யில்லைசெய்யும் க்ர்தக்நரிறே ஸம்ஸாரிகள்; தன்னையில்லைசெய்யு மன்றும் ரக்ஷிக்கும் உதாரனிறே ஸர்வேச்வரன். (அத்தாணிச்சேவகமும்) "அத்தாணி" என்று - பிரியாமை; "சேவகம்" என்று - ஸேவை. ஐச்வர்யார்த்திக்கும் அநவரதபாவநையும், அந்திமஸ்ம்ர்தியும் அநந்யப்ரயோஜநனோபாதி கர்த்தவ்யமிறே. ஆனால் ஐச்வர்யஸாதநத்தையும், "தந்து" என்று ப்ரயோஜநத்தோ டொக்கச் சொல்லுவானென்னென்னில்; *வெள்ளுயிரானபின்பு சொல்லுகிறார்களாகையாலே அந்த ஸாதநமும் ஸ்வயம்ப்ரயோஜநமாயிறே யிருப்பது. அநந்ய ப்ரயோஜநனுக்கு ஸ்வயம் ப்ரயோஜநமான ஸேவை ஸாதநமாகக்கிடீர் க்ஷுத்ரமான ஐச்வர்யத்தைத் தந்ததென்கை.

(கையடைக்காயும்) தாரக போஷகங்கள் கீழே சொல்லிற்றாய், மேல் - போக்ய பதார்த்தங்களைத் தந்தபடி சொல்லுகிறது. திருக்கையாலே யிட்டவெற்றிலைப்பாக்கென்று இவர்கள் பக்கல் கௌரவத்தாலே யிட்ட சீர்மையைச் சொல்லுகிறது. சேஷபூதன் சேஷியைக்குறித்து இடும் ப்ரகாரத்தாலேயிறே சேஷியானவன் சேஷபூதனுக்கு இடுவது. (கழுத்துக்குப் பூணொடு காதுக்குக்குண்டலமும்) தேஹத்தை உத்தேச்யம் என்றிருக்குமவனாகையாலே தன்னுடம்பை யலங்கரித்து, அத்தை யநுபவித்திருக்குமவனிறே ஐச்வர்யார்த்தி; பகவத்பரனாய் ஈச்வரனை யலங்கரித்து, ஸதாதர்சநம் பண்ணி யிருக்கிறானல்லனே; ஸ்வரூபத்தை யுணர்ந்து ஜ்ஞாந வைராக்ய பக்திகளை ஸ்வரூபத்துக்கு ஆபரணமாக நினைத்திருக்கிறானல்லனே. "கழுத்துக்குப் பூணொடு காதுக்குக் குண்டலமும்" என்று விசேஷிப்பானென்னென்னில்; தன் கண்ணுக்கு அவிஷயமாய், நாட்டார் கொண்டாடுமதுவே தனக்கு ப்ரயோஜநமா யிருக்கையாலே. அவயவாந்தரங்களில் அங்குலீயகாத்யாபரணங்கள் தன் கண்ணுக்கு விஷயமாயிருக்குமிறே. பெருமாள் மீண்டெழுந்தருளின வளவிலே இந்த்ரன் வரக்காட்டின ஹாரத்தைப் பிராட்டியும் நாமுமிருக்க திருவடிக்குப் பூட்டினாற்போலே, ஈச்வரன் பரிந்து "இது கழுத்துக்காம், இது காதுக்காம்" என்று திருக்கையாலே பூட்டின ஆபரணமும். "[illegible] -

ப்ரதேஶிஸ-யகேஶாம் யஸ்யதுஷ்டாஸிபாமிரீ" என்[illegible] வரக்காட்டின ஸாரத்தைப் பெருமாள் வாங்கிப் பார்த்[illegible] டிக்குக் கொடுக்கிறபோது, அத்தை வாங்குகிறவள், பெருமா[illegible] க்கண்ணாலும் திருவடியை ஒரு திருக்கண்ணாலும் பார்த்து வாங்கினள். "ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்துகோஸலா:- ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்துகோஸலா" [illegible] பார்வையிற் கருத்தறியுமவராகையாலே, அவனுக்குக் கொடுக்கலாகாதோ! என்றருளினர். [ஸ்வாமி - ஸ்வாமிகே] அடியாரேற்ற மறிந்துகொண்டாடு கைக் கீடான ஸௌபாக்ய முள்ளது உனக்கேயன்றோவென்ன; "உம்முடைய திருவுள்ளத்தாலே யன்றோ நான் கொடுக்கிறது" என்று பிராட்டி விண்ணப்பஞ்செய்ய; நான் முற்பாடனாகப்பெருமையாலே, உன்னுடைய உகப்பின் கார்யத்தைக்கொடுக்கலாகாதோ என்றார். இப்படி அகங்யப்ர யோஜநனுக்கு ஆதரித்துப்பூட்டினாற்போலேயாய்த்து க்ஷுத்ரனனவென்னை ஆதரித்துப் பூட்டிற்றும்.

(மெய்யிட) திருவடிகளில் ருசிபிறந்தபின்பாகையாலே "உடம்பு த்யாஜ்யம்" என்கிற நினைவு தோன்ற குத்ஸித்துச் சொல்லுகிறபடி. (நல்லதோர் சாந்தமும்) சாந்துதான் இதுக்குத்தரமாகப்பெற்றதோ! "ஸர்வகந்த:- ஸர்வகந்த:" என்கிற வடிவுக்கு ஸத்ர்சமாக, குப்ஜை ஆதரித்துச் சாத்தின சாந்துபோலே யிருக்கும் சாந்தையன்றோஎனக்கிட்டது. [ஸுகந்தமேதத்- ஸுகந்தமேதத்] குப்ஜை, கம்ஸனுக்குப் பரணியோடே சாந்து கொண்டு போகாநிற்க, "வாரீர் பெண்பிள்ளாய், நமக்கும் நம்மண்ணற்கும் சாந்திட வல்லீரோ" என்ன; அவ்வடிவையும் இருப்பையுங் கண்டு, ஸ்த்ரீத்வப்ர யுக்தமான சாபல்யத்தாலே மறுக்கமாட்டிற்றிலள்; "இவர்கள் இடைப்பிள்ளைகள்,சாந்தின்வாசியறியமாட்டார்கள்" என்றுஆக்கனாயிருப்பதொன்றையிட்டாள்; அத்தைப்பார்த்து,"நாற்றங்கொளுத்தினபடிஅழகியது,தளமழகிதன்று" என்ன; அதுக்குமேலேயொருசாந்தையிட ["ராஜார்ஹம்-ராஜார்ஹம்" இது கம்ஸனுக்குச் செருக்கிலே பூசலாமித்தனை, வாசியறிந்து பூசுவார்க்கு ஸத்ர்சமல்ல. அன்றியே, வழக்கனான சாந்தென்னவுமாம். [ருசிரம் - ருசிரம்] ஸௌகந்த்யம் கிடக்க, நிறமழகியதா யிருந்ததென்ன; "இவர்கள் இடைப்பிள்ளைகள் என்றிருந்தோம்,சாந்தின்வாசி யறிந்தபடியென்!" என்று ஆதரித்துப்பார்க்க [ருசிராநநே-ருசிராநநே" உன்முகத்திலாதரத்துக்கு ஸத்ர்சமாயிருக்கவேண்டாவோநீயிடும்சாந்தும்என்ன; அவளும்தனியான சாந்தையிட [அவயோர்காத்ரஸத்ருஶம்- அவயோர்க்காத்ரஸத்ருஶம்] என்னுடம்புக்கு ஸத்ர்சமான மேதகவஸ்துவையிட்டு மார்த்தித்துத்தாளென்றான். அதாவது - "பூசுஞ்சாந்து" என்கிறபடியே உன்னுடைய ஆதரத்தாலே ஸம்ஸ்க்ர்தமாக்கித்தா வென்றபடி. இப்படி இவள் ஆதரித்துச் சாத்தின மாளிகைச் சாந்தைக் கிடீர் தம் திருக்கையாலே யென்னுடம்பிலே பூசிற்று.

(தந்து) தந்தபோதைத் திருமுகத்தில் கௌரவத்திலும் ஔதார்யத்தி னாலும் தோற்று ஐச்வர்யத்தை விட்டு, அவன்றனே யமையுமென்னும்படியா யிருக்கத் தந்தது. (என்னை வென்னுயிராக்கவல்ல) "வொரோணாநாவஹா ரிணா-சோரேணாத்மாபஹாரிணா" என்கிறபடியே ஆத்மாபஹாரம்பண்ணி, அதினாலேவுக்ஷத்ரப்ரயோஜநகாமனாய்ஸம்ஸாரியாய்ப்போந்தவென்னை, வெ ன்னுயிராக்கவல்ல-மூன்புக்ஷத்ரனாய்ப் போந்தானொருவன் சுத்தஸ்வபாவ னானானென்றுதெரியாதபடி "அஸ்ப்ர்ஷ்ட ஸம்ஸாரகந்தரிலே யொருவன்" என்னலாம்படியாய்த்து விஷயீகரித்தது.(வல்ல) தன்னதொரு ஸ்வபாவ வி சேஷத்தாலேவஸ்துவை வஸ்த்வந்தரமாக்க வல்லசக்தனென்கை

(பையுடையித்யாதி) மங்களாசாஸநத்துக்கு விஷயமேதென்ன; அவ்விஷயத்தைச் சொல்லுகிறார். தன்னோட்டை ஸ்பர்சஸுகத்தாலேவிக ஸிதபணமான நாகத்தினுடைய பகையுண்டு - பெரியதிருவடி,அவனைக்கொ டியாக வுடையவனுக்கு. அநந்தசாயியாய் கருடத்வஜனானவனுக்குமங்களா சாஸநம் பண்ணுகிறேனென்கை. தகட்டிலழுத்தின மாணிக்கம்போலேதிரு வநந்தாழ்வானோட்டைச் சேர்த்தியால் வரும் அழகு நித்யஸ்ரீயாகவேணு மென்னும் ஏதேனுமொன்றை யபேக்ஷித்து வந்தவர்களையும் எனக்காக்கிக் கொள்ள வல்லேன் என்று கொடிகட்டி யிருக்கிற சக்தி, நித்ய ஸ்ரீயாய்ச் செல்லவேணுமென்றும் திருப்பல்லாண்டு பாடுகிறேனென்கிறார். அநந்ப்ர யோஜநரும் கைவல்யார்த்திகளும் ஸங்கதராகிற விடத்தில் ஸமூஹமாகப் பேசினார், இதில் ஐச்வர்யார்த்தியை ஏகவசநத்தாலே பேசுவானென்னென் னில்; அவர்கள் திரள் பரிச்சிந்நமாய் ஐச்வர்யார்த்திகள் திரள் அபரிச்சிந்ந மாசையாலே ஒருருக்கு ஒருத்தன் வார்த்தை சொல்லுமாப்போலே சொல் லுகிறார். (அ)

## அரும்பதம்.

"நெய்யிடை" இத்யாதி—ஸங்க்ரஹேணஸங்கதி அண்டக்குலத்திலேஇத்யா தி—இசைந்துவருகிற ப்ரகாரத்தை விஸ்தரேண உபபாதிப்பதாகத் திருவுள்ளம்பற் றி, அநுத்தாநுவாதம்பண்ணுகிறார்; வாழாளிலித்யாதி வாக்யத்வயத்தாலே—இவர்க ளிருவரையும் அநுவதித்துத்ருஷ்டாந்தார்த்தம்—கீழேயழைக்கப்பட்டவர்களேஸங் கதரானார்களாகையாலே, பாரிசேஷ்யாத்ஐச்வர்யார்த்திகளேஇதில் ஸங்கதராகிறார் களென்கைக்காகவுமாம்—பாட்டெல்லாங்கடாக்ஷித்து இசைந்துவந்த ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் இவர்களித்யாதி—இவர்கள்-ஐச்வர்யார்த்திகள்—இவர்களென்ற த்தைப்புகுருகிறார்களென்றத்தோடே அந்வயிப்பது—நாங்கள்என்றத்தை அபேக்ஷி க்களென்றத்தோடே அந்வயிப்பது—தோற்றது அர்த்தாத்ஸித்தம்—"அண்டக்குலம்" என்கிறபாட்டுக்கும்இப்பாட்டுக்கும்அர்த்தவைஷம்யமிருக்க, அவர்கள்வந்தபடியாக ச்சொல்லும்படி யெங்ஙனேயென்ன; அண்டக்குலத்திலித்யாதிபேசுகிறார்கள் என் றுமாவும்—பேசுகிறார்கள் என்ற அநந்தரம், ஆகுகையென்று அத்யாஹரித்துநிபந் தனம் என்றத்தோடே அந்வயிப்பது—இத்தால் ஸ்வருபஜ்ஞாநமே நிபந்தநமென்றதா யிற்று—யத்வா, மேலான ஐச்வர்யத்தை ஆசைப்பட்டவர்கள் சோறுமுதலானவற் றைக் கொடுத்தானாகச் சொல்லுகிறதுக்கு ஹேதுவேதென்கிற ப்ரஸ்நத்தை அநுவ

திக்கிறார் அண்டக்குலத்திலித்யாதி—இப்பக்ஷத்தில், இதுக்கு அபத்தமென்னென்னி்ல் என்று சேஷம்—உத்தரம் இன்று ஸ்வரூபேத்யாதியென்றுயோஜிக்கவுமாம்—அதினுடைய - அண்டாதிபத்யத்தினுடைய க்ஷுத்ரதை தோற்றச்சொன்ன மாத்ரமேயன்றிக்கே, நிரூபித்தால் தானுஞ்சொல்லுவதிவ்வளவே யென்கிறார் அண்டத்யக்ஷேத்யாதி—அவ்வளவே ப்ரயோஜநமாவானென்னென்ன, அதுக்குமேற்பட்டது இத்யாதி—அண்டாதிபத்யத்தை, "நெய்" "சோறு" என்றாற்போலே, அப்ரயமாகச்சொல்லலாமோவென்ன, அண்டாத்யக்ஷனை இத்யாதி என்று மேழுக்கு உபபாதகமுமாம்—"இடை" என்றதுக்கு இரண்டர்த்தம் - அதில், நெய்-சோறு-என்றத்தை உபலக்ஷணமாக்கி, இரண்டாம் அர்த்தத்தால் பலிதம் இத்தால்.இத்யாதி—இப்படிப்பட்டசோறுண்டோவென்ன, தாய் இத்யாதி—"ஓர்" என்றதுக்கு இரண்டர்த்தம்; ரஸோபேதமாதல், தாயிட்டசோற்றிலும் விலக்ஷணமென்னுதல் என்று—இரண்டாமர்த்தத்தை விவரிக்கிறார் அதாகிறது இத்யாதி—தாயிட்டாற்போலவும் சேஷபூதனிட்டாற்போலவும் ஸர்வேஶ்வரனிடுமோவென்ன, வ்யுத்க்ரமேண, அருளிச்செய்கிறார் ஈஶ்வரனும் இத்யாதி—"ஓர்" என்றதற்கிரண்டாமர்த்தமான அங்ஙனன்றிக்கேயென்கிற வாக்யத்தை விஸ்தரேண உபபாதிப்பதாகத்திருவுள்ளம்பற்றி, தத்விஷயஶங்கையை உத்க்ஷேபிக்கிறார் அநந்யேத்யாதி—ஸஹசித்வமாவது - அபிஜநவித்யாவ்ருத்தங்களால் வந்த அபிமாநஶூந்யராலே ஆட்படுகையென்றுவிவக்ஷித்து உபபாதிக்கிறார் சோற்றுக்கித்யாதி—"நியதமும்" என்றதுக்கிரண்டு தாத்பர்யம்;ஐஶ்வர்யத்தை நியதமாக்குகையென்றும் அவனுக்கெப்போதும் கொடுக்கையே நியதியென்றும்—அதாகிறதெத்தாலே யென்கிறதென்னில் என்று கூட்டுவது—ஸமாதாநம் பண்ணியென்றது - போனத்தையொக்கப்பண்ணியென்கை—இத்தாலே யென்றது-இப்படி புநஃகொடுக்கையாலே யென்றபடி—சொல்லிற்று ஸ்ரீகீதையில்இதிஶேஷ:- இரண்டாமர்த்தம் அங்ஙனன்றிக்கே இத்யாதி—தன்முகேந இவனே விடுகிறானாகில், இவனையில்லைச்செய்வானென்னென்ன, ஸர்வேஶ்வரன் இத்யாதி—க்ருதக்நகருக்கவன் கொடுக்கக்காரணமேதென்ன, தன்னை இத்யாதி—பிரியாதஸேவையாவது அநவரதபாவனை யன்றோ, இதுவுமிவனுக்குவேணுமோவென்ன ஐஶ்வர்யார்த்திக்கும் இத்யாதி—அநந்யப்ரயோஜநன்-உபாஸகன்—ஸாதநத்தை பலிதங்களோடே சேர்த்துச்சொல்லுவானென்னென்கிற ஶங்கையை அநுவதித்து, பரிஹரிக்கிறார் ஆனால் இத்யாதி—தந்தென்கிற ப்ரயோஜநமாவது - தந்தென்று சொல்லுகைக்குறுப்பான ப்ரயோஜநமென்றபடி—"சேவகமும்" என்று ஈடுபடுவானென்னென்ன,அநந்யேத்யாதி—அங்ஙனன்றிக்கே, ஸாதநத்தையும் பலகோடியிலே பரிகணித்ததுக்கு அநந்யப்ரயோஜநருடைய புத்த்யாவென்று தாத்பர்யமாகவுமாம்—அநந்யப்ரயோஜநர் - ப்ரபந்நர்—வ்ருத்தாநுவாதபூர்வகமாக, "கையடைக்காயும்" என்று தொடங்கி, "தந்து" என்னுமளவுக்கும்பாவம் தாரகேத்யாதி—அடை-வெற்றிலை—காய் - பாக்கு—"கை" என்று விஶேஷிப்பானென்னென்ன, திருக்கையாலே இத்யாதி—பாக்குஎன்றதுக்குச் சொல்லுகிறதென்றத்தோடே ஸம்பந்தம்—சேஷபூதனைப்போலே சேஷிகௌரவமாக இடக்கூடுமோவென்ன, சேஷபூதன் இத்யாதி—தேஹதாரணத்யர்த்தமாகச் சிலதாரகாதிகளை அபேக்ஷித்தானாகில் யுக்தம், தன்னை அலங்கரிக்கக்கூடுமோவென்ன,தேஹேத்யாதி—உக்தார்த்தத்தை இரண்டுவகையாகவ்யதிரேகமுகேந த்ருடீகரிக்கிறார் பகவதித்யாதிவாக்ய த்வயத்தாலே—பூண் - கண்டிகை—பூணுங்குண்டலமுமென்னவமைந்திருக்க, கழுத்தென்றும் காதென்றும் விஶேஷித்துச் சொல்லுவானென்னென்கிற சங்கையை அநுவதித்து, பரிஹரிக்கிறார் கழுத்துக்கித்யாதி—கேவலபராநுபாவ்யத்வம் ஸூசிதமாயிற்று—பராநுபாவ்யமாகாதே சிலவுண்டோவென்ன, அவயவாந்தரங்களில் இத்யாதி—கழுத்துக்கு காதுக்கு என்றுவிசேஷித்ததுக்கு இவனினை வாலேயென்று ஒருபரிஹாரம் மேலருளிச்செய்து,

ஸ்வரன் நினைவாலே யென்று பரிஹாராந்தர மருளிச்செய்கிறார் மீண்டு இத்யாதி— மீண்டென்றதுக்குமுன்னே, திருவயோத்யைக் கென்றுசேஷம்—இப்படி ஸத்ருஷ்டாந்தமாகச்சொன்ன அர்த்தத்தை ப்ரமாணமுகேந விஸ்தரித்தருளிச்செய்கிறார் "ப்ரதேஹி" என்றுதொடங்கி, பூட்டிற்றும் என்னுமளவும்—"[illegible]" "[illegible]" என்று சொல்லுகிறவசநங்களையுட்கொண்டு, "ப்ரதேஹி" என்றதுக்கு ப்ரஸக்திமுகேந அர்த்தமருளிச்செய்கிறார் இந்த்ரன் இத்யாதி—ஸ்ரீ ராமாயணத்தில், "[illegible]" என்றுமேலேயிருக்கையாலே கீழ்ச்சொன்ன "[illegible]" என்றதுக்குஆதாந காலத்தில் பார்வையைச் சொல்லவேணுமென்று திருவுள்ளம்பற்றி, இப்பதத்தில் வர்த்தமாந நிர்த்தேசத்தாலே பலிதத்தையு மருளிச்செய்கிறாரொன்று அத்தைவாங்குகிறவனென்கிற வாக்யத்துக்குத்தாத்பர்யம்—"[illegible]"என்ற ப்ரதீகம் "[illegible]" என்றதுக்குமுபலக்ஷணம்—இப்பதங்களுக்கெல்லாம்உத்தர ப்ரத்யுத்தர ரூபேணபாவம் அடியார் இத்யாதி—உக்தார்த்தத்தை ப்ரக்ருதத்திலே யேறிட்டுக்காட்டுகிறார்இப்படி இத்யாதி—"மெய்யிட" என்றுசொன்னதுக்குஹார்த்த தாத்பர்யம் திருவடிகளில் இத்யாதி—மேலே "நல்லதோர்"என்றதுக்கு ப்ரதிகோடித்வேந"மெய்"என்றதுக்கு ஜுகுப்ஸையிலே தாத்பர்யம்—"நல்லதோர்" என்றதுக்குட்கருத்து சாந்து இத்யாதி—தரமாக-அநுரூபமாக—சாந்தினது நன்மையை த்ருஷ்டாந்தமுகேந அருளிச்செய்கிறார் "[illegible]" இத்யாதி—குப்ஜை சாத்தின சாந்தின்படியேதென்ன,ஸுகந்த மித்யாதி—ஸ்லோகார்த்த மருளிச்செய்வதாகப்பீடிகையிடுகிறார்குப்ஜைஇத்யாதி—"காத்ர"பதத்தையும்,"திவ்யதாம்"என்றபதத்தையும்கடாக்ஷித்து,அவ்வடிவையும் இருப்பையுமென்றது—மறுக்கமாட்டிற்றிலளென்றது ஆக்கனைசாந்தையிட்டாளாக மேற்சொல்லுகையாலே, ஸுகந்தமென்றதுக்கு ஔபாதிக கந்தவத்தான சாந்தென்று திருவுள்ளம்பற்றி—இத்தையிடுகைக்கு ப்ரஸக்திசொல்லிக்கொண்டு,அர்த்தமருளிச்செய்கிறார் இவர்களித்யாதி—ஆக்கனாய் என்றது-ஆக்கப்பட்டதாய்; ஆரோபிதகந்தமான என்றபடி—இப்படி அர்த்தம்சொல்லாதபோதுஸுகந்தியென்றுசால்லவேணும்"[illegible]" என்று ஸூத்ரமும்—"[illegible]"என்று வார்த்திகமிருக்கையாலே, கீழ்ப்பதத்தைத்தொட்டுக்கொண்டு மேற்பதத்துக்கவதாரிகை அத்தைஇத்யாதி—கொளுத்தினபடி - ஊட்டினபடி—தளம் - கந்தாச்ரயம்; சாந்தென்றபடி—ராஜசப்தத்துக்கு விசேஷபரமாகவும் ஸாமாந்யபரமாகவும் திருவுள்ளம்பற்றி, அருளிச்செய்கிறார், அதுக்குமேலே இத்யாதிவாக்யத்வயத்தாலே—தோஷோக்திசபளிதமாகையாலே, செருக்கிலேயென்றது அர்த்தஸித்தம்—வழக்கனை-செலவுக்கானதான—காந்திமத் என்று ருசிரபதத்துக்கர்த்தம் அருளிச்செய்துகொண்டு,மேற்பதத்துக்கவதாரிகை ஸௌகந்த்யேத்யாதி—தலையான-ச்ரேஷ்டமான—"[illegible]"என்றதுக்கு அர்த்தம் எங்களுடம்புக்கித்யாதி—மேதகவஸ்து - கஸ்தூர்யாதிகள்—என்றான்க்ருஷ்ணன் என்று சேஷம்—ப்ரக்ருதத்தில் மேதகவஸ்துவேதென்ன, அதாகிறதித்யாதி—இந்த ஸ்லோகத்திலே,ஏதத்ஸுகந்தம், ஏதத்ராஜார்ஹம், ஏதத்ருசிரம், ஹேருசிராநநே,என்று ஸம்போதிக்கக்கூடாமையாலும்,ஸுகந்தமென்று, ஆரோபிதகந்தாச்ரயத்துக்கு "[illegible]"என்றிவ்யசாத்ராதுருப்யம் கூடாமையாலும், சாந்தைக்காட்டுவதற்கு முன்பு ஏதச்ச

ப்தநிர்த்தேசம் சேராமையாலும், ராஜார்ஹமென்று வழக்கனுன சாந்துக்கு நிர்ஸ்த்ராநுகுண்யமில்லாமையாலும், ருசிரமென்று கேவலரூப ப்ரதாநத்துக்கும் அது சொல்லப்போராமையாலும் ஏகவாக்யதயா அந்வயங்கொள்ளப்போகாது; ராஜார்ஹமென்றதுக்கு அதில் ச்லாக்யமென்றர்த்தங் கொள்ளுமளவில், ஸுகந்தமென்றது சேராது. அது ச்லாக்யமென்றபோதே ஸகலாதிசயம் ஸித்திக்கையாலே விசேஷணாந்தர வையர்த்யம் ப்ரஸங்கிக்கும் உக்தத்தை ப்ரக்ருதத்திலே உபஸம்ஹரிக்கிருர் இப்படி இத்யாதி—கோயிற்சாந்து - தேவார்ஹமான சாந்து—"கையடைக்காயும்" என்றதில், "கை" என்றதைய நுஷங்கித்து, திருக்கையாலே யென்றது—"வெள்ளுயிராக்கவல்ல" என்றபதத்தைக்கடாக்ஷித்து, ஐச்வர்யத்தைத்தந்து வெள்ளுயிராக்கக்கூடாமையாலே, ததநுகுணமாக, "தந்து" என்றதுக்குத் தாத்பர்யம் தந்தபேர்தை இத்யாதி—"வெள்ளுயிராக்கவல்ல" என்றதுக்கநுகுணமாக, "என்னை" என்றதுக்கு ஹார்த்தபாவம் "சோரேண" இத்யாதி—"வெள்ளுயிர்" என்றபதவாஸனைமுன்புஇத்யாதி—"வல்ல" என்றதின்கருத்து தன்னது இத்யாதி—மேலுக்கவதாரிகை மங்களாசாஸநத்துக்கித்யாதி—சப்தார்த்தம் தன்னேட்டை இத்யாதி—கருடக்கொடியென்னுதே "நாகப்பகைக்கொடி" என்றதுக்கு ஹார்த்தபாவம் அநந்தேத்யாதி—"பையுடை" என்றதுக்கு ஸ்வஸ்பர்சத்தால் விகஸிதபணத்வம் சொன்னத்தாலே அநந்தசாயித்வம் பலிதம்—இப்படி யிருவரையும் சொல்லி மங்களாசாஸநம் பண்ணுவானென்னென்ன, அருளிச்செய்கிருர் தகட்டிலித்யாதிவாச்யத்வயத்தாலே—படுகிறேன் என்கிருர் ஆழ்வாரென்றபடி—"பாடுதும்" என்றும், "கூறுதும்" என்றும், கீழ்ப்பாட்டுக்களிலிருக்க, இப்பாட்டில் "கூறுவன்" என்று சொல்லுவானென்னென்கிற சங்காநுவாதம்பண்ணி, பரிஹரிக்கிருர், அநந்யேத்யாதி—ஒரூர்க்கொருத்தர் வார்த்தை சொல்லுகையாவது - மிகவும் திரளாகையாலே, எல்லாருஞ் சொல்லும்போது தெரியாமையாலே, தனித்தனியே சொல்லக்கூடாமையாலே, எல்லாருக்குமாக ஒருவன் சொல்லுகை—சொல்லுகிருர் என்றது - அவன்வார்த்தையாக ஆழ்வாரருளிச்செய்கையாலே யென்றபடி.

---

## ஒன்பதாம்பாட்டு.

உடுத்துக்களைந்தநின்பீதகவாடை யுடுத்துக்கலத்ததுண்டு
தொடுத்ததுழாய்மலர்சூடிக்களைந்தனசூடுமித்தொண்டர்களோம்
விடுத்ததிசைக்கருமந் திருத்தித்திருவோணத்திருவிழவில்
படுத்தபைந்நாகணைப்பள்ளிகொண்டானுக்குப்பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை.—உடுத்த - திருவரையிலேயுடுத்து, களைந்த-கழித்த, நின்-தேவரீருடைய, பீதகவாடை - திருப்பீதாம்பரத்தை, உடுத்து-உடுத்தும், கலத்தது-அமுதுசெய்து கலத்தில் மிகுந்திருப்பதை, உண்டு-ஸ்வீகரித்தும், சூடிக்களைந்தன - முடித்துக்களையப்பட்டும், தொடுத்த - தொடுத்துமிருந்துள்ள, துழாய்மலர் - துழாய்மலர்களை, சூடும்-சூடிப்போருகிற, இத்தொண்டர்களோம்-இப்படிப்பட்ட அடியாரிறே நாங்கள்; விடுத்த - ஏவின, திசைக்கருமம்-திக்கிலுள்ள கார்யங்களை, திருத்தி-நன்றாகச்செய்து, திருவோணத்திருவிழவில் - திருவோணமாகிற திருநாளிலே; படுத்த - படுக்கப்பட்டு, பை-ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதமாகாநின்றுள்ள, நாகணை-திருவனந்தாழ்வானகிற படுக்கையிலே, பள்ளிகொண்டானுக்கு - கண்வளர்ந்தருளுமவனுக்கு, பல்லாண்டுகூறுதும்-மங்களாசாஸநம்பண்ணுகிறோம்.

தா-ம்.—தேவரீர் சாத்திக்கழித்த பீதாம்பரத்தை யுடுத்து, தேவரீர் அமுது செய்து மிகுந்திருப்பதை ஸ்வீகரித்து, தேவரீர் சூடிக்களைந்த திருத்துழாய்மலர்மாலைகளைச் சூடுகிற இவ்வகையராகிய அடியார்நாங்கள், ஏவின திக்கிலுள்ளகார்யங்களை நன்றாகச்செய்து, திருவோணமாகிற திருநாளிலே, படுக்கப்பட்டு ஸ்வஸம்ச்லேஷத்தாலே விகஸிதமாகாநின்றுள்ள பணத்தையுடைய திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருள்பவனுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறோம் என்பதாம்.

அ-கை.—ஒன்பதாம்பாட்டு. (உடுத்தித்யாதி) * வாழாளிலேயழைத்து * எந்தை தந்தையிலே வந்து கூடின அநந்யப்ரயோஜநர் பாசுரத்தாலே அவர்களோடே கூடித் திருப்பல்லாண்டு பாடுகிறாரிதில்.

வ்யா.—(உடுத்து) திருவரையிலே ஸம்ஸங்கதமாகச் சாத்துகையாலும் திருவரையிலே முசிகையாலும் தத்ஸம்பந்தம் தோற்றும்படி ஒற்றுமஞ்சளாலும் மாலிகைச்சாந்தாலும ஸிஹ்நிதமாம்படியுடுத்து. இவை யித்தனையும் ப்ரார்த்தநீயமாம்படியிருப்பார் சிலர் நாங்கள். சேஷிக்கு மங்களாவஹமாகையும் தத்ஸம்பந்தங்கள் தோற்றின ஸிஹ்நங்களையுடைத்தாகையும் சேஷபூதனுக்கு ஸ்ம்ருதிவிஷயமாய்க்கொண்டு ஸர்வகாலமும் ப்ரியகரமாயிறே யிருப்பது. (களைந்த) ஆஸநபேதத்திலே கழித்தால் போகடும் ஸ்தலம் தங்கள் தலையாம்படியிருக்கை. இதுவும் சேஷபூதனுக்கு ப்ரார்த்தநீயமிறே.

இங்ஙன் ப்ரார்த்தநீயமாக வேண்டுகிறதுக்கு ஹேது சொல்லுகிறது மேல். (நின் பீதகவாடை) வருத்த சேஷிபதாகையாலே சாத்தும் திருப்பரிவட்டமடையத் திருப்பீதாம்பரத்தினுடைய ஆவேசாவதாரமாகை. (நின் பீதகவாடை) "ஸ்ரஸ்தஹாரகேயூரகடகாங்கதநூபுரை: | விபூஷிதஸர்வாங்கோ ஸ்ரக்வஸ்த்ராபரணைர்யுக்தம் ஸ்வாநுரூபைரநூபமை: | சிந்மயைஸ்ஸ்வப்ரகாசைர்ச அந்யோந்யருசிரஞ்ஜகை:" என்று சேதநகோடியிலேயிறே திருப்பீதாம்பரத்தைச் சொல்லுகிறது. (உடுத்து) இதிறே அநந்யப்ரயோஜநர்க்கு ஆபரணம். அங்ஙனன்றியே "ஹஸ்தாநாம் - பக்தாநாம்" என்றிருக்குமவனாகையாலே இதுதான் சேஷி யளவிலே வந்தவாறே ப்ரதிபத்தி வேறுபட்டிருக்கும். ராஜாக்களுக்கு இரட்டைப்பிடித்துக் கொடுக்குமவர்கள் வாக்காகப் பிடித்துத் தங்களரையிலே யுடுத்திருந்து போக்யமாம்படி பண்ணிக் கொடுப்பர்கள்; அதுவாய்த்து இவனுக்கு நினைவு.

(கலத்ததுண்டு) அமுதுசெய்து கைவாங்கின தளிகை மாற்றினுல்ப்ரஸாதம் போஜ்யம். "த்வதீயபுக்தோஜ்ஜிதசேஷபோஜிநா - த்வதீயபுக்தோஜ்ஜித சேஷபோஜிநா" என்னக்கடவதிறே. ப்ரஸாதமே தாரகமாயிருப்பார் சிலர் நாங்கள். "ஸ்ரோத்ரியஸ்யோச்சிஷ்டம் - குரோருச்சிஷ்டம் புஞ்ஜீத" என்று விதிப்ரேரிதராய்க்கொண்டு ப்ரதிபத்தி பண்ணுவர்கள்ஸ்வரூபஜ்ஞாநமில்லாதார்; ஸ்வரூபஜ்ஞாநமுடையார். தத்ஸித்யர்த்தமாக ப்ரதி

பத்திபண்ணுவர்கள்; பகவத்ப்ரேமயுக்தர், ஸ்வயம்ப்ரயோஜந மென்றிருப்பர்கள். இச்சேஷத்வ காஷ்டையான ததீயருடைய ப்ரஸாதம் "தருவரேல்" என்கிறபடியே அதிக்ர்தாதிகாரமாயிருக்கும். ஸர்வஸாதாரணரன்றிக்கேயொழிந்தாலே, ப்ரயோஜநாந்தர பரனுக்கும்யோக்யமாயிறே பகவத்ப்ரஸாதமிருப்பது.

(தொடுத்தவித்யாதி) திருத்துழாய் பறிக்கும்போதும் தொடுக்கும்போதும் "அவன் சாத்தியருளப்புகுகிறான்" என்னும் ஆதரத்தாலேஸம்ஸ்க்ர்தமாய்ச் சாத்திக்கழித்தால் சூடுமது எங்களுக்கு உத்தேச்யம். சுவடர் பூச்சூடும்போது புழுகிலே தோய்த்துச் சூடுமாப்போலே, தத்ஸ்பர்சத்தாலே விலக்ஷணமாயிருக்குமென்கை. அவன்றானும், சிலர்*சூடிக்கொடுத்த மாலையின் சுவடறியுமவனாகையாலே சூடிக்கொடுக்கிறானிறே. (இத்தொண்டர்களோம்) இப்படிப்பட்ட அடியார்களிறே நாங்கள். எமக்கென்று உடுத்தல் ஜீவித்தல் சூடுதல் செய்யுமவர்களன்றிக்கே, அவன் கழித்தவைகொண்டு தேஹயாத்ரையாம்படி யிருக்குமவர்களிறே நாங்கள்.

ஸ்வரூபஸித்யர்த்தமாக அத்தலையில் உச்சிஷ்டங்களை ஆகாங்க்ஷித்து, புகையிலுண்பன் என்றிருக்கு மத்தனையோ வென்னில் (விடுத்தவித்யாதி) ஸ்வாமிஸந்தேசகாரிகளாய்க்கொண்டு, இப்படி தேஹயாத்ரை நடத்துமவர்களிறே நாங்கள். (விடுத்ததிசைக்கருமம் திருத்தி) "க்ருதகார்ய-க்ரியதாம்" என்கிற ஸந்தேசமேதாரகமாக ஏவினகார்யத்தைச் செய்து தலைக்கட்டுகை. திசைக்கருமந்திருத்துகையாவது - அத்திக்குக்கு வேறொருவனாலவேண்டாதபடிசெய்து தலைக்கட்டுகை. ஸ்வாமி யேவினகார்யத்தைக் குறையச் செயயுமவன் அதமன்; அத்தைக்குறையாமல் தலைக்கட்டுமவன் மத்யமன்; அதுக்குமேலே, அதுக்கு அவிருத்தமான கார்யங்களையும் விசாரித்துச்செய்து தலைக்கட்டுமவன் உத்தமன். "கார்யே கர்மணி நிர்திஷ்டே யோ பஹூந்யபி ஸாதயேத் | பூர்வகார்யாவிரோதேந ஸ கார்யம் கர்த்துமர்ஹதி - கார்யே கர்மணி நிர்த்திஷ்டே யோப ஹூந்யபி ஸாதயேத் | பூர்வகார்யாவிரோதேந ஸகார்யம்கர்த்துமர்ஹதி" என்கிற திருவடியிறே அவனாகிறான். "பிராட்டியிருந்தவிடமறிந்துவா" என்றுவிட, இருந்தவிடமுமறிந்து, "அவன்பலமிருந்தபடியென்?" என்று பெருமாள் கேட்டருளினால், "அறிந்திலேன் என்னவொண்ணாது" என்று அத்தலையில் பலபரீக்ஷையும் பண்ணி ஊரிலரணையும் தலையழித்து, மூலையடியே போம்படி பண்ணிவந்தானிறே. (திருவோணத்திருவிழவில்) ஏவினகார்யத்தைக் குறையறச்செய்தவளவிலும பர்யாப்திபிறவாமையாலே, திருவவதரித்தருளின திருவோணமாகிற மங்கள திவஸத்திலே என்னதீங்குவருகிறதோவென்று மங்களாசாஸநம் பண்ணிவர்த்திக்குமவர்கள்.

(படுத்தவித்யாதி) அத்தாலும் பர்யாப்தி பிறவாமையாலே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தபோதை அழகுக்குக் கண்ணெச்சில் வாராமைக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறார்கள். படுக்கப்பட்டு ஸ்வவம்ச்லேஷத்தாலே விகஸிதமாகாநின்றுள்ள பணத்தையுடையனாய், மென்மை குளிர்த்தி நாற்றம் என்கிறவற்றை ப்ரக்ர்தியாகவுடைய திருவநந்தாழ்வானாகிற

படுக்கையிலே கண்வளர்ந்தருளுகிறவழகுக்கு மங்களாசாஸநம் பண்ணுகி ரோம். ஸர்வதஸ்வர்வஜ்ஞனையும் மயங்கப்பண்ணும் படுக்கை அவன் ஸ்வ ஸ்பர்சத்தாலே விகர்தனாகப்பண்ணும்; இவனுடைய வடிவும் அவனுடைய வடிவும்; "கிடந்ததோர்கிடக்கை" என்கிறபடியே பரிச்சேதிக்கவொண் ணாத வழகிறே கண்வளர்ந்தருளுகிறபோதை யழகு. ஒருவெள்ளிமலை யிலே காளமேகம் சாய்ந்தாற்போலே கண்வளர்ந்தருளுகிறபோதை பரபா காஸத்தை அநுஸந்தித்தால் மங்களாசாஸநமொழியச் செல்லுமோவென் கிறார்கள். (௯)

## அரும்பதம்.

உடுத்துக்களைந்த இத்யாதி—"வந்து மண்ணுமணமுங்கொண்மின்" என்றத் தையும், "வந்துவழிவழியாட்செய்கின்றோம்" என்றத்தையும், இப்பாட்டில் "நின் பீதகவாடை" என்று எம்பெருமானை முன்னிலையாக்கி மங்களாசாஸநம்பண்ணுகிற படியையும் திருவுள்ளம்பற்றி, ஸங்கதிகதநமுகேந அவதாரிகை வாழாளிலே இத் யாதி—அழைத்து என்றது அழைக்கப்பட்டு என்றபடி—"களைந்தநின்பீதகவாடை" என்னவமைந்திருக்க, "உடுத்து" என்று சொல்லுகிறவர்களுடைய உட்கருத்து திரு வளாயிலே இத்யாதி—முசிக்கை - நலங்கப்பண்ணுகை—முசிக்கையும் என்ற அநந் தரம் உண்டாம்படி யென்றுசேஷம் —தத்ஸம்பந்தம் - கடிஸம்பந்தம்—ஒற்று மஞ் சன் என்றது "மஞ்சளுஞ்செங்கழுநீரும்" என்கிறபடியே திருமஞ்சனகாலத்தில் சா த்தினமஞ்சள்—மாளிகைச்சாந்து என்றது கோயிற்சாந்து என்றபடி; அதாவது-தே வார்ஹமானசாந்தென்றபடி—சிந்ஹிதமாம்படியும் என்று சகாரம் அத்த்யாஹார்ய ம்—இப்படிச்சில ப்ரகாரங்கள் தோற்றச்சொல்லுவானென்னென்ன, "இத்தொ ண்டர்களோம்" என்றத்தைக்கடாக்ஷித்து, அருளிச்செய்கிறார் இவை இத்யாதி— இவையித்தனையும் ப்ரார்த்தநீயமாவானென்னென்ன,சேஷிக்குஇத்யாதி—சேஷிக் குமங்களாவஹமாகையு மென்றபடி—ஸ்ம்ருதிவிஷயமாய் என்றது ஜ்ஞாநவிஷய மாய் என்றபடி—ஸர்வகாலமும் - திருவரையி லிருக்கும்போதும், தங்கள்பக்கல் வந்தபோதும்—"உடுத்த நின்பீதகவாடை" என்றாற்போதாதோ;"களைந்த"என்றது க்குக்கருத்தேதென்ன, சிரஸாவஹிக்கும்படி உத்தேச்யமா யிருக்கையென்று அரு ளிச்செய்கிறார் ஆஸநேத்யாதி—ஆஸநங்கள் - மந்த்ராஸநாதிகள்—அந்த உத்தேச்ய த்தை உபபாதிக்கிறார் இதுவுமித்யாதி—உடுத்துக்களைகை முதலானவை வகுத்த ஸ்வாமியதாகையாலேப்ரார்த்தநீயங்களென்றுகருத்து—ஆஸநபேதத்திலேசாத்தின திருப்பரிவட்டங்களெல்லாவற்றையும் பீதகவாடையென்கிறதென்னென்ன, வகுத் தஇத்யாதி—ஆவேசாவதார மென்கைக்குச் சேதநராகவேணுமேயென்ன, ப்ரமா ணங்காட்டுவதாக ப்ரதீகம் - நின்பீதகவாடையென்றது, "ஹ ஹவாஹர[illegible]

[illegible]" இதில் "சிந்மயை:" என்றதிலே திருவுள்ளம்— "சிந்மயை: சேதநஸ்வரூபை:" இது ஜ்ஞாநாபிவ்ருத்தியைப்பற்றப்ராக்ருத வஸ்துக் களிலே சேதநருண்டானாலும், ஜ்ஞாநாபிவ்ருத்தி யில்லாமையாலே, சிந்மயத்வங்கூ டாது; சிரஸாவஹிக்குமித்தனையொழிய உடுக்கக்கூடுமோ,அவனுக்கு சேஷமாகாத தையன்றோ உடுக்கவேண்டுவதென்ன, அநந்யப்ரயோஜநனுக்குத் தச்சேஷமானதை யொழியவேறொன்றை அபேக்ஷிக்கக்கூடாமையாலே,இதுவேயிவனுக்குஉத்கர்ஷாவ ஹமென்று [illegible]த்துவத்கரித்து,அருளிச்செய்கிறார் இதிறே இத்யாதி—ஆபரணமென் றது-[illegible]மென்றபடி—இவர்கள் தங்கள்ஸ்வரூபாநுரூபமாகஇப்படிப்ரார்த்தி

த்திருந்தார்களேயாகிலும்.அவன் இவர்களை அலங்கரித்துக்காணுமவனுகையாலே,மு
சிந்ததைக்கொடானே, இவர்களுக்கிது ஸித்திக்கும்படியேதென்ன,அவனினைவுவே
ருகையாலே ஸித்திக்குமென்று பரிஹரிக்கிறார் “ஸக்தா நாம்”என்றுதொடங்கி,இவ
னுக்குநினைவுஎன்னுமளவும்—இ.துதான்-உடுக்கைதான்—அந்தப்ரதிபத்தியைஉபபா
திக்கிறார், ராஜாக்களுக்கித்யாதி—இரட்டை - த்விபடி.; அதாவது த்விபடி—வாக்
காக - தங்கும்படியாக—ஈஸ்வரன் சேஷித்வத்தால்வந்த செருக்காலே கொடுத்துவி
டுகையும் இவர்கள் சேஷபூதரானோமென்று வைதமாய் பரிக்ரஹிக்கையுமன்றிக்
கே, ராகப்ராப்தமாக அவனுடுத்துக் கொடுக்கையும் அத்தை யிவர்களுடுக்கையு மெ
ன்றிருக்கும் ப்ரதிபத்திகளென்று தாத்பர்யம்—கலத்தது - பாத்ரத்திலுள்ளது என்
றுசப்தார்த்தம்—கீழும்மேலும் “உடுத்துக்களைந்த”என்றும் புக்தோஜ்ஜிதம்சொல்லி
யிருக்கையாலே, ததநுகுணமாக, உண்டுவிட்டகலத்தது உண்டென்று விவக்ஷித்த
ருளிச்செய்கிறார், அமுதுசெய்து இத்யாதி—யத்வா, அதுஎன்றது புத்திஸ்தபராம
ர்சியாகையாலே சேஷசேஷிகளுக்கு போஜநதேசகாலம் வ்யவஸ்திதமாகையாலே
பிந்நதேசகால விசிஷ்டமாக பாத்ரத்தில் ப்ரஸாதம் தோற்றுகிறதென்று அருளிச்
செய்கிறார் அமுதுஇத்யாதி—யாங்கிஃ என்கையாலே காலபேதமும், மாற்றினால்
என்றத்தாலே தேசபேதமும் தோற்றுகிறது—அதவா “தொண்டர்கள்” என்றத்தை
க்கடாக்ஷித்து, “கலத்தது” என்றத்தைமுழுச்சொல்லாக்கி, கலத்தை நிரூபகமாகச்
சொல்லுகையாலே பாத்ரவிசிஷ்டமென்று விவக்ஷித்தருளிச் செய்கிறார் அமுதித்
யாதி யென்னவுமாம்—அமுதுசெய்த ஸ்தலத்திலே தொண்டருக்குண்ணக்கூடாதெ
ன்று கருத்து—மாற்றினால் அதில் ப்ரஸாதமென்று கூட்டுவது—அநந்யப்ரயோஜந
ரில் புக்தோஜ்ஜிதத்தையே புஜித்தார்களுண்டோவென்ன, நித்யஸூரிகளில் தலை
யானவரன்றோ இப்படியிருந்தாரென்று விவக்ஷித்ததுக்கு ப்ரமாண மருளிச்செய்கி
றார்“த்வதிய்ய” இத்யாதி—“போஜிநா” என்றஇடத்தில்,தாச்சீல்யேணிநிப்ரத்யயத்
தாலே, புக்தசிஷ்டாசநமே ஸ்வபாவமென்று தோற்றுகிறது—இத்தால் பலிதம்ப்ர
ஸாதமேஇத்யாதி—என்னென்றாலும் விதிப்ரேரிதராகவாதல் சேஷத்வஸ்வரூபஸி
த்யர்த்தமாகவாதல் ஸக்ருத்ஸேவ்யமாயன்றோ லோகத்தில்நடப்பது. இதுவே தார
கமாயிருக்கைக்கு ஹேதுவேதென்ன, அருளிச்செய்கிறார் “குரோஃ” இத்யாதிவா
க்யத்ரயத்தாலே—“புஞ்ஜீத” என்று சொன்னாற்போலேயென்று சேஷம்—தத்ஸி
த்யர்த்தமாக என்றது ஸ்வரூப ஸித்யர்த்தமாக என்றபடி—பகவச்சேஷத்வந்தான்
பாகவதசேஷத்வபர்யந்தமல்லது நில்லாமையாலே, இந்த ப்ரஸாதப்ரதிபத்திதான்
காஷ்டாபர்யந்தம் நடந்தாலொழிய ஸித்தியாமையாலே, அவ்வளவும் நடக்கவே
ணுமேயென்ன, இந்த சேஷத்வேத்யாதி—காஷ்டையான என்றது - ததிய்யப்ரஸா
தம் சேஷத்வகாஷ்டா ஸம்பாதகமாகையாலே, அதிக்ருதாதிகாரம்; ஆகையால் இ
ங்கும் அநந்யப்ரயோஜநரைச் சொல்லுமிடத்தில், ததிய்யபுக்தசேஷபர்யந்தமென்
றுகருத்து—பகவத்ப்ரஸாதமோவென்ன, ஸர்வேத்யாதி—ப்ரயோஜநாந்தர பரர்க்
கும் என்ற ஸமுச்சயத்தாலே, அநந்ய ப்ரயோஜநர்களுக்குக் கேட்கவேணுமோவெ
ன்று தோற்றுகிறது—சூடுகிறபோதே தொடுத்திருக்குமே, “தொடுத்த” என்று
சொல்லுவானென்னென்ன, ஆதரம் தோற்றுகைக்காக வென்கிறார், திருத்துழாய்
இத்யாதி—ஸம்ஸ்க்ருதமாயிருக்கிற திருமாலையை யென்றுசேஷம்—அதுவே உத்
தேச்யமாயிருக்கிறதோவென்ன, சுவடரித்யாதி—சுவடர் - ரஸிகர்—அவன்தான்
பரமரஸிகனாயிருக்க, இவர்களைப்போலே சூடினதைச் சூட்டாதே, தான்சூடிக்கொ
டுப்பானென்னென்ன, அச்சுவட்டை யறிகையாலேதான் இவர்களிடத்தில் ப்ரீதி
யாலே சூடிக்கொடுக்கிறானென்கிறார், அவன்தானுமித்யாதி—இத்தால் ஸ்ரீகோதா
தேவி இவனுக்காக அவனெஞ்சறிந்து தான் சூடிக்கொடுத்தாற்போலே, அவனும்
இவர்கள் நெஞ்சறிந்துதான் சூடிக்கொடுக்கிறானென்றதாயிற்று—கீழ்வாக்ய விவர

ணம்- எமக்கென்றுசேத்தலித்யாதி—மேற்பதத்துக்கவதாரிகை, ஸ்வரூபேத்யாதி—வி சேத்திசைச்சுரும்ம திருத்தாதபோது, கீழ்ச்சொன்னவையெல்லாம் ப்ரேமகார்ய மாகத்தோற்றுமைபாலே, ததனுகுணமாக இப்படி ஸங்கையுதிக்குமென்று திருவு ள்ளம்—புகையில் என்றது - புகடில் என்றும் ப்ரஸாதிச்சில் என்றபடி—அன்றி க்கே, புகையில் என்றது - புகையெழும்பில், அதைக்கருதி ஹணத்யாயம்படிச்சை யென்னுமாம்—கீழெல்லாம் கடாக்ஷித்துத் தாத்பர்யம், ஸ்வாமீத்யாதி—ப்ரமாண பூர்வகமாக ஸப்தார்த்தம், "க்ரியதாம்" இத்யாதி—"கருமந்திருத்தி" என்றுற் போதாதோ, "திசை" என்பானென்னென்ன, அந்ததிக்கித்யாதி—"விருத்ததிசை" என்று, திக்ப்ரதர்ஸநம்பண்ணின மாத்ரத்தில், கார்யங்களெல்லாம் அஸஹாயமாகத் தலைக்கட்டக்கூடுமோவென்ன, அப்படிச்செய்தவன் திருவடியன்றோ என்பாராக, கிங்கரதாரதம்யத்தை அருளிச்செய்கிறார், ஸ்வாமியேவின இத்யாதி—அப்படி உத் தமாதி காரியாரென்ன,கார்யேத்யாதி—"காயெடுகூடுணி" என்றது - அவஸ்ய கர்த்தவ்யமான வ்யாபாரம்—திருவடி பஹுகார்யங்களைச்செய்தபடியை யருளிச் செய்கிறார், பிராட்டி இத்யாதி—அரணையும் - மதிளையும்—தலையழித்து - நன்றாக அழித்து என்றபடி—மூலையடியேபோம்படி-சுட்டுப்போட்டால் குட்டிச்சுவராமே, அப்போதுமூலையாசப்போகலாமே, அத்தைப்பற்றச்சொல்லுகிறது—"திருவோணத் திருவிழவில்" "பல்லாண்டுகூறுதும்" என்றுகூட்டி, கீழைக் கடாக்ஷித்துக்கொண்டு, அர்த்தமருளிச்செய்கிறார்,—ஏவின இத்யாதிக்குக்கீழைக்கடாக்ஷித்துத் தாத்பர்யம், அத்தாலுமித்யாதி—கண்ணெச்சில் - த்ருஷ்டிதோஷம்—தாத்பர்யார்த்தகதநமுகேந வாக்யார்த்தம், பகைக்கப்பட்டுஇத்யாதி—அவன் ஸர்வஜ்ஞனாயிருக்க, அச்சேர்த்திக் குப் பரியவேண்டும்படி யென்னென்ன,ஸ்வத:இத்யாதி—அவன்-ஈஸ்வரன்—இச்சே ர்த்திக்குக் கண்ணெச்சில்வருகைக்கு ப்ரஸக்தியேதென்ன, இவனுடையஇத்யாதி— கீழ்வாக்யத்தை விவரித்துக்கொண்டு, "பல்லாண்டுகூறுதுமே" என்கிற நிர்த்தார ணத்தைக்காட்டுகிறார்,கண்வளர்ந்தருளுகிறபோதை இத்யாதி—சாய்ந்தாற்போலே யிருப்பதொன்றுகையாலேயென்றுகூட்டுவது—பரபாகத்தை-வர்ணோத்கர்ஷத்தை,

---

## பத்தாம்பாட்டு.

எந்நாளெம்பெருமானுன்றனக்கடியோ மென்றெழுத்துப்பட்ட
வந்நாளேயடியோங்க ளடிக்குடில் வீடுபெற்றுய்ந்ததுகாண்
செந்நாள்தோற்றித்திருமதுரையுட்சிலைகுனித் தைந்தலைய
பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே யுன்னைப்பல்லாண்டுகூறுதுமே.

ப-ரை.—எம்பெருமான் - எம்முடைய ஸ்வாமியே, உன்றனுக்கு - ஸர்வசேஷியான வுனக்கு, அடியோமென்று-சேஷபூதரொன்று, எழுத்துப் பட்ட - அடிமைச்சீட்டெழுதிக்கொடுத்த நாள், எந்நாள் - எந்தநாள், அந் நாளே - அந்தநாளே, அடியோங்கள் - தாஸபூதரான நாங்களும், அடிக்கு டில் - எங்கள் க்ருஹங்களிலுள்ள புத்ரபௌத்ராதிகளும், அஹங்காரத்தை யும் - அஹங்காரகார்யமான ஐச்வர்ய கைவல்யங்களையும், வீடுபெற்று-வி டப்பெற்று, உய்ந்தது - உஜ்ஜீவிக்கப்பெற்றோம்; செம்-அழகிதான, நாள்- ரோஹிணிநக்ஷத்ரத்திலே, தோற்றி - திருவவதரித்து, திருமதுரையுள் - ஸ்ரீவடமதுரையிலே, கம்ஸனுடைய ஆயுதசாலையிலேபுக்கு, சிலைகுனித்து- வில்லைமுறித்தும், ஐந்தலைய - ஐந்து தலைகளையுடையனாய், பை - பரந்தபட

த்தையுடைய, நாகத்தலை - காளியனென்னும் பாம்பின்தலையிலே, பாய்ந்த வனே - குதித்தவனே, உன்னை - உனக்கு, பல்லாண்டுகூறுதும் - மங்கள சாஸநம்பண்ணுகிறோம்.

தா-ம். எங்கள ஸ்வாமியே, உனக்கே நாங்கள் அடிமைகளென்று ஸாஸைப் பட்டநாள் எந்தநாள், அந்தநாளே அடியோங்கள் மோக்ஷத்தைப்பெற்று உஜ்ஜீவித் தோம், செவ்வையான திருநக்ஷத்ரத்திலே அவதரித்து, ஸ்ரீவடமதுரையிலே ததர் ப்பங்கம்செய்து, ஐந்துதலைகளையும் விஸ்த்ருதமான பணத்தையுமுடைய ஸர்ப்பாஸ் யத்திலே குதித்தவனே, ஒருகுறைவுமில்லாதவுன்னை மங்களாஸாஸநம் பண்ணுகி றோம் என்பதாம்.

அ-கை.—பத்தாம்பாட்டு. (எந்நாளித்யாதி) கீழ்ப் பாட்டில் புகுந்த அநந்யப்ரயோஜநர், தேஹயாத்ரையிலும் தங்கள் பாரதந்த்ர்யமே ஸ்வரூப மாயிருக்கிற வேற்றத்தைச் சொல்லிக்கொண்டு புகுந்தார்கள்; இதில், ப்ர யோஜநாந்தரபரர் புகுருகிறார்களாகையாலே, தங்கள்பக்கல் அங்கனிருப் பதோரேற்றங் காண விரகில்லாமையாலே பகவத்ப்ரபாவத்தால் தங்களுக் குப்பிறந்த ஏற்றத்தைச்சொல்லிக்கொண்டுவந்து புகுருகிறார்கள். ஐச்வர் யார்த்தியும் ஸங்கதனாகிறபோது "சாந்தமுந் தந்தென்னை வெள்ளுயிராக்க வல்ல" என்று பகவத்ப்ரபாவத்தைச் சொல்லிக்கொண்டுவந்திறே புகுந் தது. அவன்றான் நானபேக்ஷித்த க்ஷுத்ர புருஷார்த்தத்தைத் தந்துவை த்து என்னை சுத்தஸ்வபாவனாக்கினானென்று ஆச்சர்யப்பட்டான்; கைவல யார்த்திகள், தங்கள் க்ஷுத்ர புருஷார்த்த ஸம்பந்தம் யாவதாத்மபாவி விநாசகரமாகையாலே ஆச்ரயணவேளையிலே மீட்ட ஆசசர்யத்தைக் கொ ண்டாடுகிறார்கள்.

வ்யா.—(எந்நாள்!) "அந்நாள்" என்னவமைந்திருக்க, "எந்நாள்!" என் கிறது, வகுத்தசேஷிபக்கலிலே க்ஷுத்ரபுருஷார்த்தத்தை அபேக்ஷித்தகா லமாயிருக்கச்செய்தேயும, "ஸுவ்ரஹ்ஷாதாவஸேநிஶா - ஸுப்ரபாதாச மேநிஶா" என்கிறபடியே மங்களாசாஸநம் பண்ணுகைக்கு யோக்யமாம் படி புகுரப்பெற்ற திவஸமென்று அந்நாளைக்கொண்டாடுகிறார்கள். பக வத்ப்ரபாவந்தான், விஷயீகரித்த திவஸத்தையும் கொண்டாடும்படியாயிரு க்குமிறே. அவதாரத்திலேற்றஞ்சொல்லுகிறவளவில் தஜ்ஜந்மதிவஸமென று அந்நாளும கொண்டாடப்பட்டதிறே.

ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷித்து வந்தவன், அதுவொழிந்து அந நயப்ரயோஜநனாகைக்கு அடியென்னென்னில் (எம்பெருமாள்) க்ஷுத்ர ப்ரயோஜநத்தை அபேக்ஷித்து நிருபாதிக சேஷியான உன் பக்கலிலேவரு கையாலே ஸ்வரூப ப்ராப்தமாய் வந்த சேஷத்வமே பலித்துவிட்டது. வகு த்த சேஷியானாலும அபேக்ஷிதங்களை யொழிய புருஷார்த்தாந்தரங்களைக் கொடுக்கும்போது, அர்த்தி பக்கலிலே ஒரு கைம்முதல் வேண்டாவோவெ ன்னில் (உன்றனக்கடியோமென் றெழுத்துப்பட்ட) அடியோமென்கிறஅர் த்தத்துக்கு வாசகமான சப்தத்திலே எங்களுக்கு அந்வயமுண்டு; நெஞ்சி னின்றிக்கே யிருக்கிலும் வாயிலுண்டான மாத்ரங்கொண்டு தரவல்ல தகுதி

யுண்டிறே யுனக்கு. அடிமைக்கு வாசகமான சப்தம் கைவல்யார்த்தியுடைய உபாஸநத்திலேயுண்டிறே. "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்மவ்யாஹரந்மாமநுஸ்மரந்" என்னக்கடவதிறே. அதவா, ஆரோனும் பக்கலிலே ஏதேனுமொன்றை வேண்டிச்செல்லிலும் நமஶ்ஶப்தப்ரயோகம் பண்ணக்கடவதாயிறே யிருப்பது; அதுவும் ஆத்மயாதாத்ம்ய வாசகமிறே. அதுவே எங்கள் பக்கல் கைம்முதலென்கிறார்கள். "எம்பெருமான்" என்கிற ப்ராப்தியாலும், "உன்றனக்கு" என்கிற சக்தியாலும், "எழுத்துப்பட்ட" என்கிற சப்தமாத்ரத்தாலும் பலிக்கக்கண்டோமென்கிறார்கள். "பட்ட" என்கிறது - "முத்துப்பட்ட" என்கிறாப்போலே. "வாழாட்பட்டு" என்கிறவிடத்திலே அர்த்தத்தினுடைய துர்லபத்வம் சொல்லிற்று; வாசக சப்தத்தினுடைய துர்லபத்வம் சொல்லுகிறது இங்கு. அஹங்கார க்ரஸ்தமான ஸம்ஸாரத்துக்குள்ளே தாஸ்ய ப்ரகாசம் அலப்யலாப மானாற்போலே, பஹுஜல்பம்பண்ணிப் போருகிறவாயிலே நமஶ்ஶப்தமுண்டாகை அலப்ய லாபமிறே. (அந்நாள்) "எம்பெருமான் உன்றனக்கடியோமென்று எழுத்துப்பட்டநாள், எந்நாள் - அந்நாள்" என்றந்வயம். "அந்நாளே" என்கிற அவதாரணத்தாலே - அதொழிய எங்கள் பக்கல் ஆநுகூல்யலேசமுமில்லை யென்று கருத்து.

அத்தால்பெற்றதென்னென்ன; தாங்கள்பெற்ற ப்ரயோஜந பரம்பரைகளைச் சொல்லுகிறார்கள் (அடியோங்களித்யாதி) அடியோங்களாகப்பெற்றோம்; குடிலும் அடிக்குடிலாகப்பெற்றது; வீட்டை லபிக்கப்பெற்றோம்; உஜ்ஜீவிக்கப்பெற்றோம். (அடியோங்கள்) என்கிறார்கள் - அஹங்காரக்ரஸ்தராய் ததநுகூலமான க்ஷுத்ரபுருஷார்த்தத்தை அபேக்ஷித்து உன் திருவடிகளிலே வந்து ஒதுங்கின நாங்கள், அதுபோய் தாஸ்யைகரஸராகப்பெற்றோம். (அடிக்குடில்) "குடில்" என்று - க்ர்ஹம். அத்தாலே - க்ர்ஹஸ்தரான புத்ரபௌத்ராதிகளும் அடியாராகப்பெற்றோம். "நல்லபதத்தால் மனைவாழ்வர்" என்னக்கடவதிறே. எழுத்துப்பட்டது தங்களளவிலே யாகில் புத்ரபௌத்ராதிகளளவில் ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தபடியென்னென்னில்; முத்துப்பட்டதுறையைக்காவலிடுமவன் அசல்துறையையும் காவலிடுமாபோலே, ஸம்பந்திஸம்பந்திகளளவும் அஹங்கார மமகாரங்கள்புகுராதபடி விஷயீகரித்தானென்கை. இவர்கள் ஸங்கதராகிறபாட்டிலும், "குடிகுடியாட்செய்கின்றோம்" என்றார்களிறே. சேஷிஸந்நிதியிலே சேஷபூதர் க்ர்ஹத்தை "குடில்வளைக்க" என்றுசொல்லக்கடவதிறே. (வீடுபெற்று) வீட்டைலபித்து. அதாகிறது - அஹங்கார மமகார கார்யமான ஐச்வர்யகைவல்யங்களாகிற த்யாஜ்யங்களை விடப்பெற்று. ப்ராப்யஸித்தியோபாதி த்யாகஸித்தியும் ப்ராப்யாந்தர்க்கதமிறே.(உய்ந்ததுகாண்) தாஸ்யம் என்றும் உஜ்ஜீவநம் என்றும் பர்யாயம்போலேகாணும்.

"உய்ந்ததுகாண்" என்று - அறியாதாரை அறிவிப்பாரைப்போலே சொல்லுகிறவிதுக்குக் கருத்தென்னென்னில் ; உபகரித்து விஸ்மரித்துப் போவது நீ; நீ பண்ணின உபகாரம் நாங்களுபதேசிக்கக் கேளாயென்கிறார்

கள். (செங்காளித்யாதி) ப்ரயோஜநாந்தரங்களைக் கைவிட்டு அநந்யப்ரயோஜநரானிகோளாகில் இனி க்ர்த்யமென்னென்னில்; உனக்கு மங்களாசாஸநம்பண்ணுகையே கர்த்யமென்கிறார்கள்; விஷயமேதென்ன (செங்கண்) அவதாரத்துக்கு ஏகாந்தமான நாளாகையாலே, அழகிய நாளென்கிறார்கள். (தோற்றி) அதீந்த்ரியமான விக்ரஹத்தை "ஸகலமநுஜநயநவிஷயதாங்கத: - ஸகலமநுஜநயநவிஷயதாங்கத:" என்கிறபடியே உகவாதார்கண்ணுக்கும் விஷயமாம்படி தோற்றுவித்து. (திருமதுரையுள்) அது தானும் நிர்ப்பயமான அயோத்யையிலன்றிக்கே; சத்ருவான கம்ஸன் வர்த்திக்கிறவூரிலே. (சிலைகுனித்து) அவ்வூரில் தங்கவொண்ணாமையாலே திருவாய்ப்பாடியிலேபோய் மறையவளருகிற நீ, மறுத்தும் அவ்வூரிலே புகுந்து கம்ஸனுடைய ஆயுதசாலையிலேபுக்கு வில்லைமுறித்துப் பூசலை விளைத்தாய். அநுகூலரடைய "என்வருகிறதோ" என்று வயிறுபிடிக்க வேண்டும்படியான தசையிலே கம்ஸனுக்கு மறம்பிறக்கும்படி சிலுகு படுத்துவதே!.

(ஐந்தலையவித்யாதி) அதுகிடக்க, நிர்ப்பயமாய் வர்த்திக்கிற காலத்திலே பிறந்த ப்ரமாதமே போராதோ வயிறெரிகைக்கு என்கிறார்கள். (ஐந்தலையபைந்நாகத்தலைப்பாய்ந்தவனே) கடிக்கைக்கு அஞ்சுவாயையுடைத்தாய், க்ரோதத்தாலே விஸ்த்ர்தமான பணத்தை யுடைத்தான ஸர்ப்பாஸ்யத்திலேயன்றோ புக்கது. "ஏகதாது விநாராமம் க்ருஷ்ணோப்ர்தாவநம்யயௌ - ஏகதாதுவிநாராமம் க்ருஷ்ணோப்ர்தாவநம்யயௌ" என்று-தமையன் ஒருநாள் போகிற்க பாம்பின்வாயிலே புகும்படியிறே தீம்பு. "க்ஷ்ணாவதாரமென்றால் ஆழ்வார்களெல்லாரும் ஒக்கப்பரிவரா யிருப்பர்கள், இதுக்கடியென்?" என்று ஜீயர் பட்டரைக்கேட்க; "ராமாவதாரத்தில் பிள்ளைகள் தாங்கள் மிடுக்கராய் குணாதிகருமாய், பிதா சம்பராந்தகனுமாய், மந்த்ரிகள் வஸிஷ்டாதிகளுமாய், ஊர் அயோத்யையுமாய், காலம் நல்லகாலமுமாயிருக்கையாலே அங்குத்தைக்கு ஒருபயமுமில்லை; இங்கு, வந்து பிறந்தவிடம் சத்ருக்ர்ஹமாய், கம்ஸன் இடம்பார்த்துநலியும் துஷ்ப்ரக்ர்திகளை வரக்காட்டும் க்ரூரனுமாய், தமப்பன் இடையனுமாய், ஊர் இடைச்சேரியுமாய், பிள்ளைகள்தாங்கள் தீம்பருமாய், காலம் கலிகாலத்தோடு தோள்தீண்டியாயிருக்கையாலே என்வருகிறதோ! என்று பரிகைக்கு ஆழ்வார்களல்லதில்லைகாணும்" என்றருளிச்செய்தார்.

(உன்னைப்பல்லாண்டுகூறுதுமே) இப்படிப்பட்டவுன்னை அநுஸந்தித்தால் மங்களாசாஸநமொழியத்தரிக்க விரகுண்டோவென்கிறார்கள். (௧௦)

## அரும்பதம்.

எங்களித்யாதி—கீழ்ப்பாட்டில் அநந்யப்ரயோஜநர் பாசுரமென்றீர், அதுக்கும், இப்பாட்டு ப்ரயோஜநாந்தரபரர் பாசுரமாகைக்கு ஸூசகமும் ஏதென்ன, அருளிச்செய்கிறார், கீழ்ப்பாட்டித்யாதி வாக்யத்வயத்தாலே—தேஹயாத்ரையிலும் பாரதந்த்ர்யமே ஸ்வபாவமாகச்சொல்லுகையாலும், பகவத்ப்ரபாவத்தாலே தங்களுக்கு தாத்காலிகாதிசயம் வந்ததாகச்சொல்லுகையாலும், ஸூசகங்களென்று; ஆகை

[illegible]அநங்யப்ரயோஜநர்பாசுரம் அது,இது ப்ரயோஜநாந்தரபரர் பாசுரம் என்று [illegible]—தேஹயாத்ரையிலும் என்ற ஸமுச்சயம் ஆத்மயாத்ரையில் கிம்புநந்யாயத்தை ஸூசிப்பிக்கிறது—மங்களாஶாஸநம் பண்ணப்புகுந்தார்களாகையாலே, அவர்களோடு திருப்பல்லாண்டுபாடினுர் என்றுகூட்டுவது—ப்ரயோஜநாந்தரபரர் என்றதுக்குக் கேவலரென்றுகருத்து—அங்ஙனிருப்பதென்றது - பரதந்த்ரராயிருப்பதென்றபடி—மங்களாஶாஸநம் பண்ணப்புகுதுகிருர்கள்; அவர்கள் பாசுரத்தாலே திருப்பல்லாண்டுபாடுகிருரென்று இங்குங்கூட்டுவது—ப்ரயோஜநாந்தர பரராருல், பகவத்ப்ரபாவத்தைச் சொல்லவேணுமோவென்ன, ஐஶ்வர்யார்த்தியுமித்யாதி—ஐஶ்வர்யார்த்தியைப்போலேஸங்கதராகிற "தீயிற்பொலிகின்ற" என்றத்திலே சொல்லாதே, இப்பாட்டிலே இத்தைச்சொல்லி, ஆஶ்சர்யப்படவேண்டுகிறபடி யென்னென்ன, அருளிச்செய்கிருர் அவன் இத்யாதி வாக்யத்வயத்தாலே—ஈஶ்வரன்தந்துவெள்ளுயிராக்கிருனுகையாலே, அவனை முன்னிலையாகக்கண்ட வாஸனையாலே, அவன் வைலக்ஷண்யம் நெஞ்சிற்பட்டு, அந்தப்பாட்டிலே கொண்டாடினுர்கள்ஐஶ்வர்யார்த்திகள்; கேவலர் உபாஸநதசையில் அவனை முன்னிலையாகக்காணுமையாலே, ஆழ்வாராலேதிருந்தி, அவனைக்கண்டு மங்களாஶாஸநம்பண்ணுகிற அந்தப்பாட்டில் கொண்டாடினுர்கள் என்றுகருத்து—கொண்டாடினுர்கள் என்ற அநந்தரம் இப்பாட்டில் என்றுகூட்டுவது—மேலே "அந்நாள்" என்றுசொல்லியிருக்க,அதமையாதோ "எந்நாள்" என்றுசொல்லுவானென்னென்கிற ஶங்கையை அநுவதித்து, பரிஹரிக்கிருர், அந்நாளித்யாதி—எந்நாள் என்கிறதென்னென்னில் என்றுஶேஷம்-கொண்டாடுகிருர்களாகையாலே, எந்நாள் என்கிறது என்றுகூட்டுவது—வேணுமாகில் பகவானைக்கொண்டாடுகிருர்கள், நாளைக்கொண்டாடுவானென்னென்ன, பகவதித்யாதி—இப்படி நாளைக்கொண்டாடினதுண்டோவென்ன, ராமக்ருஷ்ணுதிருபேண அவதரித்த காலத்தில் அதிஶயத்தைச்சொல்லவந்து, அந்ததிவஸத்தை ராமஜயந்தி, க்ருஷ்ணஜயந்தி, நரஸிம்ஹஜயந்தி. என்று, ஶாஸ்த்ரங்களாற் கொண்டாடப்பட்ட தென்கிருர் அவதாரத்திலித்யாதி—"அடியோம்" இத்யாதிக்கவதாரிகை ப்ரயோஜநேத்யாதி—எம்பெருமாணுகையாலே, உய்ந்ததுகாண்என்றுதிருவுள்ளம்பற்றி, அருளிச்செய்கிருர், க்ஷுத்ரேத்யாதி—"அடியோங்கள்" இத்யாதிக்கவதாரிகை, வகுத்தஇத்யாதி—வகுத்த-ப்ராப்தமான—எழுத்து-வர்ணுத்மகமானஶப்தம்; அதாவது - ப்ரணவமாதல், நமஶ்ஶப்தமாதல்—எழுத்துப்படுகை-உச்சரிக்கை—முந்தின அர்த்தத்திலே நோக்காக அருளிச்செய்கிருர் அடியோமென்கிற இத்யாதி—வாசகமானஶப்தம் என்றது-ப்ரணவம்; இது "அடியோம்" என்கிறஅர்த்தத்தைச்சொல்லுகையாவது "அடியோம்" என்கிறபதம் ப்ரதியோகிஸாபேக்ஷமாகையாலே அகாரார்த்தத்தையும், ஸர்வம்வாக்யம் ஸாதாரணம் என்கிற ந்யாயத்தாலேஉகாரார்த்தத்தையும், இதுக்கு ப்ரவ்ருத்திநிமித்தம் தாஸ்யமாகையாலே சதுர்த்யர்த்தத்தையும், அஸ்மச்சப்தபர்யாயதயா ப்ரத்யகர்த்தபோதக மாகையாலே மகாரார்த்தத்தையும், இதில் பஹுவசநத்தாலே அதில் ஜாத்யபிப்ராயகத்வத்தையும் காட்டக்கடவதாயிருக்கை—வாசகமென்றது-ப்ரணவத்துக்கு ஜீவப்ராதாந்யம்—சப்தப்ராதாந்யமாகையாலே வேறொன்றை யபேக்ஷித்து, மற்றொன்றுக்கு வாசகஶப்தம் சொன்னுற்போருமோவென்ன, "உன்றனக்கு" என்றதிலே நோக்காக அருளிச்செய்கிருர் நெஞ்சிலித்யாதி—கைவல்யார்த்திக்கு இந்த ப்ரஸங்கமென்னென்ன, அடிமைக்கித்யாதி—எங்ஙனேயென்ன, "ஏழ்" இத்யாதி—இந்த ப்ரமாணம்ஐஶ்வர்யார்த்திவிஷயமான அண்டக்குலத்திலும் எடுத்தருளினுர், இங்குமெடுக்கையாலே உபாஸநமாத்ரத்துக்கெல்லாம் இதுவேணுமென்று திருவுள்ளம்—இரண்டாம் அர்த்தத்தை யருளிச்செய்கிருர் அதவா இத்யாதி—நமஃப்ரயோகமென்றது-நமஶ்ஶப்த ப்ரயோகமென்றபடி—ஆனுல் இது அடியோம் என்றதாமோவென்ன,அதுவுமித்யாதி—யாதாத்ம்

# பத்தாம்பாட்டு வ்யாக்யாநஅரும்பதம்.

யவாசகமாகையாலே தத்வாசகத்வம்ஸித்தமென்று கருத்து—இந்த அர்த்த[illegible]
க்ருதஶங்கைக்கு உத்தரங்காட்டுகிறார், அதுவேயெங்களித்யாதி—கீழ்ச்[illegible]
த்தத்தை நிகமிக்கிறார், எம்பெருமானித்யாதி "கூழாட்பட்டு" என்ற இடத்திற்[illegible]
லே யாகாமைக்காக அருளிச்செய்கிறார், பட்டவென்கிற இத்யாதி—வேறு[illegible]யில்,
இதில் அர்த்தாநுஷ்டாநம்துர்லபமாகையாலே இப்படிச்சொல்லலாம், ஸ[illegible]
ஶப்தத்தை ப்ரயோகிக்கை அருமையாமோவென்ன, அருளிச்செய்கிறார்வாழானித்
யாதி வாக்யத்வயத்தாலே—அர்த்தம் என்றது-தாஸ்யம்—கீழ்ச்சொன்ன தௌர்லப்
யத்தை ஸ்த்ருஷ்டாந்தமாக உபபாதிக்கிறார், அஹங்காரேத்யாதி—"எந்நாள்" என்
றதுக்கு விஶேஷ்யாகாங்க்ஷையில் "எந்நாள்" என்கிறபதத்தை அத்யாஹரித்து,அந்
வயம்காட்டுகிறார் எம்பெருமானித்யாதி—அதுவொழிய - எம்பெருமானுக்கென்றெ
ழுத்துப்பட்டநாளொழிய—மேலுக்கவதாரிகை அத்தாலித்யாதி—அத்தாலென்றது-
அந்நாளாலென்றபடி—பரம்பரைதன்னைக்காட்டுகிறார் அடியோங்களாகஇத்யாதி--
குடிலும்-குடீரமும்—அடிக்குடிலாகவென்றது-அடிமையுடைத்தான குடில் என்ற
படி—இந்நாலு ப்ரயோஜநங்களையும் அவர்களுடைய ஹார்த்தாபிப்ராயாநுகுணமா
கவிவரிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, அடியோங்கள் பெற்றோமென்றதுக்கு
பூர்வதஶாகதநமுகேநவிவரணம், அஹங்காரேத்யாதி—க்ருஹஸ்தரான கருஹத்தி
லிருக்கிறகுடியிலே தத்ரத்யரை லக்ஷணையாகச்சொல்லுகிறதென்று திருவுள்ளம்—
இதுக்கு ப்ரமாணம் "நல்ல" இத்யாதி—நல்லபதம் - அநுகூலதாம்பத்யம்—இந்த
ப்ரமாணத்தில் "கொண்டபெண்டிர்மக்கள்" என்ற பர்யந்தம் திருவுள்ளம்—எழுத்
துப்பட்டவர்களுடைய ஸம்பந்தமே ஹேதுவாக ப்ரதிபந்தகத்வத்தைப்போக்கி, ஜ்
ஞாநத்தையுண்டாக்கினுரென்று பரிஹரிக்கிறார், மூக்குப்பட்ட இத்யாதி—"அடிக்
குடில்" என்றதுக்கு, சொன்ன அர்த்தத்திலே ஸமவாதங்காட்டுகிறார்,இவர்கள்ஸங்
கதரித்யாதி—மனையென்னாதே குடில் ஶப்தத்தாலே சொல்லுவானென்னென்ன,
ஶேஷிஇத்யாதி—குடில்வளைக்கவென்றது, லோகவ்யவஹாரத்தைக்காட்டினபடி—
வீடு பரமபதம்என்றால் மங்களாஶாஸநவேளையிலே சொல்லக்கூடாமையாலே,
"வீடு" என்றத்தைவிடுகையாக விவரிக்கிறார், அதாகிறதித்யாதி—இப்பாட்டு கேவ
லருடைய பாசுரமாயிருக்க, ஐஶ்வர்யகைவல்யங்களென்று கூட்டியருளிச்செய்தது
அத்தைவிட்டுப்பின்பும் ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே இதுக்குவர ப்ரஸக்தியுண்டென்
னுங்கருத்தாலே—அபிமதஸித்தியொழிய த்யாகஸித்திபேறோவென்ன, ப்ராப்யே
த்யாதி—உஜ்ஜீவநமாவதேதென்ன, தாஸ்யமென்றும் இத்யாதி—பர்யாயம் என்ற
து-விஶேஷ்யபர்யவஸாநப்ரத்யா-ஸர்வஜ்ஞனுக்கு, "காண்" என்று, காட்டவேணு
மோ என்கிறஶங்கையை அநுவதித்து, பரமோதாரனாகையாலே வேணுமென்றுபரி
ஹரிக்கிறார், உய்ந்ததித்யாதி—உத்தரார்த்தத்துக்கெல்லாம் பாவம் ப்ரயோஜநாந்த
ரேத்யாதி—"பாய்ந்தவனே" என்னுமளவுக்கும் அவதாரிகைவிஷயமேதென்னவெ
ன்றது—நாளுக்குச்செவ்வையேதென்ன, அவதாரத்துக்கித்யாதி—"தோற்றி"என்
றதுக்குவாஸனை, அதீந்திர்யேத்யாதி—"மதுரை" என்றத்தைக்கடாக்ஷித்து, உகவா
தார்கண்ணுக்கு மென்றது வ்யாவ்ர்த்ய பூர்வகமாகத்தாத்பர்யம்,அதுதானுமித்யாதி-
சிலை-வில்—குனிக்கை-வளைக்கை;—அத்தாலே முறிக்கையைச்சொல்லுகிறதாய், கீழ்
ப்பதத்தையும் சேர்த்துத் தாத்பர்யம், அவ்வூரிலித்யாதி—மறித்தும்-புநரபீத்யர்த்த:-
பூசல் விளைத்தாயென்றது அர்த்தஸித்தம்—அவ்வபதாநத்தைச் சொன்னவர்களுடை
ய உட்கருத்தை யருளிச்செய்கிறார், அநுகூலரித்யாதி—வயிறுபிடிக்க வேண்டும்
தசையென்றது, ஒளித்து வளருகையாலே—மறம்-கோபம்—சிலுகு படுத்துகை -
சண்டையுண்டாக்குகை—திருமதுரை கம்ஸனதாகையாலே, அங்கே அவதரித்ததும்
பூசலைவிளைத்ததுந்தான் பயஹேதுவாயிற்று—பரிவாருள்ள திருவாய்ப்பாடி[illegible]
தான் நிர்ப்பயமாக வளரப்பெற்றதோவென்று; "ஐந்தலைய"இத்யாதிக்குத்[illegible]

...செய்கிறார், அது கிடக்கஇத்யாதி—இவ்வபதாநங்களை முன்பின்னாக அருளி ...யாலே, இவர்த்தம் பவிதமென்று திருவுள்ளம்—நிர்ப்பயமாகவர்த்திக்கி ...மென்றது-ஸ்ரீப்ருந்தாவநத்திலே நிரிகிறகாலமென்றபடி—காளியனை யிங்கே ...க்கைக்குத்தாத்பர்யம், கடிக்கைக்கித்யாதி—"பை" என்றது விஸ்த்ருதமும், படமுமாகையாலே, இரண்டையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார் விஸ்த்ருதமான ...த்தையென்று—"பாய்ந்தவனே" என்று ஸம்போதிக்கிறவர்களுடைய உட்கருத்து, ஏதேத்யாதி—தீம்பு-தௌஷ்ட்யம்—முதற்பாட்டில், "மல்லாண்டதிண்டோள்" என்றும், ஏழாம்பாட்டில், "வாணனை யாயிரந்தோளும்" என்றும், இப்பாட்டில் க்ருஷ்ணாவதாரப்ரஸங்கம் வருகையாலே, மிகவு மிவ்விஷயத்தைப்பரிகைக்கு ...னைப்பலபடியாக ஆப்தஸம்வாதமுகேநதர்ஸிப்பிக்கிறார், க்ருஷ்ணாவதாரமென்றுலித்யாதி—ஆழ்வார்களெல்லாருமென்றது "பிறந்தவாறும் வளர்ந்தவாறும்" என்று ஆழ்வாரும், "கோவலனாய்வெண்ணெயுண்டவாயன்" என்று பாண்பெருமாளும், மற்றைதிவ்யப்ரபந்தங்களில் ஆழ்வார்களும் எங்குங்கண்ணனையே விரும்புகையாலே, பட்டர்தாம் ராமாவதாரததில் மிகவும் பதிந்திருக்குமவராகையாலே, ஆழ்வார்கள் ராமபக்ஷபாதிகளென்றதில்லையென்று ஜீயருக்குக்கருத்தாகக்கருதி, இவ்வவதாரத்துக்குள்ள விஶேஷங்களையும் அருளிச்செய்கிறார், ராமாவதாரத்திலே யித்யாதி—ராமாவதாரத்திலே யென்றது-ராமாவதாரம்பண்ணினபோதென்றபடி-பிள்ளைகளென்றது-மேல்பிதாவென்று சக்ரவர்த்தியைச்சொல்லுகையாலே—மந்த்ரிகளென்றது வஸிஷ்டாதிகளும் கார்யவிசாரதக்ஷராகையாலே—அயோத்யை என்றதுக்கு யோகார்த்தத்திலே திருவுள்ளம்—அங்குத்தைக்கு - அவ்விஷயத்துக்கு—இங்கு - க்ருஷ்ணாவதாரத்திலே யென்றபடி—"உன்னை" என்றதுக்கும், "கூறுதுமே" என்கிற ஸ்வரத்துக்கும்வாஸனை இப்படிப்பட்ட இத்யாதி—இப்படிப்பட்டஎன்றது-இப்படித்தீம்பனை என்றபடி—

---

## பதினோராம்பாட்டு.

அல்வழக்கொன்று மில்லாவணிகோட்டியர்கோ னபிமானதுங்கன்
செல்வனைப்போலத் திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்
நல்வகையால் நமோநாராயணாவென்று நாமம் பலபரவிப்
பல்வகையாலும் பவித்திரனே யுன்னைப் பல்லாண்டு கூறுவனே.

ப-ரை.—திருமாலே - ஸ்ரீயஃபதியானவனே, அல்வழக்கு-தப்பான வழக்குகள், ஒன்றும்—, இல்லா - இல்லாததாய், அணி - ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, கோட்டியர் - திருக்கோட்டியூரிலுள்ளார்க்கு, கோன்-தலைவராய், அபிமாநதுங்கன் - "நான் எம்பெருமானுக்கடியன்" என்கிற அபிமாநத்திலுயர்ந்தவரான, செல்வனைப்போல - செல்வநம்பியைப்போல, நானும் - சேஷபூதனான நானும், உனக்கு-சேஷியானவுனக்கு, பழவடியேன்-பழையவடியேனாகையாலே, நல்வகையால் - விலக்ஷணோபாயத்தால், நமஃ-நான் எனக்குரியேனல்லேன், நாராயணா - ஸர்வஸ்வாமியே, பல்வகையாலும் - ஸர்வப்ரகாரத்தாலும், பவித்திரனே-பரிசுத்தனானவனே, என்று—, நாமம்பல - உன்னுடைய திருநாமங்களையெல்லாம், பரவி-வாயில்வந்தபடி சொல்லி, உன்னை - உனக்கு, பல்லாண்டு கூறுவன்-மங்களாசாஸநம்பண்ணுகிறேன்.

தா-ம்.—ஸ்ரீய:பதியே, வழக்கல்லாதவைகள் ஏகதேசமுமில்லாத, மான திருக்கோட்டியூரிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நிர்வாஹகனும், மென்கிற அபிமாநஸ்ரேஷ்டனை செல்வநம்பியைப்போலே, அடியேனும் உனக்கே வழிவழியாட்செய்கிறவனாகையாலே, விலக்ஷணோபாயமென்றுகொண்டு, எனக்குரி யேனல்லேன் ஸர்வஸ்வாமியேயென்று, அநேகந்திருநாமங்களையுஞ் சொல்லிப்பாடி, எல்லாவிதத்தாலும் பரிபூர்த்தனானவனே, ஸௌந்தர்யாதிகுணயுக்தனான வுன்னை மங்களாஸாஸநம்பண்ணுகிறேன் என்பதாம்.

அ.—பதினோராம்பாட்டு. (அல்வழக்கித்யாதி) * அண்டக்குலத்திலே ஆஹூதராய், "நெய்யிடை" என்கிற பாட்டிலே ஸங்கதரான ஐச்வர்யார்த்திகள் பாசுரத்தாலே திருப்பல்லாண்டு பாடுகிறார்.

வ்யா.—(அலவழக்கொன்றுமில்லா) வழக்கல்லாதவை அநேகமிறே; தேஹத்தில் ஆத்மபுத்திபண்ணுகை வழக்கல்ல; * ப்ரக்ர்தேஃபரமானஆத்மவஸ்துவை ஸ்வதந்த்ரமென்று அநுஸந்திக்கை வழக்கல்ல; தேவதாந்தரங்களில் பரத்வபுத்தி பண்ணுகை வழக்கலல; பகவத்பஜநத்துக்கு பலம்ப்ரயோஜநாந்தரமென்றிருக்கை வழக்கலல; அநந்ய ப்ரயோஜநமானாலும்உபாயாந்தர ஸாத்யமென்றிருக்கை வழக்கல்ல; பகவதநுபவத்தை "மமேதம்" என்றிருக்கை வழக்கல்ல; இனி, "வழக்காவது-சேஷிக்கு மங்களாசாஸநம் பண்ணுகை" என்றிறே யிவரிருப்பது. (அணிகோட்டியர்கோன்) இவை யொன்று மின்றிக்கே, "அத்தலைக்கு மங்களாசாஸநம் பண்ணுமதொன்றுமே வழக்கு" என்றுய்த்து அவ்வூரிலுள்ளா ரிருப்பது. இதுக்கடியிவர் என்று தங்களுக்கு நிர்வாஹகராக வாய்த்து நினைத்திருப்பது. "அணி" என்று - ஆபரணமாய், ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான வூரென்கை.

(அபிமாநதுங்கன்) அபிமாநம் சேஷத்வ விரோதியாயிருக்க, அத்தால் மிக்கிருப்பனென்பானென்னென்னனில்; கர்மத்தால்வந்த துர்மாநமாய்த்து த்யாஜ்யம்; "தாஸோஹம்" என்கிற வைஷ்ணவாபிமாநம் உபாதேயமாகையாலே அத்தால் பூர்ணராயிருப்பனென்கிறது. அதாகிறது உகந்தருளின நிலங்களிலுண்டான குறைவு நிறைவுகளும்,ஸ்ரீவைஷ்ணவர்களுடைய தேஹயாத்ரையில் குறைவு நிறைவுகளும் தம்மதமாயிருக்கை. "செல்வன்" என்று-ஸ்வரூப ப்ராப்தமான ஐச்வர்யத்தால் குறைவற்றவனென்கை. அதாகிறது - ஜ்ஞாந பக்தி வைராக்யங்களால் குறைவற்றவனென்கையும், "லக்ஷ்மணோலக்ஷ்மி ஸம்பந்ந:" என்கிறபடியே "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" என்றிருக்கையும். (போல) "உபமாநமஶேஷாணாம் ஸாதூநாம்" என்கிறபடியே ஸாத்விகர்க்கு உபமாநபூமியாயிருக்குமவர்.

இவரை த்ருஷ்டாந்தமாக்கிக்கொண்டு, "பழவடியேன்" என்று முன்பு ஐச்வர்யார்த்தியாய் இன்று ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவன் சொல்லுகை அநுபபந்நமன்றோ வென்னில்; கர்மத்தால் வந்த அஹங்காரம்போனால் தாஸ்யம் ஸர்வாத்மாக்களுக்கும் ஸத்தாப்ரயுக்தமாகையாலே சொல்லுகிறார்கள். அதவா, நைஸர்க்கிகமான ஜ்ஞாநமுடையார்க்கும் இன்றுமுதல்...

[illegible] யாகிலவையாதே விஷயீகரிக்கும் ஈச்வராபிப்ராயத்தாலே சொல்ல [illegible] (திருமாலே) "இவ்வாத்மவஸ்து ஒரு மிதுநசேஷம்" என்று சேஷத்வ ப்ரதி ஸம்பந்தியைச் சொல்லுகிறார்கள். இத்தால்-மாதாபித்ர்சேஷத்வமும் தேவதாந்தர சேஷத்வமும கர்மோபாதிகமென்கை. அதவா, தேவரீருக்குப் பிராட்டி நிரூபகபூதையா யிருக்கிறப்போலே,எங்களுக்கும் தாஸ்யம் நிரூபக மென்கிறார்கள் என்றுமாம.

(நாமும்) ப்ரயோஜநாந்தர பரதையாலே அநாதிகாலம அந்யார்ஹனாய்ப்போந்த நாமும். சேஷிபக்கலிலே ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷிக்கையாவது-பதிவ்ரதை பர்த்தாவின் பக்கலிலே வ்யபிசாரத்தை அபேக்ஷித்தவோபாதியிறே. (உனக்குப் பழவடியேன்) உனக்கு சேஷித்வம் அநாதியான வோபாதி எனக்கும் சேஷத்வம் அநாதியென்கை. (உனக்கு)ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷித்துத் திருவடிகளிலே கிட்டினதுவே ஹேதுவாக அநந்யப்ரயோஜநனுக்கவல்ல வுனக்கு.

இந்த ஸ்வரூபஜ்ஞாநம் எவ்வழியாலே பிறந்ததென்னில்; ஸகல வேதாந்ததாத்பர்யமான மந்த்ர ரஹஸ்யத்தாலே பிறந்ததென்கிறார் மேல். (நல்வகையால்நமோநாராயணா வென்று) நாராயணனுக்கேயுரியேன், எனக்குரியேனல்லே னென்கை. (நல்வகையால்) முன்பு அர்த்தவிதுரமாக ஜப ஹோமாதி முகத்தாலே பிறந்த அநவயமடையத்தீவதை யென்றிருக்கிறார்கள்; இதுதான் ஸர்வார்த்த ஸாதகமிறே, "நமோ நாராயணாயேதி மந்த்ரஸ் ஸர்வார்த்தஸாதக:" - நமோநாராயணா யேதிமந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக:" என்னக்கடவதிறே. (நாமம் பலபரவி) இவர் இவர்களை யழைக்கிறபோது, "அடிதொழு தாயிரநாமம்சொல்லி" என்றாரிறே;அத்தையிறேயிவர்களும சொல்லுகிறது. (பரவி) அக்ரமமாகச்சொல்லி. ஸாதநமானபோதிறே க்ரமாபேக்ஷை யுள்ளது- முன்பு "மமேதம்" என்றிருந்தவர்களுக்குமங்களாசாஸநயோக்யராம்படி புகுர நிற்கைக்கு இசைவே வேண்டுவது.

(பல்வகையாலும் பவித்திரனே) ப்ரயோஜநாந்தர பரனான அசுத்தியைப்போக்கி, அதுக்கடியான அஹங்காரமமகாரங்களாகிற அசுத்தியைப் போக்கி,சேஷத்வாந் தன்னிலும. மாதா பித்ர் சேஷத்வமென்ன இவ்வோ அசுத்தியைப் போக்கிப் புகுர நிறுத்தினவனே. ஸ்வரூபரூப குணவிபூதிகளைப் பார்த்தாலும் பாபஹரா னென்னவுமாம். (உன்னைப் பல்லாண்டு கூறுவனே) ஸௌந்தர்யாதிகுணயுக்தனான வுன்னை மங்களாசாஸநம் பண்ணுகிறேன். ஏகவசநத்தாலே - கீழ்ச்சொன்ன புருஷார்த்திகள்மூவர் முகத்தாலும் தாமே திருப்பல்லாண்டு பாடுகிறாரென்னுமிடம் தோற்றுகிறது. ஐச்வர்யார்த்தி ஸங்கதனாகிற வளவிலும் ஏகவசநமாகையாலே இங்கும் அதுவேயாகிற தென்னவுமாம். (கக)

## அரும்பதம்.

"அல்வழக்கு" இத்யாதி—"பழவடியேன்" என்கையாலே, இப்பாட்டு அநந்யப்ரயோஜனர் பாசுரமாயிருக்க, இன்று திருந்தின ஐஸ்வர்யார்த்தி பாசுரமெங்ஙனேயென்கிற சங்கையைப் பரிஹரிக்கைக்காக,ஸங்கதிமுகேந அவதாரிகை அண்டக்

குரத்திலே இத்யாதி—ஆழ்வாநக்ரமத்தால் பல்லாண்டுபோதுகை மற்றை இவையிடத்
திலும் காண்கையாலே, இப்பாட்டு ஐஸ்வர்யார்த்தி பாசுரமென்னத்தட்டு—
"பழவடியேன்" என்கிறதும் இதுக்கநுகூலமாகச்சொல்லவேணுமென்றுகருத்து—
"ஒன்றுமில்லா" என்கைக்கு. அநேகமுண்டோவென்ன, வழக்கல்லாதவை இத்
யாதி—இத்தை உபபாதிக்கிறார் தேஹத்தில் என்று தொடங்கி ஆறுவாக்யத்தாலே—
வழக்காவது - ந்யாயம்—இவையெல்லாம் அல்லாதவழக்கானால், வழக்கொன்றுண்
டாகவேணுமே யிவருக்கென்ன; "கோன்" என்ற பதத்துக்கு விஶேஷணமாக்கி
யருளிச்செய்கிறார் இனி இத்யாதி—இவர் என்றது-செல்வநம்பியை—கோட்டியர் -
திருக்கோட்டியூரில் ஸ்ரீவைஷ்ணவர்கள்—கோன் பததாத்பர்யம் இவைஇத்யாதி—
இவர்-செல்வநம்பி—இன்னாருக்கணியென்று சொல்லவேணுமே, அத்தையருளிச்
செய்கிறார் அணி இத்யாதி—துங்கள்-ஶ்ரேஷ்டன்—அபிமாநஸாபேக்ஷம்ஸாமாந்யஸாபேக்ஷ
தமாகையாலே, விஶேஷபர்யவஸாநம் பண்ணுவதாகநினைத்து, தத்விஷயஶங்கை
யை அநுவதித்து, பரிஹரிக்கிறார் அபிமாநம் இத்யாதிவாக்யத்ரயத்தாலே—வைஷ்
ணவாபிமாநந்தான் வைஷ்ணவாபிமாநமென்றும்அவைஷ்ணவவிஷயாபிமாநமென்
றும் த்விவிதமாக்கி விவரிக்கிறார் அதாகிறதித்யாதி—"ஸுஹ்ருதஸ்ஸம்கவிஷ்யாமி"
என்றது செல்வநம்பி உக்தியாக்கி யருளிச்செய்கிறாரென்று கண்டுகொள்வது—
இவர் த்ருஷ்டாந்திகரிக்கைக்குத்தகும்படி யிருப்பரோவென்ன; ஸ்ரீப்ரஹ்லாதாழ்
வானைப்போலே ஸர்வோபமாநபூமியாயிருப்பரென்கிறார் "உவாசநம்" இத்யாதி-
இப்பாட்டுக்கு அவதாரிகையிலே ஐஸ்வர்யார்த்திகள் பாசுரத்தாலே யென்றுநின்
றீர்; இப்படிப்பட்ட செல்வநம்பியை த்ருஷ்டாந்தமாகச்சொல்லுகிறதும், மேலே
"பழவடியேன்"என்கிறதும் சேராதே யென்கிறஶங்கையை அநுவதித்து,ஸத்தாநு
பந்தமாகவும், பகவதபிப்ராயத்தாலே யென்றும், பரிஹரிக்கிறார் இவரைஇத்யாதி
வாக்யத்ரயத்தாலே—கர்மத்தால் இத்யாதிக்குக்கருத்து ப்ரதிபந்தகமான அஹங்கா
ரம்போலன்றிக்கே அநாதிஸித்தமான அடிமை ப்ரகாஶிக்கையாலே சொல்லுகிறார்களெ
ன்று—நைஸர்க்கிகமான-ஸ்வாபாவிகமான—"பழவடியேன்"என்றத்தைக்கடாக்ஷித்
து, "திருமாலே" என்றதுக்கும் பாவம் இவ்வாத்மவஸ்து இத்யாதி—பலிதம் இத்
தால் இத்யாதி—இப்பதப்ரயோகம் த்ருஷ்டாந்தார்த்தமுமாயென்கிறார் அதவா இத்
யாதி—"நானும்" என்றதுக்குஹார்த்தபாவம் ப்ரயோஜநேத்யாதி—அந்யார்ஹனெ
ன்றது-எனக்குறுப்பாய் என்றபடி—ஈஶ்வரன் பக்கலிலேயன்றோ ப்ரயோஜநத்தை
அபேக்ஷித்தது,அது அந்யார்ஹனாகையாமோவென்ன; ஶேஷிபக்கலிலே இத்யாதி—
"உனக்குப்பழவடியேன்" என்றதுக்கு இரண்டுதாத்பர்யம் ஸ்வரூபப்ரயுக்த தாஸ்ய
மாதல் குண க்ருததாஸ்யமாதல் உடையவனென்று-முந்தினது உனக்கித்யாதி—இர
ண்டாவது ப்ரயோஜநாந்தரேத்யாதி—மேலுக்கவதாரிகை இந்த ஸ்வரூபேத்யாதி—
"நாராயணா" என்றதுக்கர்த்தம் நாராயணனுக்கேயென்றது—நமஶ்ஶப்தார்த்தம் எ
னக்குரியேனல்லேனென்றது—"நல்வகை"என்றதுக்குத்தாத்பர்யம் முன்பு இத்யா
தி—அர்த்தவிதுரமாக-அர்த்தஜ்ஞாநரஹிதமாக—அந்வயம்-ஸம்பந்தம்—தீவகை -
துஷ்ப்ரகாரம்—மந்த்ரம் மோக்ஷஸாதநமன்றோ, ப்ரயோஜநாந்தரத்துக்கும்ஸாதந
மோவென்ன; இதுதான் இத்யாதி—இதுக்கு ப்ரமாணம் "நஶ" இத்யாதி—இதில்
ஐஶ்வர்யார்த்திகளென்கிறதை ஸூசிக்கிறார் இவரிவர்களை இத்யாதிவாக்யத்வயத்
தாலே—வ்யாவர்த்யம் ஸாதநம் இத்யாதி—க்ரமாபேக்ஷை வேண்டாமையாலே பலி
தத்தை யருளிச்செய்கிறார்முன்பு இத்யாதி—இசைவேவேண்டுவது வேறொருநியதி
வேண்டாவென்று கருத்து—"நாமம்பலபரவி" என்றத்தையும், "நமோநாராயணா"
என்றத்தையும், "உனக்குப்பழவடியேன்" என்றத்தையும் கடாக்ஷித்து, "பல்வகை
யாலும்பவித்திரனே" என்றதுக்குத் தாத்பர்யம் ப்ரயோஜநாந்தரபரனை இத்யா

தி—பல்வகைக்கு அர்த்தாந்தரம் ஸ்வரூபேத்யாதி—"பவித்திரனே" என்றுஸம்போதிருக்கச்செய்தேயும், "உன்னை" என்று விஶேஷித்தநுக்கு ப்ரபந்தப்ரவர்த்தகம் ஸௌந்தர்யாதிவைஶிஷ்ட்யம் தோன்ற அர்த்தமருளிச்செய்கிறார் ஏகவசநத்தால் இத்யாதி—ஆழ்வார்தம்மிடத்தில் ஐஶ்வர்யார்த்தித்வத்தை ஆரோபித்து, தாமே மங்களாஶாஸநம் பண்ணுகிறாராகையாலே, இவ்வேகவசநம் ஆழ்வாரையே சொல்லுகிறது—இத்தால் கீழ் இருவரும் மங்களாஶாஸநம் பண்ணுகிற பாட்டுக்களில் அநந்யப்ரயோஜநத்வம்தமக்கிருக்கையாலே தத்பலத்வமாத்ரத்தையும், கைவல்யார்த்தித்வத்தையும், தத்பலத்வத்தையும் ஆரோபித்துக்கொண்டு, தாமேமங்களாஶாஸநம் பண்ணுகிறாரென்று கொள்ளவேண்டும். இவ்வுத்தமபுருஷைகவசந பலவசநங்களாலேயென்று ப்ரதமத்துக்குக்கருத்து.

---

## பன்னிரண்டாம்பாட்டு.

பல்லாண்டென்று பவித்திரனைப் பரமேட்டியைச் சார்ங்கமென்னும்
வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர் விட்டுசித்தன் விரும்பியசொல்
நல்லாண்டென்று நவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று
பல்லாண்டும் பரமாத்மனைச்சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே.

ப-ரை.—பவித்திரனை - பரிசுத்தனானவனாய், பரமேட்டியை - பரமபதத்தைக் கலவிருக்கையாகவுடையனாய், சார்ங்கமென்னும் - ஸ்ரீசார்ங்கமென்கிற, வில் - வில்லை, ஆண்டான்றன்னை - ஆளுமவன்விஷயமாக, வில்லிபுத்தூர் - ஸ்ரீவில்லிபுத்தூரி லவதரித்த, விட்டுசித்தன் - பெரியாழ்வார், பல்லாண்டென்று—, விரும்பிய - ப்ரேமத்தாலேயருளிச்செய்த, சொல் - பாட்டுக்களை, நல்லாண்டென்று - சொல்லுகைக்கு ஏகாந்தகாலமென்று நினைத்து, நவின்றுரைப்பார் - இடைவிடாமல் சொல்லுமவர்கள், நமோ நாராயணாயவென்று—, பரமாத்மனை - சேதநாசேதநங்களை சரீரமாகவுடையவனை, சூழ்ந்திருந்து - சூழவிருந்து, பல்லாண்டும் - காலமுள்ளதனையும், பல்லாண்டேத்துவர் - மங்களாசாஸநம் பண்ணப்பெறுவர்கள்.

தா-ம்.—பரமபாவநனை, பரமபதத்தையுடையவனை, ஸ்ரீஶார்ங்கமென்கிற வில்லைத்தன்னதீநமாகக்கொண்டவனை, புதுவையில் அவதரித்தபெரியாழ்வார் மங்களமுண்டாகவேணுமென்று ப்ரேமத்தாலேசொன்ன இப்பாசுரங்களைச்சொல்லுகைக்கு ஏகாந்தமானகாலமிதுவென்று, இடைவிடாமற் சொல்லுமவர்கள், நமோ நாராயணாயவென்று, ஸர்வகாலமும் சேதநாசேதநங்களை ஶரீரமாகவுடையவனைச் சுற்றிநின்று, மங்களம்பாடக்கடவர்கள் என்பதாம்.

அ-கை.—நிகமம் (பல்லாண்டென்றித்யாதி) இப்ப்ரபந்தத்தைஅதிகரித்தார்க்கு பலஞ் சொல்லுகிறதாய், ப்ரேமபரவசராய்க்கொண்டு மங்களாசாஸநம்பண்ணுகிறார். அநந்யப்ரயோஜநர்க்கும் தம்மோபாதி பகவத்ப்ரத்யாஸத்தி யுண்டாகையாலே அவர்களையழைத்தார்; ஐச்வர்ய கைவல்யங்களைப்பற்றி ஆச்ரயித்தவர்களும் பகவத் ப்ரபாவத்தாலே மங்களாசாஸநத்துக் காளாவரென்று அவர்களையழைத்தார்; அவ்வளவு மில்லாத ஸம்

ஸாரிகளும் தம்முடைய பாசுரத்திலே யிழியவே யாவதாத்மபாவி மங்களா சாஸநார்ஹ ராவர்களென்று இப்ப்ரபந்தத்தின் வைபவத்தை யருளிச் செய்கிறார்.

வ்யா.—(பவித்திரனை) ஒருபாதியாலன்றிக்கே ஸ்வஸ்ரூபத்தனை வனை. "ஶாஶ்வதம்ஶிவம் -ஶாஶ்வதம்ஶிவம்" என்னக்கடவதிறே. இத்தால்- அசுசி பதார்த்த ஸம்யோகத்தாலே தத்கததோஷ ரஸம் ஸ்ப்ர்ஷ்டனாகையும், ஸ்வஸம்பந்தத்தாலே அசுத்தன் சுத்தனாகையுமாகிற பரமபாவநத்வம் சொல்லுகிறது. அதாகிறது-சேதநாசேதநங்களில் வ்யாபித்தாலும் தத்கததோஷம் ஸ்பர்சியாதொழிகையும், நிர்ஹேதுகமாக நித்யஸம்ஸாரியை நித்ய ஸூரிகளோடே ஒரு கோவை யாக்குகையும். (பரமேட்டியை) பரமே ஸ்தாநேஸ்திதனானவனை.

(சார்ங்கமென்னு மித்யாதி) இது மஹிஷீபூஷணாயுத பரிஜநங்களுக்கு முபலக்ஷணம். அங்குள்ளாரையிட்டுத் தன்னை நிரூபிக்கவேண்டும் படியிறே அவர்களுக்குத் தன்னோடுண்டான ப்ரத்யாஸத்தி. (சார்ங்கமென்னும் வில்லாண்டான் றன்னை) சார்ங்கமென்னும் வில்லொன்றேயாய்த்து அதுக்கு ப்ரஸித்தி; மத்தகஜத்தை யாளுமவனென்னுமாப்போலே, அத்தை யாளுமவ னென்றாய்த்து இவனுக்கேற்றம். "ஆஶீவஷஶிவாகாணவஷ்டூ ஹஸ நஃ - ஆஸிகந்தமிவாகாண மவஷ்டப்யமஹாந்தநுஃ" என்னக்கடவதிறே. இத்தால்-"மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா" என்கிற விடத்திலே பவித்ரதையை நினைந்து, "பரமேட்டியை" இத்யாதியாலே இரண்டாம் பாட்டிற்சொன்ன நித்யவிபூதியோகத்தை நினைக்கிறது.

(வில்லிபுத்தூர் விட்டுசித்தன்-பல்லாண்டென்று-விரும்பியசொல்) இப்போது, பகவத்ப்ராப்திகாமர், ப்ரயோஜநாந்தரபரர் என்றுஅடைவடைவே வந்து நின்றாரில்லையிறே; அவ்வவருடைய பாசுரங்களாலே தாமே யருளிச்செய்தாரென்னுமிடம் தோற்றுகிறதிறே, தம்முடைய வார்த்தையாகத் தாம் தலைக்கட்டுகையாலே. அவர்கள் பாசுரமாக அங்குச்சொல்லிற்று;ப்ரயோஜநாந்தரபரர்க்கும் பகவத்ப்ரபாவத்தாலே மங்களாஶாஸநம் பண்ணுகைக்கு யோக்யதையுண்டென்னு மிவ்வர்த்தத்தினுடைய ஸ்தைர்யத்துக்காகவும் மங்களாசாஸநத்தில் தமக்குண்டான ஆதராதிசயம்தோற்றுகைக்காகவும். (வில்லிபுத்தூர் விட்டுசித்தன்) அவ்வூரிற் பிறப்பாலே யாய்த்து பகவத் ப்ரத்யாஸத்தி; பகவத் ப்ரத்யாஸத்தியாலேயாய்த்து மங்களாசாஸந யோக்யமான ப்ரேமாதிசயம். "விட்டுசித்தன்" என்கிற திருநாமமுண்டாய்த்து - ஆழ்வார் விடிலும் தான்விடமாட்டாதே தன்பேராக விவர்திருவுள்ளத்தே நித்யவாஸம் பண்ணினபடியாலே. "விட்டுசித்தன்மனத்தேகோயில் கொண்ட கோவலன்" என்னக்கடவதிறே.

(நல்லாண்டென்று) இப்பாசுரஞ் சொல்லுகைக்கு ஏகாந்தமான காலத்தைக் கொண்டாடி. "அத்யமேஸபலம்ஜந்ம - அத்யமேஸபலம்ஜந்ம" என்னக்கடவதிறே. கண்டதடைய "மமேதம்" என்றுபோந்த அநாதிகாலம்போலன்றிக்கே, பகவத்ஸம்ர்த்திக்கு மங்களாசாஸநம் பண்ணக்கடவ

வந்ததொருகாலம் சேதநனுக்கு ஸ்வாதந்த்ர்யமிறே. (நவின்றுரைப்பார்) நவிலுகை - பயிலுகை. இடைவிடாதே யுரைக்கை.

(நமோநாராயணாயவென்று) அநாதிகாலம் "மமேதம்" என்றதைத் தவிருகையும், "நவேதம்" என்கையும். இத்தால் - மங்களாசாஸந யோக்யதை சொல்லுகிறது. (பல்லாண்டும்) காலமெல்லாம். யாவதாத்ம பாவி யென்கிறது. காலக்ருத பரிணாமமில்லாத தேசத்தில் ஆண்டையிட்டுச் சொல்லுகிறது-அந்த பரிணாமமுள்ள தேசத்தில் வர்த்திக்கிறவராகையாலே. (பரமாத்மனை) தனக்குமேலின்றிக்கே, தன்னையொழிந்தாரடங்க ஸ்வாதீநமாம்படி யிருக்கிறவனை. இத்தால் - அமங்களங்களுக்கு அவகாசமின்றிக்கே யிருக்கையாலே, ஒருவனுடைய மங்களாசாஸநத்தால் ஓரேற்றமுண்டாக வேண்டாதே யிருக்குமவனை.

(சூழ்ந்திருந்தேத்துவர்) "நமः புரஸ்தாதத ப்ருஷ்டதஸ்தே நமோஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ - நமःபுரஸ்தாதத ப்ருஷ்ட தஸ்தேநமோஸ்துதே" என்கிறபடியே-முன்பேநில்லா முறுவலை யநுபவித்து அதிலே யீடுபடும்; பின்பே நில்லா பின்பும் பிறகுவாளியுமானவழகை யநுபவித்து அதிலே யீடுபடும்:இப்படி சுழியாறுபடா நிற்கச்செய்தே, கால்வாங்க வொண்ணாத வடிவழகு, அதிசங்கையை விளைத்து மங்களாசாஸநத்திலே மூட்டுமென்கை.

"பவித்திரனைப் பரமேட்டியைச் சார்ங்கமென்னும் வில்லாண்டான் றன்னை வில்லிபுத்தூர் விட்டுசித்தன் - பல்லாண்டென்று - விரும்பியசொல் நல்லாண்டென்று நவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று - பரமாத்மனைச்சூழ்ந்திருந்து-பல்லாண்டும்-பல்லாண்டு-ஏத்துவர்" என்றந்வயம். ()

## அரும்பதம்.

பல்லாண்டென்றித்யாதி—இவ்வாழ்வார் தாம் மங்களாஶாஸந மொழியச் செல்லாதவராகையாலே, பலகதநமுகேந மங்களாஶாஸநம்பண்ணுகிறாரென்றுஅவதாரிகை இப்ப்ரபந்தத்தை இத்யாதி—சொல்லுகிறதாய் என்றது சொல்லுகிறாராய் என்றபடி—"சூழ்ந்திருந்தேத்துவர்" என்கையாலே மங்களாஶாஸநம் பண்ணுகிறாரென்கிறார்—அதாவது-"ஏத்துவர்" என்றது ஏத்தக்கடவர்கள் என்றாய் பகவத்விஷயத்தில் மங்களாஶாஸநபரரை ப்ரார்த்திக்கையாலே,இப்பாட்டிலும் மங்களாஶாஸநம் பண்ணுகிறாரென்றபடி—அநந்யப்ரயோஜநரையும், ப்ரயோஜநாந்தரபரரையும் அழைத்தவோபாதி ஸம்ஸாரிகளையும் அழைத்துத்திருத்தாதே தலைக்கட்டக்கூடுமோ வென்ன அருளிச்செய்கிறார் அநந்யேத்யாதி—அவ்வளவும் - அம்மாத்ரமும்—அதாவது ப்ரயோஜநாந்தரத்துக்காகவாகிலும் பகவத்ப்ரஸாத விஷயீக்ருதராகை—இவ்விடத்தில், முதற்சொன்னமூவரும் நிக்ரஹத்துக்கிலக்கு: மற்றையிருவரும் அநுக்ரஹத்துக்கிலக்கு என்கிறவசநபூஷணவாக்யம் அநுஸந்தேயம்—ஆக ஸம்ஸாரிகளும் இப்ரபந்தத்தில் இழிந்தார்களாகில் திருந்தக்கடவர்களென்றுகருத்து—"பவித்திரனை" என்று இத்தை நிரூபகமாகச் சொல்லுகையாலே ஸ்வாபாவிகபவித்ரனென்று அருளிச்செய்கிறார் ஒருபாதியால் இத்யாதி—இதுக்கு ப்ரமாணம் "ஶாஶ்வதம்" இத்யாதி—"யோவஶ்யவதஶோரஸः" என்றும், "யத்ஸௌநிஸ்ஸ்ருதஸரிச்ச்ரேஷ்டொதக நதீயுதநஶீர்யதிமஹெதநஶிவஶ்ஶிவொஹம:" என்றும்

சொல்லுகையாலே, பாவநத்வம் ஸ்ரீவத்ஸமென்று திருவுள்ளம்—ஸகஜ [illegible] "ஸுவ்ருத்தம்" என்று விஸேஷ்யநித்யத்வம் சொல்லுகையாலே ஸாஸ்வதத்வம் ஸ்ரீவத்ஸரூபவிஸேஷணத்திலே யென்றுகருத்து—ஸ்வதஸ்ஸுத்தன் என்றத்தால் பலிதம் இத்தால் இத்யாதி—விவரணம் அதாகிறதித்யாதி—கோர்வை-சேர்த்தி—மற்றொருவனையும் ஆளவில்லையோ; "சார்ங்கமென்னும் வில்லாண்டான்" என்கிறதென்னென்ன, இது மஹிஷீத்யாதி—ஆனால் இவர்களையிட்டு அறியும்படி அப்ரஸித்தனோ வென்ன; அங்குள்ளாரை இத்யாதி—ஆனால் "சார்ங்கவில்லாண்டான்" என்றால் போதாதோ, "என்னும்" என்பானென்னென்ன; சார்ங்கமென்னும் இத்யாதி—வில்லுடையவன் என்னாதே ஆண்டானென்பானென்னென்ன, மத்தகஜத்தை இத்யாதி—இப்படிச் சொல்லுகைக்குப் பெருமையென்னென்ன; ப்ரமாணம் "ஸ்ரீவஸ்ஸ" இத்யாதி—உபக்ரமோபஸம்ஹாரங்களொத்திருக்கவேண்டுகையாலே அருளிச்செய்கிறார் இத்தால் இத்யாதிவாக்யத்வயத்தாலே—இத்தால் என்றது அஸுசிபதார்த்த ஸம்யோகத்தால் தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாகையும் நிர்ஹேதுகமாகஸம்ஸாரியை நித்யஸூரியாக்குகையும் ஆகிறஇத்தால்என்றபடி—"மல்லாண்டதிண்டோள்" என்கிற இத்தை ஸர்வவிரோதிநிவ்ருத்திக்கு முபலக்ஷணமாக்கி இத்தாலேநித்யஸம்ஸாரியை நித்யஸூரியாக்குகிற பவித்ரதையைச் சொல்லுகிறதென்றும், "மணிவண்ணு" என்கிற இத்தை மணிபோன்ற ஸ்வபாவமென்றாக்கி மணிக்குஅஸுசி பதார்த்தஸ்பர்ஸத்தாலே தோஷம் வாராமையாலே தாத்ருஸஸ்வபாவத்தாலே வந்தபவித்ரதையைச்சொல்லுகிறதென்றும் விவக்ஷித்து உபக்ரமோபஸம்ஹாரைகரூப்யம் சொல்லுகிறதென்று கண்டுகொள்வது "மாவாய்பிளந்து மல்லரைக்கொன்ற மதுசூதன்" இத்யாதி பதப்ரயோகங்களுக்கெல்லாம் ஸ்வவிரோதிநிவ்ருத்திபரமாக வ்யாக்யாநங்களில் உண்டாகையாலே, இங்கும் "மல்லாண்ட" என்றதுக்கு இப்படி விவக்ஷிதமென்னக் குறையில்லை—"மணி" என்று கருடப்பச்சைக்கும் உபலக்ஷணமாய், அது ஸ்வதோநிர்த்துஷ்டமுமாய், ஸ்வஸம்பந்தத்தாலேஅந்யத்ரஸர்ப்பாதிவிஷஹரமுமாயிருக்கையாலே,உபயவிதபவித்ரதையும்விவக்ஷிதமாக யோஜிக்கவுமாம்—இவ்வர்த்தம்ப்ரதமகாதா வ்யாக்யாநத்தில் அருளிச்செய்யாதிருந்தாலும், இங்கு இப்படியருளிச்செய்கையாலே அங்கு விவக்ஷிதமென்று கொள்ளவேணும்; இப்படிக்கொள்ளுகைக்கு ஸூசகம் ப்ரதமாவதாரிகையிலே ஸௌந்தர்யாதியென்று ஆதிஸப்தப்ரயோகம்பண்ணியிருக்கிறது,இதிலே இந்த பவித்ரதையும் அந்தர்ப்பூதமென்றுகண்டு கொள்வது—இடத்தில் என்ற அநந்தரம் சொன்ன என்று ஸேஷம்—இரண்டாம் பாட்டின் அவதாரிகையிலே உபயவிபூதியோகத்தைச் சொல்லுகிறதென்றிருந்ததேயாகிலும் இங்கே நித்யவிபூதியோகத்தைச் சொன்னது ஸந்தேபஞ்சாஸந்யாயத்தாலேயென்று கொள்ளவேணும்—அந்வயித்து ப்ரதீகம் வில்லிபுத்தூர்இத்யாதி—முதலிரண்டுபாட்டாலே தாம் மங்களாஸாஸநம்பண்ணுகிறதாகவும், மேல் ஒன்பதுபாட்டாலும் தாம் சிலரையழைக்கிறதாகவும் அவர்கள் ஸங்கதராகிறதாகவும்அவர்களோடே மங்களாஸாஸநம் பண்ணுகிறதாகவுமாய்ச் சொல்லாநின்றதே, இவர் சொல்லாக நிகமிக்கக்கூடுமோவென்ன, இப்போது இத்யாதி—இப்போது என்றது ஆனைமேலே திருவீதி வலம்வருகிறபோது என்றபடி—அவ்வைவந்து நின்றாரில்லையிறே யென்றது உக்திப்ரத்யுக்தி முகத்தாலேவந்து இவர் முன்னே நின்றாரில்லை யென்றபடி—இதுக்கு நியாமகம் அவ்வவர் இத்யாதி—ஆனால் அப்படிக்கீழ்ப்படி அழைக்கிறதாகவும் வந்ததாகவும்சொன்னது எத்தாலேயென்ன, அவர்கள் பாகரம் இத்யாதி—தோற்றுகைக்காகவும் என்றது நமக்கெல்லார்க்கும் தோற்றுகைக்காகவு மென்றபடி—"வில்லிபுத்தூர் விட்டு சித்தன் விரும்பிய" என்று ஸமபிவ்யாஹார தாத்பர்யம் அவ்வூர் இத்யாதி வாக்யத்வயமும்—விஷ்ணுசித்தேயஸ்யஸ: என்று விக்ரஹ

